# அறிவியல் நோக்கில் மொழி

முனைவர் செ. சண்முகம்



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
இரண்டாம் முதன்மைச் சாலை
மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்
தரமணி, சென்னை - 600 113.

டாக்டர் அரங்கநாயகம் அறக்கட்டளைச் சொற்பொழிவு
(அறக்கட்டளை நிறுவியவர் பலர்)

வரிசை எண் : 10

---

## BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the Book | : | ariviyal nōkkil moli |
| Author | : | Dr. C. Shunmugom<br>Prof. Linguistics (Retd.)<br>92, IOB Colony<br>Maruthamalai Road<br>Coimbatore-641 046 |
| General Editor | : | Dr. S. Jean Lawrence<br>Professor<br>Faculty of Tamil Language and Linguistics<br>International Institute of Tamil Studies<br>Tharamani, Chennai-600 113 |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus,<br>Chennai-600 113<br>Ph: 22542992 |
| Publication No. | : | 617 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Year of Publication | : | 2009 |
| Paper Used | : | 18.6 Kg TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type used | : | 10 Point |
| No. of Pages | : | viii+136 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs.45/- (Rupees Forty Five Only) |
| Printed by | : | United Bind Graphics<br>189-D, Royapettah High Road<br>Mylapore, Chennai - 600 004. |
| Subject | : | Linguistics |


---

# பொருளடக்கம்

பேரா. முனைவர் கரு. அழ. குணசேகரன்
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை-600 113

## அணிந்துரை

இலக்கண வளத்தையும், இலக்கிய வளத்தையும் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே பெற்று, தனக்கென்ற தனிநிலைப்பாட்டை உருவாக்கிக் கொண்டு இன்றும் வாழ்ந்து வருகின்ற மொழி தமிழ். மொழியின் சிறப்பியல்புகளையும், இலக்கியத்தின் சிறப்பியல்புகளையும் விளக்குவதற்காகவும், கற்பிப்பதற்காகவும் இலக்கண மரபு தமிழில் தோன்றி நெடியதொரு வரலாற்றைக் கொண்டு விளங்குகிறது. ஆயினும் மொழியியலின் வரவு தமிழின், தமிழ் இலக்கியத்தின் ஆய்வுக் களங்களை விரிவுபடுத்தி, தமிழ்மொழியின் வரலாற்று ஆய்வுக்கும், அமைப்பாய்வுக்கும், ஒப்பாய்வுக்கும், கிளைமொழி ஆய்வுக்கும், தமிழ் வழக்குகள் குறித்த ஆய்வுக்கும், இலக்கணஆய்வுக்கும், பொருண்மை ஆய்வுக்கும் புதிய பரிமாணங்களை ஏற்படுத்தியதை இன்றைய தமிழ்மொழி சார்ந்த ஆய்வு வரலாறு நமக்குப் புலப்படுத்தும்.

மரபு வழியிலான மொழி, இலக்கிய ஆய்வுகள், இலக்கண இலக்கிய விளக்க மரபுகள் அவைகளுக்கே உரித்தான கருத்து நிலைக் கோட்பாடுகளைக் கொண்டு எழுந்தன என்றாலும், அவை தெரிநிலையாகப் புலப்படுத்தப்படவில்லை. ஆனால் மொழியியல் வழியிலான கோட்பாடுகளும், ஆய்வு நெறிமுறைகளும் அறிவியல் சார்ந்தவையாகவும், அனைவருக்கும் புலப்படும் வகையிலான வழிமுறைகளை வெளியிடுவனவாகவும் அமைகின்றன. கருதுகோள்களை மெய்ப்பிப்பதற்காகச் சோதனை முறைகளை வகுத்து விளக்குகின்ற தன்மையைக் கொண்டதே அறிவியல் என வரையறுத்தால், மொழியின் கூறுகளையும், அவைகளின் பண்புகளையும் குறித்த கருதுகோள்களைச் சோதனை வாயிலாக நிலைநாட்டி விளக்க முற்படுவதால் மொழியியலை ஓர் அறிவியல் சார்ந்த துறை எனலாம்.

*அறிவியல் நோக்கில் மொழி* என்ற இந்நூலில் பேராசிரியர் செ. சண்முகம் அவர்கள் மொழியியல் என்ற துறை அறிவியல் நெறிமுறைகளைத் தழுவி மொழியின் அமைப்புக்கூறுகளான ஒலி, ஒலியன், உருபன், சொல், தொடர், உரைக்கோவை

போன்றவைகளையும், மொழியின் பொருண்மை, மொழிவழக்கு போன்றவைகளையும் வரையறுத்து, வகைப்படுத்தி விளக்குகின்ற முறைகளையும் விளக்கியுள்ளார்கள். மொழியியல் துறையில் தனக்கென ஒரு தனித்தடம் பதித்துள்ள பேராசிரியர் சண்முகம் அவர்களின் இந்நூலைத் தமிழ் உலகம் படித்துப் பயன்பெறும் என்பதில் சிறிதும் ஐயமில்லை. பேராசிரியர் அவர்களின் முயற்சிகள் மேலும் வளர்க என வாழ்த்துவதில் மகிழ்ச்சியடைகிறேன்.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருவதோடு தம் தனிப்பட்ட அக்கறையையும் காட்டிவரும் நிறுவனத் தலைவரும் தமிழக அரசின் முதல்வருமான மாண்புமிகு டாக்டர் கலைஞர் அவர்களுக்குத் தமிழுலகம் என்றும் நன்றிக்கடன்பட்டுள்ளது.

தமிழ்ப்பணிகளுக்கு ஆற்றுப்படுத்தி வரும் மாண்புமிகு தமிழக நிதியமைச்சர் பேராசிரியர் க. அன்பழகன் அவர்களுக்கு எம் நன்றி என்றும் உரியது.

நிறுவனச் செயல்பாட்டுக்கு உறுதுணையாக இருந்துவரும் தமிழ் வளர்ச்சி, அறநிலையம் மற்றும் செய்தித் துறை அரசுச் செயலாளர் திரு க. முத்துசாமி இ.ஆ.ப. அவர்களுக்கும் நன்றி.

இவ்வறக்கட்டளைப் பொறுப்பாளராக இருக்கும் பேராசிரியர் முனைவர் செ. ஜீன் லாறன்ஸ் அவர்களின் உழைப்பு பாராட்டிற்குரியது.

இந்த அறக்கட்டளை சொற்பொழிவு நூலின் மெய்ப்பைத் திருத்தம் செய்த முனைவர் ஆ. தசரதன் மற்றும் எழுத்துருவை ஒளிவடிவமைப்புச் செய்த திருமதி பி. கௌசல்யா ஆகியோருக்கும், இச்சொற்பொழிவு மற்றும் நூல் வெளியீடு தொடர்பான பணிகள் புரிந்த நிறுவனப் பணியாளர்களுக்கும், இந்நூலை அழகுற அச்சிட்டுத்தந்த யுனைடெட் கிராபிக்ஸ் அச்சகத்தாருக்கும் பாராட்டுகள்.

**இயக்குநர்**



## ஆசிரியரைப் பற்றி

குமரி மாவட்டம், கேசவன்புதூரில் 1947இல் பிறந்தவர். அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் மொழியியலில் முதுகலைப் பட்டமும் (1969) பூனா பல்கலைக்கழகத்தில் மொழியியலில் முனைவர் பட்டமும் பெற்றவர் (1974). மைசூர்ப் பல்கலைக்கழகத்தில் மொழியியல்துறையில் விரிவுரையாளராகவும் இணைப் பேராசிரியராகவும் (1973-87), கோவை பாரதியார் பல்கலைக் கழகத்தில் பேராசிரியராகவும், துறைத் தலைவராகவும், கலைப்புலத் தலைவராகவும், ஆட்சிக்குழு உறுப்பினராகவும் (1987-2007) செயலாற்றியவர். 50க்கும் மேற்பட்ட மொழியியல் தொடர்பான கட்டுரைகளையும், பல நூல்களையும், பதித்தும்-எழுதியும் வெளியிட்டவர்.

### எழுதிய நூல்கள்

1. சைவ வெள்ளாளத் தமிழ்க் கிளை மொழி (ஆங்கிலத்தில்)
2. பொருண்மையியல் (தமிழில்)
3. சாம்ஸ்கியின் புது மாற்றிலக்கணம் (தமிழில்)
4. கருத்தாடல் (தமிழில்)
5. பாவேந்தரின் மொழி உணர்வும் மொழி நடையும் (தமிழில்)
6. கணிதரவு மொழியியல் (ஆங்கிலத்தில்)
7. அறிவியல் படைப்புகளும் மொழிபெயர்ப்பும் (ஆங்கிலத்தில்)

16 முனைவர் பட்ட ஆய்வாளர்களுக்கும், 24 ஆய்வியல் நிறைஞர்களுக்கும் வழிகாட்டியாக இருந்து, அவர்கள் பட்டங்களைப் பெற வழிவகுத்தவர்.

கனடா, ஜப்பான், தாய்லாந்து ஆகிய நாடுகளுக்குச் சென்று மொழியியல் பணிகளிலும், ஆய்வுகளிலும் கலந்து கொண்டவர்.

பல்கலைக்கழக மானியக்குழு, யு.பி.எஸ்.சி. போன்ற மத்திய நிறுவனங்களில் மொழியியல் சார்ந்த பணிகளில் கலந்து கொண்டவர்.

# என்னுரை

மொழியைக்குறித்த கண்ணோட்டங்களுக்கு ஏற்ப மொழியின் விளக்கம் வேறுபடுகிறது. மொழியைத் தத்துவவியல் பார்வையிலும், பரிணாம வளர்ச்சிப் பார்வையிலும், அறிவியல் பார்வையிலும், கணிப்பானியல் பார்வையிலும் ஆராய்ந்து விளக்க முடியும் என்பதை மொழி விளக்கத்தின், இலக்கணத்தின் வரலாறு காட்டுகிறது. இந்தக் கண்ணோட்டங்களுக்கு ஏற்ப, மொழி விளக்கத்திற்கான கருதுகோள்களும், தரவுகளும், விளக்க முறைகளும் வேறுபடுகின்றன. இந்த நூல், மொழியை அறிவியல் கண்ணோட்டத்தில் பார்க்கின்ற வழிமுறைகளை விளக்க முற்படுகிறது. மொழியையும், மொழியின் அமைப்பு, பொருண்மை, வழக்கு போன்றவைகளையும், விளக்க முறைகளான தருக்கம், உளவியல் பேன்றவைகளையும் முன்னிறுத்தி விளக்குகின்ற பண்பு மொழியியலில் காணப்படுகிறது என்பதை அறிமுக வடிவில் இந்நூல் விளக்க முற்படுகிறது. மொழியியல் பார்வை வளர்ந்த பிறகு மொழியைச் சமுதாய உண்மை எனவும், உளவியல் உண்மை எனவும் கருதி மொழியையும் மொழியின் பண்புகளையும் வெளிப்படையாக நிறுவுகின்ற ஆய்வு மனப்பாங்கு எழுந்ததை உணர முடியும். மேலும் மொழியைப் பல கோணங்களில் ஆய்வு செய்கின்ற நிலையையும், இதனால் மொழி விளக்கவியல், பயனாக்கவியல், சமுதாய மொழியியல், பண்பாட்டு மொழியியல், இலக்கிய மொழியியல், மொழிபெயர்ப்பியல், நடையியல், தொடரியல், சொல்லியல் போன்ற பல்வகைத் துறைகள் நுணுக்கமாக மொழியை ஆராயப் பெருகி வளர்ந்திருப்பதையும் காணலாம்.

அறிவியல் நோக்கில் மொழி என்ற தலைப்பில் அறக்கட்டளைச் சொற்பொழிவை நிகழ்த்துவதற்கு வாய்ப்பளித்து, அதில் என்னை முழுமையாக ஈடுபட வைத்த பெருமை மதிப்பிற்குறிய நண்பர் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் இயக்குநர் பேரா. கரு.அழ. குணசேகரன் அவர்களைச் சாரும். முழுமையான விளக்க சக்தியாக அவர் இருந்ததால்தான் இந்நூல் இவ்வடிவில் வெளி வருகிறது. அவருக்கு என் உளங்கனிந்த நன்றியை நவில்வதில் பெருமிதமடைகிறேன்.

இந்தச் சொற்பொழிவு நிகழ்வதற்குப் பின்புலமாக இருந்த இவ் அறக்கட்டளை பொறுப்பாளர் எனது அன்புக்குரிய நண்பர் உலகத்தமிழாராய்ச்சி நிறுவனத்தின் மொழியியல் பேராசிரியர் செ. ஜீன் லாறன்ஸ் அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியைக் கூறுவதில் மகிழ்ச்சியடைகிறேன்.

மொழியியலை எனக்குக் கற்றுத்தந்த அண்ணாமலைப் பல்கலைக்கழக ஆசிரியப்பெருமக்கள், மொழியியலை என்னுடன் விவாதித்த பல நண்பர்கள் அனைவரையும் இந்நேரம் நினைக்கிறேன். அவர்களுக்கு எனது வணக்கங்கள். இந்நூலைச் சிறப்பாகத் தட்டச்சு செய்த நண்பர்கள், நூலைச் சிறப்பாக மெய்ப்புத் திருத்தம் செய்த மற்றும் அச்சேற்றிய நண்பர்கள் ஆகியோருக்கு எனது மனமார்ந்த நன்றி.

பேரா. ச. அகத்தியலிங்கம், அவரது இல்லத்தரசி அ. பொன்னம்மாள் ஆகியோரின் நினைவுக்கு இந்நூலைக் காணிக்கையாக்குகிறேன்.

செ. சண்முகம்

# முன்னுரை

## உண்மை

உள்ளவை என நிலைநாட்டப்படுவன 'மெய்' எனவும், இல்லாதவை என நிலைநாட்டப்படுவன 'பொய்' எனவும் கருதப்படுகின்றன. 'சூரியன் கிழக்கில் உதிக்கிறது' என்பது மெய் எனவும் 'சூரியன் மேற்கில் உதிக்கிறது' என்பது பொய் எனவும் கருதலாம். கிழக்கு, மேற்கு என நாம் வரையறுக்கும் திசைகள், பூமியை நாம் உற்று நோக்கும் விதம் ஆகியவற்றின் அடிப்படையில் இதை நிறுவலாம். மெய்ம்மையை மூன்று வகைகளில் நிலை நாட்டலாம் என்பது தமிழர்கள் கண்ட வழி. புலன்களின் மூலம் ஏற்படும் உணர்வுகளின் அடிப்படையில், உலகியல் பண்புகள் நிலை நாட்டப்பட்டால் அவைகளை 'மெய்ம்மை' எனவும், உள்ளத்தில் உருவாகும் கருத்துக்களின் அடிப்படையில் நிலைநாட்டப்பட்டால் அவைகளை 'உண்மை' எனவும், வாயாலும் சொல்லாலும் உலகியல் பண்புகள் நிலைநாட்டப்பட்டால் அவைகளை 'வாய்மை' எனவும், மெய் வகைப்படுத்தப்படுகிறது. 'தீக்குள் விரலை விட்டால் சுடும்' என்பது 'மெய்ம்மை' வகை மெய். 'காதலுக்கு அழிவில்லை' என்பது உண்மை வகை மெய். 'தீக்குள் விரலை விட்டால் நந்தலாலா உன்னைத் தீண்டும் இன்பம் தோன்றுதடா' என்பது பாரதி எடுத்துக் கூறிய வாய்மை வகை மெய்.

இம்மூன்று வகை மெய்களும் ஒன்றோடொன்று தொடர்புடையவை. ஒன்றிலிருந்து மற்றொன்று பிறக்கும் தன்மையில் அவை உள்ளன. புலன் வழியாக உணர்வும், உணர்வு வழியாகக் கருத்தும், கருத்தின் வெளிப்பாடாகச் சொல்லும் பிறப்பதால், இம் மூவகைச் செயல்களான 'உணர்தல், கருத்தாக்குதல், சொல்லுதல்' என்பன தொடர்புடையன. இவைகளை ஆங்கிலத்தில் 'Perception, Conception, Expression' என அறிஞர்கள் முறையே விளக்குவர்.

## அறிவியல்

உண்மையைச் சார்ந்து நிற்பதே அறிவின் பண்பு. உண்மையை உணர்ந்து நிலைபெறச் செய்வதன் வாயிலாக அறிவு உருவாகிறது. அறிவானது மனிதரிடம் இயல்பாகவே உள்ளது எனவும், இதுவே மனிதனை விலங்குகளிலிருந்து பிரித்தாள

உதவுகிறது எனவும், இது அனுபவங்களின் வாயிலாக உருவெடுக்கிறது எனவும் வலியுறுத்தும் கோட்பாடுகள் உள்ளன. அறிவியலில் பல வகைகள் உள்ளன எனக் கருதி அவைகளைப் பகுத்தறிவு, பட்டறிவு, பொது அறிவு, நுண்ணறிவு என வகைப்படுத்துவர். பகுத்தறிவு என்பது பிரித்தறியும் திறனில் அடங்கியுள்ளது எனவும், பட்டறிவு உலக அனுபவங்களின் வாயிலாகப் பெறப்படுவது எனவும், பொது அறிவு என்பது உலகியல் பண்புகளைக் குறித்த பொதுவான கருத்துக்களின் தொகுப்பால் உருவாவது எனவும் கருதப்படுகின்றன. அறிவு எத்தகைய வகையாக இருந்தாலும், நிலைநாட்டப்பட்ட கருத்துக்களும், உண்மையைக் குறித்த உணர்வும் அறிவாக நிலைபெறுகின்றன என்று கூறலாம். அறிவை நிலைநாட்டும் வழிமுறைகளை வெளிப்படையாக விளக்கும் துறையை 'அறிவியல்' எனலாம்.

வேதியல் ஆய்வுகளுக்கு இன்றியமையாத கருவியாக அமைகின்ற 'மின்னும் பச்சைப் புரதம்' என்ற பொருளைக் கண்டு பிடித்து வெளியிட்டமைக்காக, 2008ம் ஆண்டின் நோபல் பரிசு 'மார்ட்டின் சல்பி, ரோகர்சியன், ஓசாமு சிமோமுரா' என்ற மூன்று அறிஞர்களுக்குப் பகிர்ந்து அளிக்கப்பட்டது. இந்தச் செய்தியை வெளியிடும் போது "மறைந்து கிடப்பனவற்றை வெளிப்படையாகப் புலப்பட வைப்பதற்கு, அறிஞர்கள் உரிய வழிமுறைகளை உருவாக்கி வெளியிடும்போது அறிவியல் ஆய்வுகள் முன்னோக்கி, வெகு தொலைவிற்குத் தாவும் தன்மையை அடைகின்றன" என்ற குறிப்பை நோபல் குழு வெளியிட்டது. இந்தக் குறிப்பு அறிவியலை வரையறுக்கின்ற தன்மையில் உள்ளது. மறைந்து கிடப்பவைகளை வெளிப்படையாகப் புரியவைக்கும் வழிமுறைகளை வகுப்பதே அறிவியலின் பண்பு எனலாம்.

நிலைநாட்டப்பட்ட, உலகைக் குறித்த கருதுகோள்களை 'உண்மைகள்' எனலாம். உலகைக் குறித்த பழைய கருத்துக்களை மாற்றியமைக்கவோ அல்லது அவைகளோடு புதிய கருதுகோள்களை ஒருங்கிணைக்கவோ உதவும் வகையில் புதிய கருதுகோள்களை உருவாக்கி நிலைநாட்டுவதற்காக மேற்கொள்ளப்படும் ஆராய்ச்சி வழிமுறைகளை வகுப்பதே அறிவியலின் முக்கியப் பண்பும், நோக்கமும் ஆகும். இதை அறிவியல் நெறிமுறை எனலாம். அறிவியல் ஆராய்ச்சி நெறிமுறைகள் கருதுகோள்களை நிலைநாட்ட உதவும் ஆதாரங்களையும், அத்தாட்சிகளையும் திரட்டும் முறைகளே. இந்த அத்தாட்சிகள் சோதனை வாயிலாகப் பெறப்படுவனவாகவும்

(experimental), அளவிடும் தன்மையில் இருப்பனவாகவும் (Quantification), அனைவருக்கும் புலப்படும் வகையில், அதாவது திறந்த நிலையில் விளக்கப்படுவனவாகவும் (objective) இருக்க வேண்டும். ஆக, கருதுகோள்கள், அவைகளை நிறுவத் தேவையான சான்றுகள், அவைகளைப் பெறுவதற்கான தரவுகள், தரவுகளைத் திரட்டுதல், அவைகளை ஆய்வுக்கு உட்படுத்துதல், ஆய்வின் முடிவுகளைக் கண்டறிதல், அதன் வழியாகக் கருதுகோள்களை நிலைநாட்டுதல், பின்னர் அவைகளை வெளியிடுதல் ஆகியனவற்றிற்கான வழிமுறைகளை வகுக்கும் போது, உண்மையானது அறிவியல் நெறிமுறைகளைப் பின்பற்றி நிலைநாட்டப்படுகிறது எனலாம்.

உலகில் நிலைபெறும் பொருள்களையும், நிகழ்வுகளையும், அவைகளின் பண்புகளையும், செயற்பாடுகளையும் விளக்குவதற்காகக் கைக்கொள்ளப்படும் கருத்துக்களே 'கருதுகோள்கள்' ஆகின்றன. அவைகளை நிலைநாட்ட அல்லது முறியடிக்கத் தேவையான சான்றுகளைப் பெறுவதற்கான சோதனை முறைகளை வடிவமைத்தல் அறிவியலின் பண்பு ஆகும். சோதனை முறைகள் வெளிப்படையானவையாக இருக்க வேண்டும். அதன்மூலம் சோதனை முடிவுகள் பாரபட்சமற்றவையாகவும், தற்சார்பற்றவையாகவும் ஆகின்றன. சோதனை முறைகளை வெளிப்படையானவை எனப் புலப்படும் வண்ணம் விளக்கவேண்டு மென்றால், திரட்டப்பட்ட தரவுகளும், திரட்டப்பட்ட முறைகளும் பதிவு செய்யப்பட வேண்டும். இதனால் பிற அறிஞர்கள் இவற்றை உற்றுநோக்கி மீள்பார்வையிட ஏதுவாக அமையும். முன்பு நிகழ்த்திய சோதனைகளைத் திரும்பவும் நிகழ்த்தி, முன்பு பெற்ற அதே முடிவுகளைத் திரும்பவும் பெற்று அந்த முடிவு நிரந்தரமானது எனவும், உலகளாவிய நிலையில் உண்மையானது, பொதுவானது எனவும் நிலைநாட்ட ஏதுவாக அமையும்.

உண்மையைத் தேடுதல் என்பதை மையமாகக் கொண்டதே அறிவியல் ஆய்வு நெறிமுறை என்ற கருத்தை இப்னூர் அல்ஹைதம் என்ற அறிஞர், பல நூற்றாண்டுகளுக்கு முன்பே வெளியிட்டார். ஒளி ஊடுருவும் ஊடகங்களில் ஒளி நேர்கோட்டில் பாய்கிறது என்ற கருதுகோளை நிலைநாட்ட, ஒரு சோதனை முறையை 'அல்ஹசன்' என்ற அறிஞர் வெளியிட்டார். பாயும் ஒளிக்கதிருக்கு இணையாக, அதன் அருகாமையில் ஒரு நேரான குச்சியையோ, வளையாத நூலையோ பிடித்து ஒளி நேர்கோட்டில் பாய்கிறது என்பதை நிறுவலாம் என எடுத்துரைத்தார்.

இருபதாம் நூற்றாண்டின் அறிவியல் ஆய்வு நெறிமுறைகள், கருதுகோள்களின் வாயிலாக உண்மையை நிறுவவேண்டும் என்ற

அடிப்படையில் அமைகின்றன. இதன்படி நமது அனுபவங்களைப் பயன்படுத்தி, கருதுகோள்களை உருவாக்கி, அதிலிருந்து உரிய உண்மைகளை ஊகித்து, அவைகளைச் சோதித்து நிலைநாட்டுதல் என்ற வழிமுறைகள் அறிவியல் சார்ந்தவை எனக் கருதப்படுகின்றன. இதை Inductive Method என ஆங்கிலத்தில் அழைப்பர்.

கருதுகோள்களை உருவாக்குவதற்குத் தேவையான அனுபவங்கள் (உணர்தல்) நுட்பமற்றதாகவோ, தற்சார்புத்தன்மை கொண்டதாகவோ அமையலாம். ஆகவே அவைகளை விளக்கும்போது துல்லியமாக விளக்கவேண்டும் என லட்விக் பிளிக் (1896-1961) என்பார் கூறுவார். ஒரு குதிரை வேகமாக ஓடும்போது அதன் கால்கள் பரந்திருப்பவை போன்று தோன்றுவதை நாம் உணர்வது இயல்பு. ஆனால் குதிரையின் கால்கள் தரையைத் தொடாத நிலையில் குவிந்திருக்கும் எனப் பிளிக் விளக்கினார். ஆகவே நாம் காண்பதும், உணர்வதும் நுட்பமற்றதாக இருந்தாலும், உண்மையை நிலைநாட்டும் வண்ணம் நாம் அனுபவங்களை விளக்க முற்படுகையில் அவைகளைத் தெளிவாகவும், நுட்பமாகவும் விளக்கவேண்டும் என்பது அறிஞர்களின் எதிர்பார்ப்பு என்பது புலப்படுகிறது.

**கண்ணோட்டம்**

நாம் உலகை உணரும் விதத்தையும், நோக்கும் விதத்தையும், நமது கண்ணோட்டத்தையும் நம் நம்பிக்கைகள் கட்டுப்படுத்தித் திசைதிருப்பக்கூடும். மழை பெய்யாமல் பூமியில் வறட்சி நிலவுவதற்கு இயற்கையாகப் பல காரணங்கள் இருந்தாலும், தமிழ் மக்கள் குறிப்பாக இறை நம்பிக்கை உடையவர்கள்; இந்நிலை மாரியம்மனின் சீற்றத்தால்தான் உருவாகிறது என நம்பி, மாரியம்மனுக்கு விழா எடுத்து, அம்மனை மஞ்சள் நீரில் நீராட்டுவதைப் பார்க்கிறோம். வேறு சிலர், நாட்டில் பாவச் செயல்கள் மிகுந்ததால் இந்நிலை ஏற்பட்டதென நம்பி, கொடும்பாவியைக் கட்டி இழுப்பதையும் காண்கிறோம். இவை, மழை வராமை, வறட்சி போன்றவை சார்பான அவரவர் நம்பிக்கையையும் கண்ணோட்டத்தையும் காட்டுகின்றன.

பொருட்களையும் நிகழ்வுகளையும் குறித்து நாம் நம்புவனவற்றை அதாவது நமது கருதுகோள்களைப் பல்வகைச் சோதனைகளைத் திரும்பத் திரும்ப நிகழ்த்தி நிலை நாட்டும் வழிமுறையே அறிவியல் வழிமுறை எனப்படும். சோதனைகளை மறுபடி நிகழ்த்தல் என்பது கருதுகோள்களை நிரந்தரமான உண்மை எனக் காட்டவும், சோதனையாளர்களின் தற்சார்புக்

கண்ணோட்டத்தை நீக்கவும் உதவுகிறது. ஆக, அறிவியல் வழிமுறை என்பதைச் சோதனை முறைகளைக் கடைப்பிடித்து உண்மையை நிலைநாட்டுதல் எனவும், கருதுகோள்களை மெய்ப்பிப்பதற்கு வழி வகை செய்தல் எனவும் வரையறுக்கலாம்.

மொழியைக் குறித்த உண்மைகளை வெளிப்படையான தாகவோ, குறிப்பானதாகவோ நிலைநாட்டி விளக்க மொழியியல் முற்படுகிறது. அறிவியலோ உலகைக் குறித்த உண்மைகளை நிலைநாட்டி விளக்க முற்படுகிறது. ஆகவே அறிவியல், மொழியியல் என்ற இரு துறைகளின் விளக்கப் பொருள் மாறுபட்டதாக இருந்தாலும் அவைகளின் குறிக்கோள் ஒன்றேயாகும்.

பொருட்களை ஆராயும் நோக்கில் உலகியல் கண்ணோட்டம், அறிவியல் கண்ணோட்டம் என இரு வகைகள் உள்ளன. புலன்களால் உணரப்படுவனவற்றை மனத்தால் வேறுபடுத்தி, அவைகளை விளக்குதல் ஒருவகை எனவும், கருத்துக்களை உருவாக்கி அவைகளுக்குப் பெயரிட்டு வகைப்படுத்துதல் மற்றொருவகை எனவும் கருதலாம். இந்த வகையில் சமுதாயங்கள் உலகை உற்று நோக்கி வகைப்படுத்தும் விதம் வேறுபடுகிறது. தாவரங்களை மரங்கள், செடிகள், கொடிகள் என வகைப்படுத்தும் முறை சமுதாயப் பார்வையைக் காட்டுகிறது. உயிரினங்களை ஆறு வகையான அறிவை அடிப்படையாகக் கொண்டு, ஓரறிவு, ஈரறிவு, மூவறிவு, நான்கறிவு, ஐந்தறிவு, ஆறறிவு படைத்தவை என வகைப்படுத்துவதும் சமுதாயப் பார்வையைக் காட்டுகிறது. ஆனால் அறிவியல் அடிப்படையில் தாவரங்களையும், உயிரினங்களையும் ஆராய்ந்து, வேறுபடுத்தி, உரிய வேறுபாட்டுக்கான காரணங்களை உருவாக்கி வகைப்படுத்தும் முறை வேறுபடுகிறது. உயிரினங்களை முதுகெலும்பு உள்ளவை, அற்றவை, ஒற்றைச் செல் உயிரினம், பல செல் உயிரினம், பாலூட்டிகள், பாலூட்டாதவை, ஊர்வன, பறப்பன, நீரில் வாழ்வன என வெவ்வேறு வகைகளில் பாகுபடுத்துவதும், பாகுபாட்டிற்கான காரணங்களைச் சுட்டிக்காட்டுவதும் அறிவியல் துறையின் இலக்குகளாகின்றன. இத்தகைய பார்வையை அறிவியல் பார்வை எனலாம். ஆக உலகை உற்று நோக்கும் விதத்தில் ஒன்றான உலகியல் பார்வை சமுதாய நெறிமுறைகள், தேவைகள், பின்புலங்கள் போன்றவைகளால் கட்டுப்படுத்தப்படுவதால், இக் கண்ணோட்டம் மொழிக்கு மொழி, சமுதாயத்திற்குச் சமுதாயம் வேறுபட்டுத் தோன்றுகிறது. இதைச் சபீர், ஹோர்ப் என்ற அறிஞர்கள் ஒரு கோட்பாடாக விளக்கினார்கள். சமுதாயம் உலகை உற்றுநோக்கிக் கருத்துக்களையும், சொற்களையும் படைக்கும் முறையில்

வேறுபடுகின்றது எனச் சுட்டிக்காட்டியுள்ளனர். தமிழில் உறவுமுறைப் பெயர்கள், நிறப்பெயர்கள், சமையல் தொடர்பான சொற்கள் போன்றவற்றை ஆங்கிலம் போன்ற பிறமொழிகளில் உள்ள அத்தகைய சொற்களோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது, எவ்விதம் சமுதாயக் கண்ணோட்டம் வேறுபடுகிறது என்பது புலப்படும். ஆனால் அறிவியல் கண்ணோட்டத்தின் அடிப்படையில் வெளியிடப்படும் செய்திகள் அறிவியல் அறிஞர்களால், அறிவியல் நெறிமுறைகளைக் கடைப்பிடித்து, சோதனை வாயிலாக வெளியிடப்படுவதால், அவை காலத்தையும், நிலப்பரப்புக்களையும் தாண்டி உலகப் பொதுமைத் தன்மையை அடைவதுண்டு. அவை சமுதாயத்திற்குச் சமுதாயம் மாறுபடுவதல்ல.

மொழியைச் சமுதாயக் கண்ணோட்டத்தில் பார்க்க விளையும் அறிஞர்கள் மொழியை ஒரு வகையான சமுதாய உண்மை எனக் கொண்டு, சமுதாய நெறிமுறைகள், கட்டுக்கோப்புகள் போன்றவற்றிற்கு ஏற்ப மொழியின் நிலைபேறு, பண்பு, மாற்றம், வளர்ச்சி, ஒற்றுமை, வேற்றுமை போன்றவை நிலைநாட்டப்படும் என்பர். மொழியை அறிவியல் கண்ணோட்டத்தில் பார்க்க விழையும் அறிஞர்கள், மொழியைச் சமுதாயத்தின் அங்கமாகவும், பிரதிபலிப்பாகவும் கருதினாலும் அதை ஒருவகையான உடலியற்கூறு என்றோ உளவியல் கூறு என்றோ கருதி, மொழிகளின் பொதுமையான பண்புகளை நிலைநாட்டவும், அவைகளுக்கான உடலியல், உளவியல் காரணங்களை விளக்க முனைவார்கள். பொதுவாக, மொழியைச் சமுதாயக் கண்ணோட்டத்தில் பார்க்க விளைபவர்கள் மொழிகளில் காணப்படும் அமைப்பு, பொருண்மை, பயன்பாடு, வேறுபாடு போன்றவற்றையும் இவைகளின் நிலைப்பாட்டிற்குச் சமுதாயச் சூழல் காரணமாக அமைகின்றது என்பதையும் நிலைநாட்டுகின்றனர். மொழியை அறிவியல் கண்ணோட்டத்தில் பார்க்க விழைபவர்கள் உலக மொழிகளில் காணப்படும் அமைப்பு, பொருண்மை, பயன்பாடு போன்றவைகளில் வெளிப்படும் ஒற்றுமையை வலியுறுத்துவதையும், அத்தகைய ஒற்றுமைக்குக் காரணம் மானிட உடலியல், உளவியல் பண்புகளே என நிறுவுவதையும் தம் கடனாகக் கொள்கின்றனர்.

## அறிவியல் கண்ணோட்டத்தில் மொழி

மொழியின் பண்புகளை அறிவியல் கண்ணோட்டத்தில் மொழியியல் விளக்க முற்படுகிறது. மொழியையும் அதன் பண்புகளையும் உற்று நோக்கி, மொழியின் பண்பு குறித்த கருதுகோள்களை உருவாக்கி, அந்தக் கருதுகோள்களை

நிலைநாட்டுவதற்குத் தேவையான தரவுகளைச் சேகரித்து, தரவுகளைச் சேகரிப்பதற்கான உபகரணங்களையும், வழிமுறைகளையும் உருவாக்கி, திரட்டிய தரவுகளை ஆய்வுக்கு உட்படுத்தி, குறிப்பாக, தரவகை ஆய்வு, அளவிடும் வகை ஆய்வு என்பவைகளை மேற்கொண்டு, ஆய்வில் கிடைத்த முடிவுகளை எல்லோருக்கும் புலப்படும் வண்ணம் வெளியிட்டு, அவ்வாறு வெளியிடுவதற்குத் தேவையான கலைச்சொற்கள், பரிமாற்ற உத்திகள் போன்றவற்றை உருவாக்கி மொழியின் அமைப்பு, பொருண்மை, பயன்பாடு, வேறுபாடு, மாற்றம் போன்ற பல பண்புகளை உண்மை என நிலைநாட்டும் வகையில் செயல்படுவதே அறிவியல் வழியிலான மொழிவிளக்கமாக அமையும்.

மொழியின் பண்புகளைக் குறித்த புத்தம் புதுக் கருத்துக்களைச் சோதனை வழியில் நிலைநாட்டி, அவைகளுக்கு உரிய பெயர்களை வழங்கி விளக்க முற்படுவதால் மொழியியல் துறை ஓர் அறிவியல் துறையாகிறது. மொழியியல் ஓர் அறிவியல் துறையாக மலர்வதற்கு முன்பும் மொழியைக் குறித்த கருத்துக்கள் பல்வேறு காலக்கட்டங்களிலும், இடங்களிலும் ஆராயப்பட்டு வெளியிடப்பட்டன. இலக்கண மரபின் வளர்ச்சியையும், வரலாற்றையும் உற்று நோக்குபவர்களுக்கு இது புலப்படும். கிரேக்க, ரோம, அராபிய, இந்திய, எபிரேய, சீன இலக்கண மரபுகளை உற்று நோக்கும்போது, அவை மொழியின் ஒலி, எழுத்து, சொல், தொடர், இலக்கணம் போன்றவற்றைக் குறித்த பல்வேறு கருத்துக்களைத் திறம்பட நிலைநாட்டி அவைகளுக்குப் பெயர்சூட்டி விளக்கியமையை நாம் கண்டுகொள்ள முடியும். அத்தகைய மொழி விளக்கங்கள் ஒரு குறிப்பிட்ட மொழியை விளக்குவதற்காக உருவாக்கப்பட்டாலும், அவை பல மொழிகளின் விளக்கத்திற்குப் பயன்பட்டதையும் வரலாறு காட்டுகிறது. அத்தகைய மரபு இலக்கணங்கள் அந்தந்த இலக்கண மரபைத் தழுவி எழுந்ததால் அவை வேறுபாடுகளைக் காட்டியதையும் நாம் உணரமுடியும். ஆனால் அறிவியல் வழியில் மொழிக்கும், மொழிப் பண்புகளுக்கும் கொடுக்கப்படும் விளக்கம் பொதுமையானதாகவும், நுட்பமானதாகவும், சோதனை அடிப்படையிலும் அமைவதால் அவை உலகின் எல்லா மொழிகளின் பண்புகளையும் உள்ளடக்கி விளக்குவதற்கு ஏதுவானதாக அமைகின்றன. எல்லோராலும் ஏற்றுக் கொள்ளப்படும் வகையிலும், அவ்விளக்கங்கள் அமைகின்றன.

எடுத்துக்காட்டாக, தமிழிலக்கண மரபில் மெய்யொலிகளை வல்லினம், மெல்லினம், இடையினம் எனப்

பகுக்கும் மரபு உள்ளது. க,ச,ட,த,ப,ற வல்லினம் எனவும், ங,ஞ,ண,ந,ம,ன மெல்லினம் எனவும் ய,ர,ல,வ,ழ,ள இடையினம் எனவும் பிரிக்கப்பட்டுள்ளன. நகரும் நா, வாயின் மேற்பகுதி ஆகியனவற்றின் பின்புறத்திலிருந்து தொடங்கி முன்புறம் வரையிலான பரப்பை உச்சரிப்பின் நிலைத்தானங்களாகப் பிரித்ததன் அடிப்படையில் வல்லின மெய்கள் க,ச,ட,த,ப,ற எனச் செம்மையாகப் பிரிக்கப்பட்டுள்ளன எனக் கருதினால், ஏன் 'ற' வைப் 'ப' வின் பின்னர் வரிசைப்படுத்தினர் என்பது விளங்கவில்லை. மேலும் இந்த வரிசைப்பாடு தமிழுக்கென்றே உருவாக்கப்பட்ட வரிசைப்பாடாகும். ஆனால் மொழியியல் வழியில், குறிப்பாக ஒலியியல் வழியில் மெய்களை வகைப்பாடு செய்யும் போதும், வரிசைப்பட நிறுத்தும் போதும் நகரும் நா, உச்சரிப்புத்தானம், உச்சரிப்பு முறை என்பவைகளை மனத்திற்கொண்டு மெய்யொலிகள் வகைப்படுத்தப்படுகின்றன. எனவே மரபு இலக்கணத்தார் வகுத்த வகைப்பாட்டு முறைகளை ஒரு மரபின் பின்னணியில் எழுவன எனவும், அறிவியல் நெறிமுறைகளைத் தழுவிய மொழியியல் சார்ந்த ஒலி வகைப்பாட்டு முறைகள் நுண்ணிய, எல்லா மொழிகளுக்கும் பொருந்தி வருகின்ற, சோதனை வாயிலாக எழுந்த முறைகள் எனவும் நிறுவலாம்.

மொழியை அறிவியல் நெறிமுறைகளின் அடிப்படையில் நிலைநாட்டுதல் என்பது மொழியியலின் முக்கியப் பண்பாக அமைகிறது. அறிவியல் நெறிமுறை என்பதில் புதிய கருத்தாக்கங்களைக் கண்டுபிடித்து, அனைவரும் ஏற்றுக் கொள்ளும் வகையில் நிறுவுவதாகும். இந்த அடிப்படையில் மொழியின் பண்பை விளக்குகின்ற மொழியியலின் வரலாற்றைப் பார்க்கும்போது, மொழியின் கூறுகள், அவைகளின் பண்புகள், அவைகளின் அமைப்பு, அவைகளை உருவாக்கும் விதிகள், அவைகளில் ஏற்படும் வேறுபாடு, மாற்றம் போன்றவற்றைச் சார்ந்த கருத்துக்கள் புதிது புதிதாகக் கண்டுபிடித்து விளக்கப்பட்டமை தெரிய வரும். மொழிக் கூறுகளும் அவற்றின் இயங்குநிலை என்ற இரண்டும் மொழி விளக்கத்தில் முக்கியமானவையாகக் கருதப்பட்டன. இந்த இரண்டு வகை விளக்கங்களின் அடிப்படையில் அவைகளின் பின்புலக் கோட்பாடுகள் வேறுபடுகின்றன. இவ்விரு கோட்பாடுகளையும் Entitative Theories, Process Theories என ஆங்கிலத்தில் அழைப்பர். முதல்வகைக் கோட்பாடுகள் மொழிக்கூறுகளைக் கண்டுபிடித்து, நிலைநாட்டி, வகைப்படுத்தி விளக்க முயல்கின்றன எனவும், இரண்டாம் வகைக் கோட்பாடுகள் மொழிக் கூறுகளின் இயக்கத்தைக் கண்டு விளக்க முற்படுகின்றன எனவும் கருதலாம்.

இன்றைய சூழலில் மொழியைப் பற்றிய விளக்கங்கள் மொழிக்கும், மொழியைப் பயன்படுத்தும் மாந்தருக்கும், மொழியைக் கையாள உதவும் கருவியான கணிப்பானுக்கும் முன்னுரிமை வழங்கி அவைகளின் அடிப்படையில் மூன்று வகையாகப் பிரிக்கப்படுகின்றன. முதல் வகை விளக்கம் மொழியியலாராலும், இரண்டாம் வகை விளக்கம் உளவியல் சார்ந்த மொழியியலாராலும், மூன்றாம் வகை விளக்கம் கணினியியல் சார்ந்த மொழியியலாராலும் வழங்கப்படுகின்றன. எடுத்துக்காட்டாக, மொழியியலார் மொழியின் உருபன்களைக் கண்டுபிடித்து வகைப்படுத்தும் முறைகளை விளக்குகின்றனர். உளமொழியியலார் உருபன்கள் மனித மூளையில் எவ்விதம் நிலைபெறுகின்றன என்பதையும், அவைகளை மொழிபேசும் மாந்தர் எவ்விதம் வெளியிடுகிறார்கள் (பேச்சின் வாயிலாகவும் எழுத்தின் வாயிலாகவும்) என்பதையும், எவ்விதம் புரிந்துகொள்கிறார்கள் என்பதையும் விளக்க முற்படுகிறார்கள். கணினி மொழியியலார் வெவ்வேறு வகைகளில் சொற்களைப் பிரித்து உள்ளடங்கும் உருபன்களைக் கொண்டு உரிய சொற்களை உருவாக்கத் தேவையான அறிவையும், செயற்பாட்டுத் திறனையும் கணினிக்கு வழங்கி, அதுவே உருபன்களைப் பிரித்தோ, இணைத்தோ செயல்பட வைப்பது எப்படி என்பதை ஆராய்ந்து அத்தகைய விளக்கத்தை வழங்க முனைகின்றனர். ஆகவே மொழியை மையமாகக் கொண்டு, மொழியைக் கையாளும் மாந்தரை மையமாகக் கொண்டு, கணினியை மையமாகக் கொண்டு மொழிக்கு விளக்கம் கொடுக்கும் வழிமுறைகள் இன்றைய சூழலில் வெளியிடப்படுகின்றன. இவை அனைத்தும் சோதனை அடிப்படையில், எல்லோரும் புரிந்து கொள்ளும் வகையில், எல்லா மொழிகளுக்கும் பொருந்தும் வகையில், காலம் இடம் என்பவைகளைக் கடந்து நிற்கும் வகையில், வழங்கப்படும் விளக்கங்கள் என்பதால் இவைகளை அறிவியல் நெறிமுறைகளைத் தழுவிய விளக்கங்கள் எனலாம்.

## நான்கு வகை மொழியியல்

மொழியியலாரில் நான்கு வகையினரை இங்குக் குறிப்பிடலாம். வரலாற்று மொழியியலார், அமைப்பு மொழியியலார், படைப்பு மொழியியலார், சமுதாய மொழியியலார் என்ற நான்கு வகையான மொழியியல் அறிஞர்கள் தங்களுக்கே உரிய இலக்குகளோடு மொழியை ஆராய்ந்து வருகின்றனர். வரலாற்று மொழியியலார், குறிப்பாகப் பத்தொன்பதாம் நூற்றாண்டில் மேன்மையுற்றிருந்த வரலாற்று மொழிக்

கோட்பாட்டைப் பின்பற்றுபவர்கள், மொழியில் காலங்காலமாக நிகழ்ந்துவரும் மாற்றங்களைக் கண்டு, அம்மாற்றங்களின் அடிப்படையில், பிறப்பு அடிப்படையில் மொழிகள் தொடர்புடையவை என நிலைநாட்டி, மொழிக் குடும்பங்களையும், மூலமொழிகளையும் காணும் வழிமுறைகளை விளக்க முற்படுகின்றனர். மூலமொழி, அதிலிருந்து பிறந்த பிறமொழிகள், அவைகளின் உறவு, குறிப்பாக அவைகளின் ஒலி, சொல், இலக்கணம் போன்றவற்றில் வெளிப்படும் ஒழுங்கான வேறுபாடுகள் போன்றவற்றை நிறுவும் வழிமுறைகளை விளக்குவர். ஆகவே வரலாற்றுவகை மொழிவிளக்கம் அறிவியல் நெறிமுறைகளைத் தழுவியது எனலாம்.

அமைப்பு மொழியியலார் மொழிகளில் பல கூறுகள் உள்ளன எனவும் அவை தொடர்ச்சியாக நின்று பெருங் கூறுகளையும் அமைப்புகளையும் உருவாக்குகின்றன எனவும் கருதி பல்வகைக் கூறுகளைக் கண்டறியும் வழிமுறைகளையும், அவைகளுக்கிடையிலான உறவை விளக்கும் வழிமுறைகளையும் விளக்குவர். இதனால் அமைப்பு மொழியியலும் அறிவியல் சார்ந்ததேயாகும்.

படைப்பு மொழியியலார் மொழிக்கூறுகளுக்கும், குறிப்பாகத் தொடர்களைப் படைத்தல், மாற்றுதல் என்ற செயல்களுக்கும் முன்னுரிமை வழங்கி, தொடர் உருவாக்குதல், மாற்றுதல் சார்ந்த விதிகளையும், அவ்விதிகள் செயல்படுவதற்கான சூழல்கள், நிபந்தனைகள் கட்டுப்பாடுகள் போன்றவைகளையும் கண்டறியும் வழிமுறைகளை விளக்குவர். பொதுவாக, படைப்பு மொழியியலார் மொழியின் இயக்க வடிவ விளக்கத்தை வழங்க முயல்வதோடு, மொழி என்பது மனிதமனத்தில் அறிவு வடிவத்தில் உள்ளது எனவும் அந்த அறிவுக்கு அமைப்பு கொடுப்பதே இலக்கணத்தின் கடன் எனவும் கருதுவர். மேலும் இலக்கணச் செம்மைத்தன்மை கொண்ட தொடர்களை விளக்குவதற்கு முன்னுரிமை வழங்கி, எவ்வாறு மொழித் தொடர்களின் செம்மைத் தன்மை நிலைநாட்டப்படுகிறது என்பதை விளக்க முயல்வர். இலக்கண விதிகள், விதிகளின் செயல்பாடு, செயல்பாட்டோடு தொடர்புடைய கட்டுப்பாடுகள் போன்றவைகளைக் கண்டறிந்து விளக்குவதால், மறைநிலையிலுள்ள மொழியறிவை வெளிப்படையாகச் சுட்டிக்காட்ட முனைவதால் படைப்பு மொழியியலும் அறிவியல் சார்ந்தது எனக் கருதலாம்.

சமுதாய மொழியியலார் மொழிக்கும் சமுதாயத்திற்கும் இடையிலான உறவை விளக்க முயல்வதோடு, எவ்வாறு சமுதாயம்

மொழியின் நிலை பேற்றிலும், பயன்பாட்டிலும், வேறுபாட்டிலும் தாக்கம் ஏற்படுத்துகிறது எனவும், எவ்வாறு மொழியானது சமுதாயத்தின் கட்டமைப்பிலும், செயற்பாட்டிலும், வேறுபாட்டிலும் தாக்கம் ஏற்படுத்துகிறது எனவும் விளக்க முற்படுவார்கள். சமுதாயக் கட்டமைப்புக்களில் பல சமுதாய நுண்கூறுகள் உள்ளன எனவும், குறிப்பாக, சமுதாய மாந்தரின் இனம், வர்க்கம், சாதி, பால், வயது போன்ற பண்புகள் மொழிகளின் வழக்குகளுக்கிடையிலான வேறுபாட்டுக்குக் காரணம் என நிறுவுவதோடு அதற்கான வழிமுறைகளையும் வழங்குவர். மொழியில் வழக்குகள் உள்ளன என்ற கருதுகோளை அடிப்படையாகக் கொண்டு, வட்டார வழக்கு, சமுதாய வழக்கு, துறை வழக்கு போன்றவைகளை அவைகளின் வேறுபாடுகளை முன்னிறுத்தி விளக்குவர். சமுதாய மொழியியலாரும் உரிய தரவுகளையும் ஆய்வு நெறிமுறைகளையும் கையாண்டு மறைநிலையில் உள்ள மொழி வழக்குகளை வெளிப்படையாகக் காரண - விளைவுகளை மனத்திற்கொண்டு காட்ட முற்படுவதால், சமுதாய மொழியியல் விளக்கமும் அறிவியல் சார்ந்ததேயாகும்.

இங்கு நான்கு வகையான மொழியியலார் விளக்கிய மொழிசார் பண்புகளைக் குறித்த விளக்கங்கள், அவைகளை வெளிப்படையாக நிறுவ மொழி ஆய்வாளர்கள் கையாண்ட வழிமுறைகள் போன்றவை ஆராயப்பட்டு, மொழியியல் துறை ஓர் அறிவியல் நெறிமுறைகளைத் தழுவிய துறை என விளக்கப்படுகிறது. மொழிக்கும் பிற துறைகளுக்கும் இடையிலான உறவை விளக்குவதும், இன்றைய மொழியியலாரின் குறிக்கோளாக அமைவதைக் காணலாம். இவைகளில் பயனாக்க மொழியியல், மொழிக்கல்வியியல், மொழிபெயர்ப்பியல், அகராதியியல், உளமொழியியல், நரம்பு மொழியியல், நடையியல், கணினிமொழியியல், கணித்தரவு மொழியியல் போன்ற பல துறைகள் உள்ளடங்குகின்றன. இத்துறைகளும் அறிவியல் நெறிமுறைகளின் அடிப்படையில் தங்கள் விளக்கப் பொருள்களையும், அவைகளின் பண்புகளையும் நிறுவி விளக்க முற்படுகின்றன.

அறிவியல் நெறிமுறைகளைக் கொண்டு மொழியை விளக்குவது ஒருபுறம் இருக்க, அறிவியல் துறைகளில் தோன்றும் புதிய கண்டுபிடிப்புகள், கருத்தாக்கங்கள் போன்றவற்றை வெளியிடவும் மொழியே பயன்படுகிறது. இத்தகைய, அறிவியல் செய்திகளை விளக்கும் மொழி வழக்கை 'அறிவியல் மொழிவழக்கு' எனலாம். இம்மொழி வழக்கை ஏற்படுத்துவதில்

மொழியியலறிஞர்களும், அறிவியல் அறிஞர்களும் ஈடுபடுகின்றனர். இதில் கலைச்சொல் உருவாக்கம், அறிவியல் துறை தொடர் உருவாக்கம், கருத்துப்புலப்பாட்டுச் செயற்பாடுகள், புலப்பாட்டு உத்திகள் போன்றவற்றை இனம்கண்டு விளக்குவதற்கு முன்னுரிமை வழங்கப்படுகிறது. இந்த அடிப்படையிலும் மொழியியலும் அறிவியலும் தொடர்புடையவை என நிறுவலாம்.

# 2. மொழியின் அமைப்பு

## மொழி வரலாறு

பத்தொன்பதாம் நூற்றாண்டின் மொழியியல் அறிஞர்கள், மொழிகள் காலந்தோறும் மாற்றமடைகின்றன என்ற கருதுகோளை முன்னிறுத்தி, மொழிகள் அடையும் மாற்றங்களையும், அம்மாற்றங்களுக்குப் பின்புலமாக அமையும் காரணங்களையும், அம்மாற்றங்களின் வாயிலாக ஒரு மொழியிலிருந்து பல, வேறுபட்ட மொழிகள் கிளைத்துத் தனிமொழிகளாகப் பிறக்கின்றன எனக்கருதி மொழிகளின் பிறப்பையும் விளக்க முற்பட்டனர். குறிப்பாக, உயிரினங்களைப் போல, உயிரினங்களின் பண்புகளான பிறத்தல், வளர்தல், மாறுதல், இனப்பெருக்கம் செய்தல், இறத்தல் என்ற பண்புகளை மொழியும் கொண்டுள்ளது எனக் கருதினர். இக்கருதுகோளுக்கு, அந்தக் காலக்கட்டத்தில் வழக்கிலிருந்த உயிரியல் கோட்பாடுகளும், குறிப்பாக டார்வினின் பரிணாம வளர்ச்சிக் கோட்பாடும் பின்னிலையாகவும், ஊக்கக் கருத்தாகவும் இருந்தன எனக் கணிக்கலாம். மொழிமாற்றம், மொழிபிறப்பு என்பவைகளை விளக்குவதற்காக மொழியியலார் பின்பற்றிய அணுகுமுறையை 'வரலாற்று அணுகுமுறை' எனவும் 'ஒப்பீட்டு அணுகுமுறை' எனவும் அழைத்தனர்.

காலப்போக்கில் மொழி பல மாற்றங்களை அடைகிறது எனக் கருதி, அம்மாற்றங்களுக்கு அடிப்படையான காரணங்கள், மாற்ற வகைகள் போன்றவற்றை வரலாற்று நெறிமுறைகளின் அடிப்படையில் விளக்கினர். மொழிகளில் ஏற்படும் மாற்றங்களை ஒலிவகை, சொல்வகை, இலக்கண வகை, பொருண்மை வகை மாற்றங்கள் என வகைப்படுத்தி விளக்கினர். இம்மாற்றங்கள் மொழியில் தோன்றுவதற்குக் காரணமாக ஒலிமாற்றம், ஒப்புமையாக்கம், சமுதாயப் பண்பாடு, மனம், அமைப்பு, சமுதாயம் போன்றவைகளையும் குறிப்பிட்டனர்.

மொழிமாற்றமடைகிறது என்பதை விளக்க, தரவுகளாக ஒரு மொழியில் வெவ்வேறு காலக்கட்டங்களில் எழுதப்பெற்ற 'எழுத்து சாசனங்களை' (கல்வெட்டுக்கள், செப்புப் பட்டையங்கள், ஓலைச் சுவடிகள் போன்றவை) எடுத்துக்கொண்டு அவைகளில் காணப்படும் சொற்கள், இலக்கணக்கூறுகள், தொடர்கள்

போன்றவற்றைத் திரட்டி, அவைகளை ஒப்பிட்டு, அவைகளில் தோன்றும் ஒலி, சொல், தொடர், பொருண்மை, இலக்கணம் ஆகியவை சார்ந்த வேறுபாடுகளைக் கண்டுணர்ந்து விளக்க முயன்றனர். வெவ்வேறு காலக்கட்டங்களில் எழுந்த எழுத்துப் படைப்புக்களை ஒப்பிட்டு, மொழிக் கூறுகளின் வேறுபாடுகளைக் கண்டு கொள்ளுதல் என்ற வழிமுறையை மொழிமாற்றத்தை விளக்குவதற்கான வழிமுறையாகக் கொண்டனர். மொழி மாற்றத்தைக் குறித்த விளக்கத்தை வழங்கும் மொழி வரலாற்றியல் ஆய்வு நெறிமுறைகள் அறிவியல் அடிப்படையிலானவை. காரணம், மொழிக்கூறுகளை வெளிப்படையாக ஒப்பிடுதல், வேறுபாடுகளைக் காணல், இவ்வேறுபாடுகள் ஒருசில கூறுகளில் மட்டுமன்றிப் பல கூறுகளிலும் சீர்மையாக வெளிப்படுதலைக் காணல் என்ற வழிமுறைகள் தற்சார்பற்ற தன்மையிலிருப்பதால் இந்த அணுகுமுறை அறிவியல் நெறிமுறைகளைப் பின்பற்றுகிற அணுகுமுறை எனலாம். தமிழை அடிப்படையாகக் கொண்டு தமிழின் வரலாற்றுப் போக்கை இத்தகைய அணுகுமுறைகளைக் கொண்டு உற்றுநோக்கும் போது, பழந்தமிழ் பல்வகை மாற்றங்களுக்கு உட்பட்டு இன்றைய நிலையில் தற்காலத் தமிழாக நிலைபெறுகிறது என்பதை நிலைநாட்டலாம்.

காலப்போக்கில் மொழியானது பல மாற்றங்களுக்கு உள்ளாகிப் புதிய மொழிகள் உருவாகக் கூடும் என்ற கருதுகோளை மனத்திற் கொண்டு, மொழிகளின் பிறப்பை விளக்கப் பத்தொன்பதாம் நூற்றாண்டு மொழியியல் அறிஞர்கள் முயன்றனர். ஒரு மூல மொழி பல்வேறு காலக்கட்டங்களில் மாற்றங்களுக்கு உள்ளாகி, பல புதிய தனியான மொழிகளைப் பிறப்பிக்கக் கூடும். இவ்வாறு மூல மொழியிலிருந்து பிறந்த உடன் பிறப்பு மொழிகள் தங்கள் மொழிக்கூறுகளிலும், அமைப்புகளிலும் சில ஒற்றுமைகளைக் காண்பிக்கக் கூடும். இம்மொழிகள் அனைத்தையும் ஒரே குடும்பத்தைச் சார்ந்த மொழிகள் எனக் கொண்டு மொழிக் குடும்பங்களை நிலைநாட்டலாம். இவ்வாறு ஒரு குடும்பத்தைச் சார்ந்த மொழிகள் எனக் கருதப்படுபவைகளின் கூறுகள், அமைப்புகள் ஆகியனவற்றை ஒப்பிட்டு ஓரளவுக்கு இம்மொழிகளின் தாயாக இருந்த மூலமொழியை மீட்டுருவாக்கம் செய்யலாம். இத்தகைய கருத்துக்கள் அனைத்தையும் கருதுகோள்களாகக் கொண்டு உடன்பிறப்பு மொழிகளின் ஒற்றுமைப் பண்புகளின் வாயிலாக மூல மொழியை மீட்டுருவாக்கம் செய்யலாம் என நிறுவுவதற்கான ஆய்வு நெறிமுறைகளை 'ஒப்பீட்டு அணுகுமுறை' எனலாம். வில்லியம்

ஜோன்ஸ் என்ற அறிஞர் நிகழ்த்திய இந்தோ ஐரோப்பிய மொழி ஆய்வு இதில் முக்கியமானது. கிரேக்கம், ரோமன், சமஸ்கிருதம் ஆகிய மூன்று பழைமையான மொழிகளின் சொற்களை ஆராய்ந்த அவர் இம்மூன்று மொழியின் சொற்களும் மிக நெருக்கமானவை எனத் தோன்றுவதாகவும் அவைகளின் ஒலிவேறுபாடுகளைச் சில ஒலி விதிகளின் வாயிலாக விளக்க முடியும் எனவும் வெளியிட்டார். அந்த விளக்கமே இந்தோ-ஐரோப்பிய மொழிக் குடும்பத்தைச் சார்ந்த மொழிகளைக் குறித்த தீவிரமான ஒப்பாய்வுக்கு வழிவகுத்தது எனலாம்.

ஒப்பீட்டு நெறிமுறைகளைக் கையாண்டு மூலமொழிகளை நிர்மாணிக்கும் அல்லது மீட்டுருவாக்கம் செய்யும் பணிக்குப் பிறப்பால் தொடர்புடையவை எனக் கருதப்படுகின்ற பல மொழிகளில் படைக்கப்பட்ட எழுத்துப் படைப்புகளையும் அகராதிகளையும் திரட்டவேண்டும். அவைகளிலிருந்து வடிவத்திலும், பொருண்மையிலும் தொடர்புடைய சொற்களை (Cognates) அதாவது பிறப்பால் தொடர்புடைய சொற்களை இனம் காணவேண்டும். அவைகளை ஒப்பிட்டுப் பார்த்து, அச்சொற்களிடையே காணப்படும் வேறுபாடுகள் சீர்மைத் தன்மையையும், ஒழுங்கமைவையும் காட்டுகின்றனவா என்பதைக் கண்ணுறவேண்டும். அவ்வாறு பலமொழிச் சொற்கள் சீரான ஒலிவேறுபாடுகளைக் கொண்டிருந்தால் அவைகளைப் பட்டியலிடவேண்டும். எந்தச் சொல்லிலிருந்து பிற சொற்களை எளிதில் விதிவழியில் பெறமுடியும் என ஆராய்ந்து அதை மூலமொழிக் கூறு எனக் கணிக்க வேண்டும். ஆக, பிறப்பால் தொடர்புடைய மொழிச் சொற்களின் வேறுபாடுகளைக் காணல், அவைகளின் சீர்மைத்தன்மையை நிலைநாட்டல், உரிய மூலக் கூறுகளை உருவாக்குதல் என்ற செயற்பாடுகள் அறிவியல் சார்ந்த, எல்லோருக்கும் புலப்படும் வகையிலான செயற்பாடுகள். இதனால் ஒப்பீட்டு அணுகுமுறை ஓர் அறிவியல் அணுகுமுறை எனக் கூறலாம்.

பிறப்பால் தொடர்புடைய மொழிகளைக் கண்டு, அவைகளை ஒப்பிடுவதன் வாயிலாக மூலமொழியை நிலைநாட்டும் முயற்சியை 'மீட்டுருவாக்க முயற்சி' எனலாம். மூலமொழியை நிலை நாட்டும் வகையிலான வரலாற்று ஆய்வுகள் மொழிக் குடும்பங்களை நிலைநாட்டி, அதில் அங்கமாகின்ற தொடர்பான மொழிகளின் உறவு நிலையின் அளவையும் கணிக்க உதவுகின்றன. இத்தகைய ஆய்வின் வாயிலாக உலகின் பல மொழிக் குடும்பங்கள், குறிப்பாக, இந்தோ ஐரோப்பிய மொழிக் குடும்பம் போன்ற பெரும்

மொழிக் குடும்பங்களையும், இந்தோ இரானியன், இந்தோ ஆரியன் போன்ற சிறு மொழிக் குடும்பங்களையும் நிலைநாட்டியுள்ளனர். இந்தியாவில் இந்தோ ஆரியன், திபத்தோ பர்மன், ஆஸ்திரோ ஏசியாட்டிக், திரவிடன் என்ற நான்கு மொழிக் குடும்ப மொழிகள் பேசப்படுகின்றன எனவும், திராவிட மொழிக் குடும்பத்தில் தென், நடு, வட திராவிட மொழிக் குடும்பங்கள் அடங்குகின்றன எனவும் நிலைநாட்டியுள்ளனர்.

மூலமொழியை நிலைநாட்டுவதோடு தொடர்புடையதென நான்கு வகையான வழிமுறைகள் பின்பற்றப்படுகின்றன. அகவழி முறையால் மூலமொழியைக் காணல், புறவழி முறையால் மூல மொழியைக் காணல், மூல மொழியின் நிலைபேற்றுக் காலம் கணித்தல், மூல மொழிக் கூறுகளைத் தற்கால மொழி வழக்குகள் தக்கவைத்துக் கொண்டிருப்பதைக் காணல் என்ற நான்கு வழிமுறைகள் மூலமொழியை நிலைநாட்டுவதோடு தொடர்புடையவை. அகவழி முறையால் மூலமொழிக் கூறுகளை ஓரளவுக்கு நிலைநாட்டலாம். இதற்காகப் பிறப்பால் தொடர்புடைய தற்கால மொழிகளில் வெளிப்படும் சொல் திரிபுகளைக் கண்டு அதன் மூலம் பழைய மொழிக்கூறுகளை நிலைநாட்டலாம். பிறப்பால் தொடர்புடைய மொழியின் சொற்களைப் பட்டியலிட்டு அவைகளை ஒப்பிட்டு மூல மொழிச் சொற்களை நிலைநாட்டுதல் என்பதைப் புறவழி முறையால் நிலைநாட்டுதல் எனலாம். உலகில் காணப்படும் மொழிகளில் சுமார் 200 அடிப்படைச் சொற்கள் உள்ளன எனவும், இவை கால ஓட்டத்திற்கு ஏற்பப் படிப்படியாக அழியும் தன்மை கொண்டவை எனவும் கருதி, இந்த அடிப்படைச் சொற்களில் எத்தனை சொற்கள் மூல மொழியில் உள்ளன எனக் கண்டுபிடித்து அந்த எண்ணிக்கையைக் கொண்டு ஒரு சமன்பாட்டின் உதவியால் மூலமொழி எத்தனை நூற்றாண்டுகளுக்கு முன் பழக்கத்தில் இருந்தது என்பதைக் கணிக்க இயலும். இத்தகைய முறையைச் 'சொற்புள்ளியியல் முறை' என அழைப்பர். கிளைமொழிகளை ஆராயும்போது, சில சொற்கள் சிறப்பானவையாகவும், பழமையானதாகவும் உணரப்பட்டு அவை மூல மொழியிலிருந்து பெறப்பட்டுத் தக்கவைத்துக் கொண்ட வடிவம் எனவும் கருத வாய்ப்பு ஏற்படலாம். அவ்வாறு கிளைமொழி ஆய்வு வழியாக மூலமொழிக் கூறுகளை இனங்காணும் முறையும் உள்ளது. ஆக, மூலமொழிக் கூறுகளை நிலைநாட்டும் செயலோடு தொடர்புடைய நான்கு வழிமுறைகள் உள்ளன என நிறுவப்படுகிறது.

மூலமொழியையும் அதிலிருந்து பிறந்த மொழிகளையும், குறிப்பாக வெவ்வேறு காலக்கட்டங்களில் பிரிந்த மொழிகளை அவைகளின் சொல்வடிவ வேறுபாடுகளின் அளவையை அடிப்படையாகக் கொண்டு ஒருவகைக் காலப் படிநிலை அமைப்பில் நிறுத்திக் காட்டுவர். இந்தக் கிளையமைப்பு எந்தமொழி எந்தக் காலக்கட்டதில் மூலமொழியிலிருந்து பிறந்தது எனக் காட்டுகின்ற தன்மையில் இருக்கும். இதை மொழிப் பரம்பரையை, மொழிக் குடும்பத்தின் மொழிக் குழுமங்களைக்காட்டும் வரைபடம் எனவும் கருதலாம். இத்தகைய, மொழிப்பரம்பரை, மொழிப் பிறப்பு குறித்த கோட்பாடுகள் பத்தொன்பதாம் நூற்றாண்டில் பிரபலமாக இருந்த உயிர்களின் பரிணாம வளர்ச்சி குறித்த கோட்பாடுகளின் தாக்கத்தால் எழுந்தவை எனக் கூறுவர். எவ்விதம் உயிர்கள் சூழ்நிலையின் தாக்கத்தால் பல வடிவங்களைப் பெற்று, வாழப் போராடி நிலைபெறும் தன்மையடைந்து, இனப்பெருக்கம் செய்து புதிய உயிரினங்கள் தோன்றுகின்றனவோ, அதைப்போன்று மொழியும் நிலைபேறு, மாற்றம், புதிய மொழிகளைப் பிறப்பித்தல், அழிவு ஆகிய பண்புகளைக் காட்டுகின்றன என விளக்கினர்.

பிறப்பு அடிப்படையில் மூலமொழியிலிருந்து பிறந்தவை எனக் கண்டுபிடித்து அவைகளை வகைப்படுத்தி மொழிக் குடும்பங்களை நிலைநாட்டும் முறை தோன்றியபோது, வேறு வகைகளிலும் மொழிகளை இணைத்து வகைப்படுத்த முடியுமா என்ற கேள்வியை அறிஞர்கள் எழுப்பினர். இதன் விளைவாக அவர்கள் மொழிகளின் வகைப்பாட்டைப் 'பிறப்பு அடிப்படையிலும், அமைப்பு, பரப்பு என்ற அடிப்படைகளிலும், மொழி உறவுகளை மையமாகக் கொண்டும் மொழிகளை இணைத்து வகைப்படுத்த முனைந்தனர். ஒரு மூல மொழியிலிருந்து பிறந்தவை என நிலை நாட்டப்பட்ட மொழிகள் பிறப்பு அடிப்படையில் வகைப்படுத்தப்பட்டன. ஒரே வகையான இலக்கண அமைப்பைக் கொண்ட மொழிகள் இணைக்கப்பட்டு அமைப்பு அடிப்படையில் வகைப்படுத்தப்பட்டன. இதில் தனிநிலை மொழிகள், ஒட்டுநிலை மொழிகள், கலவைநிலை மொழிகள் என்ற வகைப்பாடுகள் முக்கியமானவை. இத்தகைய மொழி வகைப்பாட்டில் சபீர், கிரீன்விச் போன்ற அறிஞர்கள்அதிக ஈடுபாட்டைக் காட்டினர். ஒரே நிலப்பரப்பில் தோன்றுகின்ற வேவ்வேறு மொழிக் குடும்பங்களைச் சார்ந்த மொழிகள் பரப்பு அடிப்படையிலான தொடர்பின் காரணமாக மொழிக்கூறுகளைத் தங்களுக்கிடையே பரிமாறிக்கொள்வதன் வாயிலாக, சில கூறுகள் பல மொழிக் குடும்ப மொழிகளில் தோன்றுவதோடு,

ஒற்றுமையைக் காட்டியவாறு நிற்கின்றன. இத்தகைய தாக்கத்திற்கு உள்ளான மொழிகளை ஒருங்கிணைத்து வகைப்படுத்தும்போது, அது 'பரப்பு அடிப்படையிலான மொழி வகைப்பாடு' ஆகிறது. இந்தியாவைப் பல மொழிகள் வழங்கும் நிலப்பரப்பு எனக் கொண்டு, அதில் இந்தோ ஆரியன், திபத்தோ பர்மன், ஆஸ்திரோ ஆசியாட்டிக், திராவிடம் என்ற மொழிக்குடும்ப மொழிகள் உள்ளன எனவும், இவைகளினிடையே நிகழ்ந்த மொழிப்பரிமாற்றம், மொழிக்கூறுகளின் கொடுக்கல், வாங்கல் காரணமாக இந்தோ ஆரிய மொழிகளில் பிறமொழிக் கூறுகளும், திராவிடம் போன்ற மொழிகளில் பிறமொழிக் கூறுகளும் உள்ளதை அறிஞர்கள் நிலைநாட்டியுள்ளனர். குறிப்பாக நாவளை ஒலிகள், ஒலிக்குறிப்புச் சொற்கள், எதிரொலிப்புச் சொற்கள் போன்றவை திராவிட மொழிகளிலிருந்து பிற இந்திய மொழிக் குடும்ப மொழிகளுக்குப் பரவின என எமினோ என்ற அறிஞர் விளக்குவார். காலின் மாசிகா என்ற அறிஞர் தென்கிழக்கு ஆசியாவை ஒரு மொழி இணக்கப் பரப்பு எனக் கொண்டு அதில் நிலைபெறும் பல மொழிக்குடும்ப மொழிகளில் சில பொதுவான ஒலி, சொல், இலக்கணக் கூறுகள் இருப்பதைக் கண்டுபிடித்து வெளியிட்டுள்ளார். ஆக, பிறப்பு அடிப்படையிலான மொழிவகைப்பாட்டை வரலாற்று மொழியியலறிஞர்களும், குறிப்பாக இந்தோ-ஐரோப்பிய மொழி இயல் அறிஞர்களான ஸ்லைச்சர் போன்றோரும், அமைப்பு நிலை மொழிவகைப்பாட்டை அமெரிக்க அமைப்பு மொழியியல் அறிஞர்களான சபீர், கீரின்விச் போன்றோரும், பரப்பு நிலை மொழி வகைப்பாட்டைப் பொதுவாகச் சமுதாய மொழியியல் அறிஞர்களும், இந்தியாவையும் ஆசியாவையும் அடிப்படையாகக் கொண்டு எமினோ, மாசிகா போன்ற அறிஞர்களும் விளக்குகின்றனர்.

பிறப்பால் தொடர்புடைய மொழிகளில், அமைப்பாலும் பொருண்மையாலும் தொடர்புடையன எனக் கருதப்படும் கூறுகளை இனங்கண்டு, அவைகளின் ஒற்றுமை, வேற்றுமைகளை முறையே வகைப்படுத்தி, அதன் வாயிலாக மூல மொழியை மீட்டுருவாக்கம் செய்து, அம்மொழியிலிருந்து வெவ்வேறு காலக்கட்டங்களில் பிரிந்த மொழிகளைக் கிளையமைப்பு வடிவில் சுட்டிக்காட்டி, மொழிக்குடும்பங்களையும், மூலமொழி யமைப்பையும் நிலைநாட்டுகின்ற வரலாற்று ஒப்பீட்டு நெறிமுறைகள் அறிவியல் சார்ந்தவை எனலாம். ஆகவே வரலாற்று ஆய்வு முறைகளும், வரலாற்று மொழியியலும் அறிவியல் அடிப்படையில் நிலைபெறுவன எனக் கூறலாம்.

## ஒலி

ஒலியலைகளின் தொடர்ச்சியைப் பேச்சு காட்டுகிறது என்றாலும் அதில் சொற்கள், தொடர்கள் உள்ளன எனவும், அவைகளில் ஒலிகள் இணைந்தவாறு காணப்படுகின்றன எனவும் கண்டறிந்தது மிகப்பெரிய கண்டுபிடிப்பு எனலாம். சொல்லிலும், தொடரிலும் காணப்படும் ஒலிகளை இனங்கண்டு அவைகளுக்கான வரி வடிவத்தை வழங்க முயற்சித்ததன் விளைவாக உலக மொழிகளில் பலவகையான எழுத்துக்கள் உருவாக்கப்பட்டன. ஒலி எழுத்துக்கள், அசை எழுத்துக்கள், பட எழுத்துக்கள் எனப் பல வகையான வரிவடிவங்கள் ஒலியையும், அசையையும், சொற்களையும் குறிப்பதற்காகத் தோன்றின.

பேச்சில் உள்ள ஒலியலைகளின் தொடர்ச்சி கண்ணுக்குப் புலப்படாவிட்டாலும் அவைகளை வெளிப்படையாக உணர்ந்து கொள்வதற்காக, ஒலியின் பண்புகள் ஆராயப்பட்டு, ஒலிகளின் பிறப்பு, பரவல், கேட்டுணர்தல் என்ற மூவகைப் பண்புகள் உணரப்பட்டன. இம்மூன்று பண்புகளை மூன்று வகையான ஒலியியல் துறைகள் விளக்க முற்படுகின்றன.

ஒலிகளின் பிறப்பு பற்றிய சிந்தனைகளின் வாயிலாக, மூச்சு உறுப்புகள், மூச்சு செல்லும் அறைகள், அவைகளில் காணப்படும் உறுப்புகள், அவைகளின் இயக்கம், அவ்வுறுப்புகள் தொடும் இடங்கள் முதலியன துல்லியமாக ஆராயப்பட்டன. நுரையீரலிலிருந்து வெளிப்படுகின்ற காற்று (மூச்சு), மூச்சுக்குழல் வழியாகக் குரல்வளையை அடைந்து, குரல் வளையில் இருக்கும் தசைநார் உறுப்பு (Vocal cords) வழியாக வெளியேறி, தொண்டை, வாய், மூக்கு என்ற அறைவழியாகச் செல்லுகையில் பல இடங்களில் தடைசெய்யப்பட்டோ, தடைசெய்யப்படாமல் வெளியேற்றப்படும் போது பலவகை ஒலிகள் பிறக்கின்றன என நிறுவப்பட்டது. குரல் வளையிலுள்ள தசை நார் உறுப்பின் அதிர்வால் குரல் ஒலியும் (உயிர், மூக்கினமெய், போன்றவை), அதிர்வின்மையால் குரலில்லா ஒலியும் பிறக்கின்றன. வாய் வழியாக மூச்சுக்காற்று தடை செய்யப்படாமல் வெளியேறினால் உயிரொலிகளும், தடைசெய்யப்பட்டு வெளியேறினால் மெய்யொலிகளும் பிறக்கும் எனவும், தடைசெய்யப்பட்ட மூச்சுக்காற்று மூக்கறை வழியாக வெளியேறினால் மூக்கின் ஒலி (மெல்லின ஒலிகளும்) பிறக்கும் எனவும் விளக்கப்பட்டது. ஆக, ஒலிகளின் பிறப்பில் குரல்வளை, தொண்டை, வாய், மூக்கு என்ற அறைகள் முக்கியப் பங்கைப் பெறுகின்றன என விளக்கப்பட்டது.

ஒலிகளில், முக்கியமாகத் தனிநிலை ஒலிகள், சார்புநிலை ஒலிகள் (Segmental, Supra Segmental) என இருவகைகள் உள்ளன. தனிநிலை ஒலிகளில் உயிர் ஒலி, மெய் ஒலி (Vowels & Consonants) என இருவகைகள் உள்ளன.

உயிர் ஒலிகள் மூச்சுக்காற்று தடையுறாமல் வெளியில் செல்வதால் பிறக்கின்றன எனப் பொதுவாகக் கூறிவிட்டு, அவைகளின் வகைகளை விளக்குவதற்காக நாவின் முன், இடை, பின் என்ற நிலைப்பாடும் நாவின் மேல் நடு கீழ் என்ற நிலைப்பாடும் உதடுகள் குவிதல், குவியாமை என்ற பண்பும் அடிப்படையாகக் கொள்ளப்பட்டன. நாக்கு மேல் நிலையில் நிற்பதால் இ,உ என்ற ஒலிகளும், நாக்கு நடுநிலையில் நிற்பதால் எ,ஒ என்ற ஒலிகளும், நாக்கு கீழ்நிலையில் நிற்பதால் 'அ' என்ற ஒலியும் தோன்றுகின்றன. நாக்கு முன்புறம் நிற்பதால் இ,எ என்ற ஒலிகளும், நாக்கு இடையில் நிற்பதால் 'அ' என்ற ஒலியும், நாக்கு பின்புறம் நிற்பதால் உ,ஒ என்ற ஒலிகளும் தோன்றுகின்றன. உதடு குவிவதால் உ,ஒ என்ற ஒலிகளும், உதடுகுவியாமையால் இ,எ,அ என்ற ஒலிகளும் பிறக்கின்றன எனலாம். இப்பண்புகளைக் கொண்டு பலவகையான உயிர் ஒலிகள் உருவாவதை விளக்க, ஒலியியலார் முயன்றனர். உயிரொலி பிறப்புக் காட்டும் அட்டவணை பின்வருமாறு :

| | முன் | | இடை | | பின் | |
|---|---|---|---|---|---|---|
| | குவியா உதடு | குவி உதடு | குவி உதடு | குவியா உதடு | குவியா உதடு | குவி உதடு |
| மேல் | இ i | ï | | | | u உ |
| | I | Ï | | | | ʊ |
| நடு | எ e | ë | | | | |
| | E | Ë | | | | o ஒ |
| | | | | | | ɔ |
| கீழ் | æ | æ̈ | | | | |
| | a | ä | | அ | | |

உயிர் ஒலிகளில் நாவின் அதிகப்பட்ச உயர்வு, தாழ்வு, முன்புறம், பின்புறம் ஆகியனவற்றால் ஒலிக்கப்படும் ஒலிகளைக் 'கார்டினல்' உயிரொலிகள் என அழைத்தனர்.

மெய்யொலிகளில் பல வகைகள் ஒலிக்கப்படும் விதத்தை விளக்குவதற்காக நகரும் உறுப்பு, உறுப்பு தொடுகின்ற ஒலிப்பு

இடம், ஒலிப்பு முறை என்ற 3 பண்புகள் அடிப்படையாகக் கொள்ளப்பட்டன. நகரும் உறுப்புகளாக, உதடு, நா என்பவைகளையும் நகராத உறுப்பாக அதாவது நகரும் உறுப்பு தொடும் இடங்களாக, உதடு, பல், பல் ஈறு, அண்ணம், நடுமேல்வாய், பின்புற மேல்வாய் என்பவைகளையும், ஒலிப்பு முறைகளாக, மூச்சுக்காற்றைத் தடைசெய்து வெளித்தள்ளுதல், உரசி வெளித்தள்ளுதல், தடை செய்து பின் உரசி வெளித்தள்ளுதல், மூக்கு வழியாக வெளித்தள்ளுதல், நாவின் பக்கவாட்டின் வழியாக வெளித்தள்ளுதல், தட்டி வெளித்தள்ளுதல், அதிர்வோடு வெளித்தள்ளுதல் என்பவைகளையும் குறிப்பிட்டு இவைகளின் மொத்த இயக்கத்தால் மெய்யொலி பிறக்கிறது என விளக்கப்பட்டது.

| | உதடு | உதடு | நா | நா | நா | நா | நா | குரல்வளை |
|---|---|---|---|---|---|---|---|---|
| | உதடு | பல் | பல் | பல்ஈறு | அண்ணம் | முன்வாய் | பின்வாய் | |
| தடை | p/b | | t/d | t/d | ṭ/ḍ | c/j | k/g | |
| உரசல் | | f/v | | s/z | ṣ/ẓ | | | |
| தடை+ உரசல் | | | | | | č/ǰ | | |
| மூக்கு | m | | n̠ | n | ṇ | ñ | ṉ | |
| நாமருங்கு | | | | l | ḷ | ḻ | | |
| தட்டு | | | | ɾ | ɽ | | | |
| அதிர்வு | | | | r | | | | |
| உயிர்ப்பு | | | | | | y | w | |

ஆக, மூச்சு தடையின்றி வெளியேறுவதால் உயிர் ஒலிகள் உருவாகின்றன எனவும், நாவின் உயர்நிலை, தாழ்நிலை, நடுநிலை, முன்நிலை, இடைநிலை, பின்நிலை, உதட்டின் குவிதல், குவியாமை என்பவைகளால் பல்வேறு உயிர் ஒலிகள் பிறக்கின்றன எனவும் விளக்கப்படுகின்றன. மூச்சு தடைப்பட்டு வெளியேறுவதால் மெய்யொலிகள் பிறக்கின்றன எனவும், நகரும் உறுப்புகளால் உதடு, நாவின் நுனி, நடுப்பகுதி, கடைசிப்பகுதி ஆகியன அவை தொடுகின்ற ஒலிப்புத்தானங்களான உதடு, பல், பல்ஈறு, அண்ணம், நடுமேல்வாய், பின்மேல்வாய் என்பவைகளைத் தொட்டு, மூச்சுக்காற்று தடைப்பட்டு, உரசி, அதிர்ந்து, தட்டி, நா மருங்கு வழியாக, வாய்வழியாக, மூக்குவழியாக வெளியேறும் முறையால்

பல மெய்யொலிகள் தோன்றுகின்றன எனவும் விளக்கப்படுகின்றன. இத்தகைய விளக்கங்கள் ஒலியின் பிறப்புக் குறித்த விளக்கங்களாகின்றன.

ஒலிகள் அலை வடிவில் காற்றில் பரந்து, காதுகளில் விழுந்து உணரப்படுகின்றன. ஒலி பரவும் விதத்தை இயற்பியல் அடிப்படையில் ஆராய்ந்து, ஒலி அலை வடிவில் பரவுகிறது எனக்கொண்டு ஒலியலைகளின் பண்பையும் சோதனை வாயிலாக விளக்குவர். ஒலிகளை மின்னலைகளாக மாற்றி அலைகளைக் காட்சி வடிவத்தில் காட்டுவதற்காக ஸ்பெக்ட்ரோகிராப், ஆசில்லோகிராப் போன்ற கருவிகள் பயன்படுத்தப்படுகின்றன. இவ்வாறு காட்சி வடிவத்தில் பெறப்படும் ஒலியலைகள் மேடு பள்ளங்களைக் கொண்ட அலைகளின் தொடர்ச்சியைக் காட்டுகின்றன. இத்தகைய ஒலியலைகளின் வடிவங்களையும், எண்ணிக்கையையும், அவைகளின் ஒலிப்புக்கான நேரத்தையும் கருத்திற்கொண்டு ஒலியின் பரவல் பண்புகளைக் கண்டறிந்துள்ளனர்.

ஒலிகளின் அலைவடிவப் படத்தில் காற்றுக் கூறுகளின் அழுத்தமும், அழுத்தமின்மையும் வெளிப்படுகின்றன. ஓர் ஒலி பெறுகின்ற அலைகளின் எண்ணிக்கையையும், அவை தோன்றும் மில்லிசெகன்டுகளையும் கணக்கிலெடுத்து ஒருசெகன்டில் எத்தனை அலைகள் தோன்றுகின்றன என்பதைக் கணித்து அந்த ஒலியின் வருகை எண்ணை (Frequency)க் கணித்தனர். ஓர் ஒலியை ஒலிக்கும்போது, எத்தனைமுறை ஒரே வகையான அலை திரும்பத் திரும்ப எத்தனை மில்லி செகன்டுகளில் தோன்றுகின்றது என்பதைக் கணித்து அவ்வொலியின் 'வருகை எண்ணைக்' கண்டுபிடிக்கலாம். ஓர் ஒலி 28 ஒரே வகை ஒலியலைகளை 11 செகன்டுகளில் காட்டுகிறது என்றால் அது 255 சுழற்சியை 1 செகன்டில் காட்டுகிறது என்று பொருள். இந்தச் சுழற்சி எண்ணை Hertz என்ற அளவையால் குறிப்பர். ஆகவே இந்த ஒலியின் 'வருகை எண்' 255 சுழற்சிகள் எனலாம். ஒலியலைகளின் எண்ணிக்கையை வைத்து ஒலியின் வருகை (Frequency)யைக் கணக்கிட்டது போல் ஒலியலைகளின் மேடு-பள்ள அளவை வைத்துக் காற்றின் அழுத்தத்தைக் கணக்கெடுத்து ஒலியின் காற்றழுத்தம் (amplitude) கண்டுபிடிக்கப்படும். அலையின் சுழற்சி வாயிலாக ஒலியின் pitchஉம், காற்றழுத்தம் வாயிலாக loudnessஐயும் கண்டு கொள்ளலாம். ஆக, ஒலியை அலை வடிவில் படமாக்கி, அவ்வலைகளின் Frequency, amplitude என்பவைகளைக் கணித்து அவைகளின் வாயிலாக ஒலியின் pitch, loudness என்ற பண்புகளைக்

கணிக்கலாம். ஒலிகளின் அலைவடிவங்களின் மாற்றத்தின் தோற்றத்தை Spectrum எனவும், இதைக்காட்டும் படத்தை Spectrum எனவும், இதைப் பெற வழிவகுக்கும் கருவியை Spectrogram எனவும் அழைப்பர்.

இந்த ஒலியலைப் படங்களையும், அவைகளில் தோன்றும் ஒலியலைகள், அவைகளின் எண்ணிக்கை, அவைகளின் குத்துக்கோட்டு அளவை, அவை ஒலிக்கப்படும் நேரம் இவைகளை அடிப்படையாகக் கொண்டு ஒலியலைப் பண்புகளைக் கண்டு அவைகளைக் கணினிக்கு வழங்கி, பேச்சைப் புரிந்து கொள்ளவும், பேச்சைப்படைக்கவும் தேவையான திறனைக் கணினிக்கு வழங்கும் முயற்சியில் கணினி ஒலியியலார் முயன்றுவருகின்றனர். இத்துறையைக் கணினி ஒலியியல்துறை என்பர்.

உயிர், மெய் என்ற ஒலிகளைத் தனிநிலை ஒலிகள் எனலாம். இவை பிரித்தெடுக்கப்படும் தன்மையிலும், தனித்து உச்சரிக்கப்படும் தன்மையிலும் உள்ளன. ஆனால் சில ஒலிப்புக் கூறுகள் தனிநிலை ஒலிகளோடும், தனிநிலை ஒலிகளால் ஆன தொடர்களோடும் சார்ந்து வருகின்றன எனக் கண்டு அவைகளைச் சார்பு நிலை ஒலிகள் என்பர். குரல் ஒலிப்பு, குரலிலா ஒலிப்பு, நெடில், குறில், அழுத்த ஒலிப்பு (Stress), இறுக்க ஒலிப்பு (pitch) போன்றவைகளைச் சார்புநிலை ஒலிப்புப் பண்புகள் எனலாம். இத்தகை ஒலிப்புப் பண்புகள் சொற்களின் பொருளை வேறுபடுத்தும் தன்மை கொண்டவையாதலால் இவை முக்கியமானவை என்று கருதப்படுகின்றன.

ஒலிகள் தொடர்நிலையில் நிற்கும்போது ஓர் ஒலியின் பண்பு மற்றொரு ஒலியின் மேல் தாக்கம் ஏற்படுத்துவதால் ஒலிகள் திரிந்த ஒலிப்புப் பண்புகளைப் பெறக்கூடும். இதை co-articulation என்பர். 'வந்தோம்' என்ற சொல்லின் ஈற்றில் நிற்கும் மகர மெய்யின் தாக்கத்தால் அதன் முன்வரும் ஓகாரம் மகர ஒலிப்பைப்பெறும். ஆங்கிலத்தில் keep என்ற சொல்லின் முதலில் தோன்றும் ககரம் இகரத்தின் தாக்கத்தால் முன்னோக்கி நகர்ந்த ஒலிப்பையும், cool என்ற சொல்லின் முதலில் தோன்றும் ககரம் உகரத்தின் தாக்கத்தால் பின்னோக்கி நகர்ந்த ஒலிப்பையும் பெறுகின்றன. பிற ஒலிகளின் ஒலிப்புப் பண்பு ஓர் ஒலிக்குத் தாக்கத்தின் காரணமாக வருவதைத் 'தாக்க ஒலிப்பாக்கம்' எனலாம். சிலமொழிகளின் சொற்களில் வரும் பல உயிரொலிகள் ஒரே இன உயிரொலிகளாக ஒலிக்கப்படுவதுண்டு. இதை vowel harmony என்பர். இத்தகைய தாக்க ஒலிப்பு ஆக்கத்தை prosody என்ற தலைப்பில் இலண்டன் மொழியியலார் விளக்குவர்.

இவ்வாறு ஒலிகள் பிற ஒலிகளின் தாக்கத்தால் மாற்றமடைவதை உணர்ந்து, ஒலிமாற்ற விதிகளையும் ஒலியியலார் கண்டு வெளியிட்டுள்ளனர். ஒலிமாற்ற விதிகளில் ஒலி தோன்றல், திரிதல், கெடுதல், ஓரினமாதல், வேறினமாதல் போன்ற பல வகைகள் உள்ளன எனவும், அவை வரிசைப்படுத்தப்பட்டவாறு தோன்றுகின்றன எனவும் கண்டுள்ளனர். இவ்வாறு வரிசைப்படுத்தப்பட்ட ஒலி மாற்ற விதிகளில் செம்மையான ஒலிப்பைக் கொண்ட ஒலித்தொடர்களைத் (சொற்கள்) தரும் வகையில் பிற விதிகள் செயல்பட ஏதுவாக வழிவகுக்கும் விதிவரிசைப்பாட்டை 'feeding' order' எனவும், பிற விதிகள் செயல்படாமல் தடைசெய்ய வழிவகுக்கும் விதி வரிசைப்பாட்டை 'bleeding order' எனவும் அழைப்பர். 'கற்றான்' என்ற சொல் கல்+த்+ஆன் என்ற உருபுகளின் தொடர்ச்சியிலிருந்து, ல்->ற்/–த், த்->ற்/ற்- என்ற இரண்டு விதிகளின் உதவியால் பெறப்படுகிறது. இதில் ல்-> த்-> ற் என்ற வரிசைப்பாடு இருந்தால் அதை feeding order எனவும், த்-> ற், ல்-> ற் என்ற வரிசைப்பாடு இருந்தால் அதை bleeding order எனவும் கருதலாம்.

| | | |
|---|---|---|
| | புதைவடிவம் | கல் + த் + ஆன் (மாற்றம்) |
| விதி1 | ல்-> ற்/–த் | கற்+த்+ஆன் (மாற்றம்) |
| விதி 2 | த்-> ற்/ற்- | கற்+ற்+ஆன் |
| | புதைவடிவம் | கல்+த்+ஆன் |
| விதி 2 | த்->ற்/ற்(-) | ------ விதிசெயல்படாது |
| விதி 1 | த்->ற்/–த் | கற்+த்+ஆன் (தவறான சொல்) |

தனி, நிலை ஒலிகள் அவைகளின் பிறப்பு அல்லது ஒலிப்புப் பண்புகளாலும், பரவல் அல்லது அலை வடிவப் பண்புகளாலும் விளக்கப்படுகின்றன. இந்தப் பண்புகளை மையமாகக் கொண்டும், ஒலிகளின் ஒற்றுமைவேற்றுமைகளை மையமாகக் கொண்டும், ஒலிகளைப் பகுப்பாய்வுக்கு உட்படுத்தி அவைகள் சில ஒலிநுண் கூறுகளின் தொகுப்பால் தங்கள் வடிவத்தைப் பெறுகின்றன என ஜேகாப்சன், ஃபண்டு, ஹேல்லே என்ற அறிஞர்கள் விளக்கினர். +,- என்ற மதிப்புக்களைப் பெற்ற 13 வகையான ஒலி நுண்கூறுகளின் உதவியால் உலக மொழிகளில் காணப்படும் ஒலிகள் அனைத்தையும் விளக்க முடியும் என நிலைநாட்டினர். ±, vocalic, ± voice போன்ற ஒலி நுண் கூறுகளின் உதவியால் உயிரொலி, மெய்யொலி போன்றவற்றின் அக ஒலிப்புப் பண்புகளை இனங்கண்டு, வேறுபடுத்தி விளக்கலாம் என நிலைநாட்டினர். இது ஒலியியல்

ஆய்வில் ஒரு திருப்பு முனையாக அமைந்தது. இத்தகைய ஆய்வின் வாயிலாக இலக்கணக் கூறுகள், பொருண்மைக் கூறுகள் போன்றவற்றைப் பகுப்பாய்வு செய்து உரிய நுண்கூறுகளைக் கண்டுபிடிக்கலாம். இதை மையமாகக் கொண்டு ஆங்கிலத்தின் ஒலி அமைப்பையும், ஒலி மாற்றங்களையும் சாம்ஸ்கி, ஹேல்லே போன்றவர்கள் விளக்கினர். ஆக, மொழியின் ஒலிகள் மறைநிலையிலுள்ள கூறுகளாகவும், வாய்க்கும் செவிக்கும் புலப்படுவதாகவும், ஒலியலைகளாக உருவெடுத்து உடனடியாகக் காற்றில் கலந்து விடும் தன்மையானதாகவும் இருந்தாலும் அவைகளை உணரவும், வடிவமைக்கவும் தேவையான வழிமுறைகளை, குறிப்பாக ஒலிப்பிறப்பு, ஒலிபரவல் என்பவைகளை உணர்வதற்கான வழிமுறைகளை வெளிப்படையாக வழங்குவதில் ஒலியியல் துறை அறிஞர்கள் கொண்ட ஈடுபாடு, ஒலியியலை ஒருவகை அறிவியல் என நிலைநாட்டியது. இத்துறை உடலியல் துறை, இயற்பியல் துறை ஆகிய துறைகளில் நிகழ்ந்த ஆய்வுகளையும் எடுத்துக் கொண்டு ஒலிகளை வெளிப்படையாக்க முயன்றதால் இது ஒரு அறிவியல் துறையாக வளர்கிறது.

**ஒலியன்**

புதிய உண்மைகளை நிலைநாட்டுதல் அல்லது மறை நிலையில் இருப்பவைகளை எல்லோரும் ஏற்றுக்கொள்ளும் வகையில் வெளிப்படுத்தல் என்பது அறிவியலின் பண்பாகும். அமைப்பு மொழியியலார் மொழியில் புதைந்திருக்கும், அமைப்பை வெளிக்கொணரும் வழிமுறைகளை வழங்குகின்றனர். இவைகளை 'அமைப்பியல் நெறிமுறைகள்' (Structural Method) என்பர். குறிப்பாக, அமைப்பியல் மொழியியலார், மொழியில்ஒலி, ஒலியன், உருபன், சொல், தொடர் போன்ற கூறுகள் உள்ளன எனக்கருதி அவைகளைக் கண்டுகொள்ளும் வழிமுறைகளையும் அவை ஒன்றோடொன்று இணைந்து பெருங்கூறுகள் உருவெடுப்பதைக் கண்டு கொள்ளத் தேவையான வழிமுறைகளையும் வகுத்துக் காட்டியுள்ளனர். இதனால் அமைப்பியல் வகை மொழியியலை அறிவியல் சார்ந்த துறை எனலாம். அமைப்பு மொழியியல் கைக்கொள்ளும் வழிமுறைகள் பெரும்பாலும் 'கூறுகளையும், கூறுகளின் பண்புகளையும் கண்டு, அவைகளை வகைப்படுத்துவதற்கான வழிமுறைகள் (discovery procedures) எனலாம்.

ஒலியன் என்ற மொழிக்கூறு மொழிகளில் உள்ளது எனவும், அவை சொற்களின் பொருள் வேறுபாட்டைச் சுட்டிக்காட்டும் வகையில் உள்ளன எனவும், அவைகளின் இணைவால்

உருபன்களும், சொற்களும் உருவாகின்றன எனவும், அவை மொழி பேசுபவர்களின் மனத்தில் உறைந்திருந்தாலும் கூட, மனத்தில் மனநிலை உண்மையாக உறைந்திருந்தாலும்கூட சில வழிமுறைகளின் வாயிலாக அவைகளை இனங்கண்டு, வகைப்படுத்தி அவைகளின் இணைவை விளக்க முடியும் என அமைப்பு மொழியியலார் கருதினர்.

மொழியில் காணப்படும் ஒலியன்களை நிலைநாட்டத் தரவுகள் தேவை. இத்தரவுகள் பேச்சுமொழி வடிவில் இருக்கும் சொற்கள், தொடர்கள் உரைக்கோவைகள் போன்றவற்றை மொழி பேசுபவர்களிடமிருந்து ஒலி நாடா வாயிலாகப் பதிவு செய்து அவைகளை ஒலிபெயர்ப்புக்கென உருவாக்கப்பட்ட குறியீடுகளைக் கொண்டு, குறிப்பாக IPA குறியீடுகளைக் கொண்டு ஒலிபெயர்ப்புச் செய்வதன் மூலம் கிடைக்கின்றன.

ஒலியன்களைக் கண்டுபிடிப்பதற்கான சில வழிமுறைகள் அமைப்பு மொழியியலாரால் வெளியிடப்பட்டுள்ளன. முதலில் minimal pair என்ற சொல் இணைகளைக் காணவேண்டும். ஒரு மொழியில் தோன்றுகின்ற வேறுபட்டவை எனக் மொழிபேசுபவர்களால் கருதப்படுகின்ற, ஒரே ஒரு ஒலியில் மட்டும் வேறுபட்டுத் தோன்றுகின்ற இரண்டு சொற்களை 'minimal pair' எனலாம். 'அடை:இடை' என்பவைகளைக் குறைந்தபட்ச ஒலி வேறுபாட்டுச் சொல்லிணைகள் எனலாம். இவை பொருளில் வேறுபட்டவை; அ :இ என்ற ஒரு ஒலியில் மட்டும் வேறுபட்டுத் தோன்றுகின்றன. இந்தச் சொல் இணைகளை இனங்கண்டு, அச்சொற்களின் வேறுபாட்டுக்குக் காரணமாக அமையும் தனி ஒலிகளைக் (அ:இ) கண்டு கொண்டால் அவைகளை 'ஒலியன்கள்' என நிறுவலாம். இந்த அடிப்படையில் தமிழில் காணப்படும் உயிர் ஒலியன்களை, தகுந்த சொல்லிணைகளை இனங்காண்பதன் மூலம் நிலைநாட்டலாம்.

| | | |
|---|---|---|
| இலை | அடை | ஆடை |
| அலை | இடை | |
| உலை | உடை | |

மொழியில் காணப்படும் ஒலியன்கள் சில பண்புகளைக் கொண்டவை. அவை, பிற ஒலியன்களோடு தொடர்ச்சி நிலையில் நிற்கும்போது, பிற ஒலியன்களின் தாக்கத்தால் அவைகளின் ஒலிப்பில் வேறுபாடு தோன்றுவதுண்டு. ஒலிப்பில் மாற்றம் அடைந்த ஒலியனின் வேறுபட்ட வடிவங்களை ஒலியனின் மாற்று

வடிவம் எனவும் 'மாற்றொலி' எனவும் அழைக்கலாம். மாற்றொலிகள் ஓர் ஒலியனின் கீழ் வருவனவாகவும், சொற்களையும் சொற்களின் பொருளையும் வேறுபடுத்தும் தன்மையற்றதாகவும், பிற ஒலிகளோடு சேர்ந்து தோன்றும் ஒலிச்சூழலால் ஒலிப்பில் வேறுபடுவனவாகவும், ஆயினும் அவை ஒலிப்புத் தொடர்பு கொண்டவையாகவும், ஒரே இடத்தில் தோன்றாத் தன்மையுடையதாகவும் இருக்கும். தமிழில் 'க்' என்ற ஒலியனின் கீழ் k, x, g என்ற மூன்று மாற்றொலிகள் அடங்குகின்றன என நிறுவலாம். இதில் x என்ற மாற்றொலி இரண்டு உயிர் ஒலிகளுக்கு இடையிலும், g என்ற மாற்றொலி 'ங்' என்ற மெல்லின ஒலியின் பின்னரும், k என்ற மாற்றொலி பிற இடங்களிலும் தோன்றுகின்றன (கடல்/kaṭal, /தங்கம்/tangam தாகம்/tāxam/). ஒலியன்களை / / என்ற அடைப்புக் குறியீட்டின் உள்ளேயும், மாற்றொலிகளை [ ] என்ற அடைப்புக் குறியீட்டின் உள்ளேயும் அடக்கி அவை தோன்றும் சூழலையும் பின்வருமாறு அமைப்பு மொழியியலார் குறிப்பிடுவர்




மாற்றொலிகளை இனங்கண்டு தகுந்த ஒலியன்களோடுக் இணைக்க, ஒலிப்பில் நெருக்கத்தன்மை, சொல்லை வேறுபடுத்தாத் தன்மை, ஒரே இடத்தில் தோன்றாத் தன்மை என்ற பண்புகள் கைக்கொள்ளப்படும். ஆக, மொழியில் ஒலியன்களும் அவைகளின் உள்ளடங்கும் மாற்றொலிகளும் உள்ளன என நிலைநாட்டலாம். ஒலியன்கள், பொருளையும் சொல்லையும் வேறுபடுத்துவன எனவும் மாற்றொலிகள் பொருள்களை வேறுபடுத்தும் தன்மை கொண்டவை அல்ல எனவும், அவைகளை வேறுபடுத்திக் காண்பிக்க முறையே / /, [ ] போன்ற அடைப்புக் குறியீடுகளைப் பயன்படுத்த வேண்டும் எனவும் அமைப்பு மொழியியலார் விளக்கியுள்ளனர்.

ஒரு மொழியில் தோன்றுகின்ற ஒலியன்களைக் கண்டறிந்து நிலைநாட்டிய பின்னர் அவைகளின் இயல்புப் பண்புகளினடிப்படையிலும், சொற்களில் அவை தோன்றும் இடங்களின் அடிப்படையிலும் (distribution) வகைப்படுத்தலாம். இயல்புப் பண்பின் அடிப்படையில் உயிர் ஒலியன்கள் (அ,இ,உ,எ,ஒ) எனவும் மெய் ஒலியன்கள் எனவும் (க்,ச்,ட்,த்,ப் போன்றவை)

உடனுறை ஒலிப்பு ஒலியன்கள் ((Suptra Segmental) எனவும் (நீட்சி, குரல்வகை, அழுத்தம், இடைவெளி ஒலியன் (juncture) போன்றவை) எனவும் வகைப்படுத்தலாம். அவை சொற்களில் நிற்கும் இடத்தை அடிப்படையாகக் கொண்டு சொல் முதல், இடை, கடை நிலை ஒலியன்கள் என வகைப்படுத்தலாம். சில மொழிகளில் சொல்லின் முதல் நிலையில் தோன்றும் ஒலியன்கள் சொல்லீற்றில் தோன்றுவதில்லை. தமிழில் மெல்லின மெய் ஒலியன்களான ன, ண, ம, ந, ஞ என்பவைகளை ஒலியன்களாக நிறுவலாம். அவைகளை நிறுவுதற்கு 'நான், நாண், நாம், ஞாயம்' போன்ற குறைந்தபட்ட ஒலி வேறுபாட்டு சொல்லிணைகளை எடுத்துக்கொள்ளலாம். ஆனால் 'ம,ந,ஞ' என்ற ஒலியன்கள் மொழிமுதலில் தோன்றுகின்றன. ன, ண என்பன மொழிமுதலில் தோன்றுவதில்லை.

தனித்தனியானவை எனச் சொல்லிணை சோதனை வாயிலாக நிலைநாட்டப்பட்ட ஒலியன்கள் மயங்கித் தோன்றுவதும் உண்டு. அதாவது அவை பெருளை வேறுபடுத்தாத வகையில் வடிவத்தில் மட்டும் வேறுபாடு கொண்டவையாகச் சில சூழல்களில் நிலைபெறுவதும் உண்டு. வரம் நிலம் வரம், நிலன் வரன் என்ற சொற்களில் ம்,ன என்பவை வேறுபட்டிருந்தாலும் அவை பொருள் வேறுபாட்டுக்குக் காரணமாக அமைவதில்லை. ஆனால் பிற இடங்களில் அவை பொருளை வேறுபடுத்தும் வகையில் தோன்றுகின்றன (நான் : நாம், காமம்: கானம்), சில இடங்களில் வேறுபட்டவை என நிறுவப்பட்ட ஒலியன்கள் தங்கள் வேறுபடும் தன்மையை இழந்து நிற்பதை அடிப்படையாகக் கொண்டு, அத்தகைய சூழ்நிலைகளை ஒலியன் மயங்கும் சூழல் (neutralizaion) எனக் கொண்டு, அந்த இடங்களில் இரண்டு ஒலியன்களையும் இணைத்தவாறு, இரண்டு ஒலியன்களின் ஒலியியல் பண்புகளை உள்ளடக்கிய 'உயர்நிலை ஒலியனை' (Archephoneme) இடலாம் எனப் பிராக் மொழியியல் அறிஞர்கள் கருதுவர். ஜெர்மன் மொழியில் p:b, k:g போன்ற குரலுள்ள, குரலில்லா மெய் ஒலிகள் தனித்தனி ஒலியன்களாகப் பிற இடங்களிலும், சொல்லீற்றில் இந்த வேறுபாடில்லாத வகையிலும் தோன்றுகின்றன. இதை மையமாகக் கொண்டு சொல்லீற்றில் p:b என்பவைகளைக் குறிக்க 'B' என்ற பொது மெய்யொலியனையும், k:g என்பவைகளின் இணைவைக் குறிக்க 'G' என்ற பொது ஒலியையும் இடலாம் எனக் கருதுவர்.

ஒரு மொழியின் ஒலியன்களை நிறுவுவதிலும், அவைகளின் எண்ணிக்கையைக் குறைப்பதிலும் கூட்டுவதிலும், அவைகளை வகைப்படுத்துவதிலும் பல நியதிகள் பின்பற்றவேண்டும் எனவும் அமைப்பு மொழியியலார் விளக்குவர். எதிர்நிலை நியதி,

வேற்றுநிலை நியதி, ஒலிப்பு ஒற்றுமை நியதி, ஒழுங்கமைவு நியதி, சுருக்க நியதி போன்ற நியதிகள் ஒலியன் ஆய்வில் பயன்படுத்தப்படுகின்றன.

ஒலியன்கள் ஒன்றோடொன்று இணைந்து கூட்டு ஒலியன்கள் உருவாகின்றன எனவும், கூட்டொலியன் சொற்களில் தோன்றும் இடங்கள் கட்டுப்பாட்டைக் காட்டுகின்றன எனவும், சில ஒலியன்கள் சில ஒலியன்களோடு மட்டுமே இணைந்து வரும் நிலை அதிகமாக மொழிகளில் காணப்படுகின்றன எனவும், எனவே எந்த ஒலி எந்த ஒலியின் முன்னரோ பின்னரோ வரும் என்பதைக் கணிக்கமுடியும் எனவும் கருதுவர். ஆங்கிலத்தில் மூன்று மெய் ஒலிகள் சொல் முதலில் தோன்றும் நிலையிருந்தால் அதில் முதல் ஒலி 'S' ஆகத்தான் இருக்கும் எனவும், இரண்டாம் ஒலி வல்லினமாக இருக்கும் எனவும் ஊகிக்கலாம் (Structure, Spring என்பன).

ஒலியன்கள் ஒன்றோடொன்று இணைந்து மற்றொரு ஒலியியல் கூறான 'அசை' (Syllable) உருவாகிறது. அசையில் கரு ஒலியன்களும், மருங்கொலியன்களும் தோன்றுகின்றன. கரு ஒலியன்கள் பெரும்பாலும் உயிரொலியன்களாகவும், சில சிறப்பான அசைகளில் மெய்யொலியன்களாகவும் தோன்றுவதுண்டு. கரு ஒலியன்களின் முன்புறம் தோன்றும் மருங்கு ஒலியன்களை 'முன் மருங்கொலியன்' (onset), பின்புறம் தோன்றும் மருங்கு ஒலியன்களைப் 'பின் மருங்கொலியன்' (coda) எனவும் அழைக்கலாம். அசைகளில் பின் மருங்கொலியன் இல்லாத அசைகளை 'திறந்தநிலை அசை' (open syllable) எனவும், பின் மருங்கொலியனைக் கொண்ட அசைகளை 'மூடு நிலை அசை' (Closed syllable) எனவும் அழைக்கலாம். 'வணக்கம்' என்ற சொல்லில் வ+ணக்+கம் என்ற மூன்று அசைகள் உள்ளன. இவைகளில் 'வ' என்ற அசையைத் திறந்தநிலை அசை எனவும் 'ணக்' 'கம்' என்ற அசைகளை மூடு நிலை அசைகள் எனவும் கருதலாம். அசைகளின் எண்ணிக்கையின் அடிப்படையில் சொற்கள் ஓரசை, ஈரசை, மூவசை, நான்கசைச் சொற்கள் போன்று பலவாகப் பிரிக்கப்படுகின்றன. ''தா,கொடு, கொடுக்க, கொடுக்கவா'' போன்றவைகளை எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம்.

மரபு இலக்கணங்களில், பொதுவாகச் செய்யுளியல் உறுப்புகளாக அசைகள் விளக்கப்படுகின்றன. பா வகைகளையும் செய்யுளின் அமைப்பையும் விளக்க முயன்ற தமிழ் மரபு இலக்கணத்தார் அசை என்பது குறுகிய செய்யுள் உறுப்பு எனவும், அவை தொடர்ச்சியாக நின்று சீர், தளை போன்ற பிற உறுப்புக்களை உருவாக்குகின்றன எனவும் விளக்குவர். அசை என்ற

ஒலியியல் கூறு மொழியில் உள்ளது என்பதை நிறுவத் தலைப்பட்ட அமைப்பு மொழியியலார், அசை பற்றிய உணர்வு மனித மனத்தில் நிலைபெறுகிறது என்றும், ஒரு சொல்லை மெதுவாக, நிறுத்திக் கூறும்படி மொழிபேசுபவர்களைக் கேட்டுப்பார்த்தால், அவர்கள் அசை அசையாகப் பிரித்துக் கூறுவர் எனவும், இதை வைத்து 'அசை' என்ற கூறு உண்மையான மொழிக்கூறு எனவும், அது உளவியல் நிலையிலும் உண்மையானது எனவும் நிலைநாட்டுவர்.

மொழியில் ஒலியன்கள் உள்ளன என்ற கருதுகோளை முன்வைத்து, மனதில் உணர்வு வடிவில் நிற்கும் ஒலியன்களை வெளிப்படையாகச் சில சோதனைகளை மேற்கொண்டு வெளிப்படையாக்கலாம் எனக் கருதி அதற்கான வழிமுறைகளை வெளிப்படையாக விளக்கியதால் அமைப்பு ஒலியியல் ஆய்வுகள் அறிவியல் அடிப்படையிலானவை என நிறுவலாம்.

**உருபன்**

மொழியில் சொற்கள் உள்ளன என்பது பண்டைக்கால முதலே பல இலக்கண, மொழி மரபுகளினால் நிலைநாட்டப்பட்ட உண்மையாகும். ஆனால் சொற்களின் அக அமைப்பை நோக்கும்போது, சொற்கள் உருபன்களின் இணைப்பால் உருவாகின்றன என அமைப்பு மொழியியலார் விளக்க முனைவர். 'உருபன்' என்ற மொழிக்கூறு ஒரு புதிய கண்டுபிடிப்பு. மொழியில் காணப்படும் மிகச்சிறிய பொருள் கொண்ட கூறுகளே உருபன்கள் எனவும், அவை ஒலியன்களால் ஆன அமைப்பைப் பெறுகின்றன எனவும், அவை சொல் உருவாக்கத்திற்கு அடைப்படையானவை எனவும் அமைப்பு மொழியியலார் கருதினர்.

உருபன்களை மொழியில் உள்ளன என நிலைநாட்டத் தரவுகள் வேண்டும். மொழியில் தோன்றும் பேச்சு வடிவச் சொற்களை மொழி பேசுபவர்களிடமிருந்து தரவாகப் பெற்று, குறிப்பாக ஒலி நாடாக்களில் பதிவு செய்து பெற்று, பின்னர் அவைகளை வரிவடிவக் குறியீடுகளின் உதவியால் பெயர்ப்பு செய்வதன் மூலம் மொழியின்பேச்சு வடிவத் தரவுகள் கிடைக்கும். இதைப்போன்று, மொழியில் எழுத்து வடிவப் படைப்புக்கள் இருந்தால், அகராதி இருந்தால், அவைகளிலிருந்து சொற்களைப்பெற்று வரிவடிவச் சொற் தரவுகளைத் திரட்டி வைக்கலாம்.

உருபன்களைக் காண்பதற்கெனச் சில வழிமுறைகள் அமைப்பு மொழியினரால் வெளியிடப்பட்டன. முதலில் ஒலிவடிவத்திலும், பொருளிலும் தொடர்புடைய பல சொற்களைத்

தொகுத்து வைக்க வேண்டும். அவைகளை ஒப்பிட்டு, ஒலிவடிவத்தில் ஒற்றுமை கொண்ட பகுதிகளைப் பிரித்தெடுத்து அவைகளுக்குப் பொருள் வழங்க இயலுமா எனப் பார்க்க வேண்டும். அவ்வாறு பிரித்தெடுத்துப் பொருள் வழங்கும் நிலையில் உள்ள கூறுகளை, குறிப்பாக, மீண்டும் பிரித்தால் பொருள் தராத வகையில் நிற்கும் மிகச்சிறிய கூறுகளைக் கண்டுபிடிக்க வேண்டும். இவ்வாறு சொற்களில் உருபன்கள் நிலைபெறுவதைக் கண்டு பிடிக்கலாம். தமிழில் இத்தகைய முறையில் உருபன்களை இனங்காண்பதற்கான எடுத்துக்காட்டு பின்வருமாறு:

| | | |
|---|---|---|
| நடந்தான் | நடந்தாள் | நடந்த |
| நடக்கிறான் | நடக்கிறாள் | நடக்கிற |
| நடப்பான் | நடப்பாள் | நடக்கும் |

இலக்கணப் பண்பிலும், பொருளிலும் தொடர்புடைய இச் சொற்களை ஒப்பிட்டுப் பார்க்கையில் இச்சொற்களின் முதல் நிலையில் 'நட' என்ற கூறு திரும்பத் திரும்பத் தோன்றுவதையும், இரண்டாம் நிலையில் 'ந்த்', 'க்கிற்', 'ப்ப்', 'க்க்' என்ற கூறுகள் தோன்றுவதையும், மூன்றாம் இடத்தில் 'ஆன்', 'ஆள்', 'அ', 'உம்' என்ற கூறுகள் தோன்றுவதையும் காணலாம். அவைகளைப் பிரித்தெடுத்து உரிய பொருள்களை வழங்குவதன் மூலம் உருபன்களை இனம் காணலாம். இதன்படி 'நட' என்பது 'walk' என்ற பொருளையும், ந்த், க்கிற்,(ப்ப்,க்க) என்பவை முறையே இறந்த, நிகழ், எதிர்காலத்தையும், ஆன், ஆள், (அ,உம்) என்பவை முறையே ஆண்பால், பெண்பால், பெயரெச்சம் என்பவைகளையும் காட்டுகின்றன என உணரலாம். மேலும் அவை பின்வரும் உருபன் தொடர் அமைப்பைக் காட்டுகின்றன எனவும் நிறுவலாம்.

நட+ ( ந்த் + ஆன்<br>
க்கிற் + ஆள்<br>
ப்ப் அ<br>
[க்க் உம்] )

அமைப்பில் தொடர்புடைய சொற்களைப் பட்டியலிட்டு, அவைகளை ஒப்பிட்டு, திரும்பத் தோன்றும் கூறுகளை வெட்டி எடுத்து அவைகளுக்கு உரிய பொருள் உள்ளனவா என நிறுவுவதன் வாயிலாக உருபன்களை நிலைநாட்டலாம். இத்தகைய வழியில் நிறுவப்படுகின்ற உருபன்கள் சில சிறப்புப் பண்புகளைக் கொண்டவை. சில உருபன்கள் பிற உருபன்களோடு இணைவதில்

கட்டுப்பாட்டைக் காட்டுகின்றன. மேலும் பிற உருபன்களின் தாக்கத்தால் வடிவ வேறுபாட்டைக் காட்டலாம். 'செம்மை' என்ற சொல் 'செஞ், செங், செந், செம்' என்ற வேறுபட்ட வடிவங்களில் தோன்றுகிறது (செம்மை, செஞ்-சடை, செங்-கல், செந்-தளிர், செம்-பொன்). இத்தகைய வடிவமாற்றம் பெற்ற கூறுகள் பொருளில் வேறுபாடில்லாததாகவும், ஒன்று தோன்றும் இடங்களில் மற்றொன்று தோன்றாத வகையிலும், அவைகளின் வடிவ வேறுபாடு அவைகளோடு சார்ந்து வரும் பிற உருபன்கள் அல்லது அவ்வுருபன்களில் நிற்கும் ஒலிகளின் தாக்கத்தால் ஏற்படுகிறது என விளக்கும் வகையிலும் இருந்தால் அத்தகைய வடிவ வேறுபாடு கொண்ட உருபன்களை 'மாற்றுருபு' என அழைத்து அவைகளை ஓர் உருபனின் கீழ் அடக்கலாம் என அமைப்பு மொழியியலார் விளக்குவர். மேலும் உருபன்களையும் அவைகளின் அங்கமாகக் கருதப்படும் மாற்று உருபுகளையும் வேறுபடுத்திக்காட்ட // [ ] போன்ற அடைப்புக் குறியீடுகளைப் பயன்படுத்துவர். 'செம்மை' என்ற உருபனின் வடிவத்தையும், வேற்றுவடிவங்களையும் பின்வருமாறு குறியீடுகளின் வாயிலாகச் சுட்டிக்காட்டலாம். இந்த மாற்றுருபுகளில் 'செஞ்' என்பது 'ச்' என்ற ஒலியின் முன்னரும், 'செங்' என்ற மாற்றுருபு 'க்' என்ற ஒலியின் முன்னரும், 'செந்' என்ற மாற்றுருபு 'த்' என்ற ஒலியின் முன்னரும் 'செம்' என்ற மாற்றுருபு 'ப்/ம்' என்ற ஒலிகளின் முன்னரும் தோன்றுகின்றன என்பதையும் பின்வரும் குறியீட்டு வடிவம் காட்டுகிறது.

/செம்/ [செஞ்] / - ச், ஞ் [செஞ்-சொல், ஞாயிறு]
[செங்] / - க், [செங்-கல்]
[செந்] / - த், ந் [செந்-தாமரை, நாய்]
[செம்] / - ப், ம் [செம்-பொன், மண்]

ஓர் உருபனின் வேறுபட்ட சூழ்நிலை சார்ந்த வடிவங்களைக் காண்பதற்கான வழிமுறைகளும் உள்ளன. மாற்றுருபன்கள் பொருளில் வேறுபடாதிருக்க வேண்டும். ஒரே பொருளைக் காட்டுமாறு இருக்கவேண்டும். ஒலியமைப்பில் அவை வேறுபட்டிருக்க வேண்டும். அவ்வொலியமைப்பு வேறுபாடு பிற கூறுகளின் தாக்கத்தால் ஏற்பட்டது என விளக்கும் வகையிலிருக்க வேண்டும். இத்தகைய பண்புகளைக் கொண்ட எல்லா மாற்று உருபுகளையும் ஓர் உருபனின் வடிவங்கள் எனக் கருதலாம்.

உருபன்களைக் காணவும் அவைகளின் பண்புகளை விளக்கவும் தேவையான வழிமுறைகளையும் நியதிகளையும் நைடா

என்ற அறிஞர் விளக்கியுள்ளார். ஒரே வடிவத்தையும், ஒரே பொருளையும் காட்டுகின்ற ஆனால் வேறுபட்ட சொற்களில் தோன்றுகின்ற கூறுகளை உருபன் எனவும் (நட : நட+ந்தான், நட+க்கிறான், நட+ப்பான்), ஓர் உருபனின் அங்கமாக நிற்கும் மாற்றுவடிவங்கள் (மாற்றுருபு) பிற உருபன்களில் தோன்றும் ஒலிகளின் தாக்கத்தால் ஏற்படலாம் எனவும் (செம்=செந்-தளிர், செஞ்-சோறு, செங்-கதிர், செம்-பொன்), பிற உருபன்களின் தாக்கத்தால் ஏற்படலாம் எனவும் (பத்து=பதின்-மர்/பதின்-ஐந்து, பன்+இரண்டு, பத்த்-ஒன்பது, இரு-பது), ஓர் உருபனின் கீழ் வரும் மாற்றுருபுகளுக்கு வடிவம் இல்லாமல் இருக்கலாம் எனவும் (ஆங்கிலத்தில் sheep என்ற சொல்லில் பன்மை விகுதியான 's' இல்லாதிருத்தல்) ஓர் உருபனின் உள் தோன்றும் ஒலி மாற்றமடைதலையே உருபனாகக் கருதலாம் எனவும், (ஆங்கிலத்தில் foot என்ற சொல்லின் 'oo' என்ற எழுத்துக்கள் 'ee' என மாறி feet என உருவெடுத்துப் பன்மைச் சொல்லாக மாறுதல்), ஓர் உருபன் பல பொருட்களைக் கொண்டு விளங்குவதால் பல உருபன்கள் ஒரே ஒலியமைப்பைக் கொண்டு விளங்கலாம் எனவும் (ஆறு=ஆறு 'river', ஆறு 'six') இவைகளைக் காண்பதற்கும் உரிய நியதிகளை நைடா வெளியிட்டுள்ளார்.

உருபன்கள் ஒன்றோடொன்று இணைவதன் மூலம் சொற்கள் உருவாகின்றன. அவைகளின் தனித்து நிற்கும் பாங்கு, சார்ந்து நிற்கும் பாங்கு என்பவைகளின் அடிப்படையில் உருபன்களையும் மற்றுருபுகளையும் வகைப்படுத்தலாம். உருபன்களைத் தனிநிலை உருபன் (கல்), சார்புநிலை உருபன் ('ஐ' கல்+ஐ) என வகைப்படுத்தலாம். ஒரு சொல்லில் காணப்படும் பல உருபன்களில் முதல் நிலை உருபனை 'வேர்நிலை உருபன்' எனவும், அதைச் சார்ந்து வரும் பிற உருபன்களை 'ஒட்டுநிலை உருபன்' எனவும், வகைப்படுத்தலாம். ஒட்டுநிலை உருபன்களை அவை தோன்றும் இடத்தின் அடிப்படையில், முன்னொட்டு, பின்னொட்டு, அக ஒட்டு, மருங்கு ஒட்டு, உடனுறை ஒட்டு உருபன்கள் என வகைப்படுத்தலாம். 'அ, துர்' என்பவைகளை (அ-நாகரிகம், துர்-நாற்றம்) முன்னொட்டு எனவும், 'ச்சி, மை' போன்றவற்றை (மலர்+ச்சி, தாய்+மை) பின்னொட்டு எனவும், அராபிய மொழியில் புத்தகத்தைக் குறிக்கும் Kitāb என்ற சொல்லில் 'i...ā' என்ற ஒலித் தொடரை அக ஒட்டு எனவும், கருதலாம்.

ஒரு வேர்நிலை உருபனோடு இணைந்து வரும் ஒட்டுநிலை உருபன்கள், வேர்நிலை உருபனின் இலக்கணப் பண்பை மாற்றியமைத்தால் அத்தகைய ஒட்டுநிலை உருபன்களை 'ஆக்க

உருபன்கள்' எனவும், மாற்றியமைக்காமல் இருந்தால் அத்தகைய ஒட்டுநிலை உருபன்களைத் 'திரிபு உருபன்கள்' எனவும் வகைப்படுத்தலாம். மலர் என்ற வினையோடு ந்த்-அது என்ற ஒட்டுநிலை உருபன்கள் இணைந்து வினையின் இலக்கணப் பண்பை மாற்றாதிருப்பதால், 'ந்த், அது' என்ற உருபன்களைத் திரிபு உருபன்கள் எனவும், 'ச்சி' என்ற ஒட்டுநிலை உருபன் வினையின் இலக்கணப் பண்பை மாற்றி ஒரு பெயர்ச்சொல்லை உருவக்குவதால் (மலர்ச்சி), அந்த உருபனை ஆக்க உருபன் எனவும் கருதலாம். திரிபு உருபன்களில் ஒழுங்கமைவுள்ள உருபன்கள் (regular), ஒழுங்கமைவற்ற உருபன்கள் (irregular) என்ற வகைகளும் உள்ளன.

உருபன்களை வகைப்படுத்துவது போன்று மாற்றுருபுகளையும் வகைப்படுத்தலாம். மாற்று உருபுகளில் வடிவம் கொண்ட மாற்றுருபுகள் (கள்: மரங்+கள்), வடிவமற்ற மாற்றுருபுகள் (ø:sheep+ø), ஒலிமாற்றத்தின் வாயிலாக வெளிப்படும் மாற்றுருபு (u→ij→foot→ feet), பொருளற்ற மாற்றுருபு (த்த்:மரம்+த்த் ஐ), இரண்டு தொடர்ச்சியான உருபன்களை உள்ளடக்கிய ஓர் உருபு (உம் : வர்+உம், உம் என்பது எதிர்கால இடைநிலையையும், படர்க்கை ஒன்றன்பால் வினைமுற்று ஆகிய இரண்டு உருபன்களைக் காட்டும் உருபு) சூழ்நிலைக்கு ஏற்ப வடிவம் மாறித் தோன்றும் பச்சோந்தி உருபு (மும்-மூன்று, நன்-நான்கு, ஒவ்-வொன்று, ஈ-ரெண்டு) எனப் பலவகைகளைக் காணலாம் உருபன்கள் பிற உருபன்களோடு இணைந்து சொற்களும் (வருகை=வரு+கை) கூட்டுச்சொற்களும் (குளிர்காலம்= குளிர்+காலம்) உருவாகின்றன. மொழியின் உருபன்கள் ஒலிவடிவம், வரிவடிவம், பொருண்மை, இலக்கணப்பண்பு ஆகியனவற்றைக் கொண்டவை. உருபன்கள் இணைந்து சொற்கள் தோன்றுவதை அடிப்படையாகக் கொண்டு, குறிப்பாகச் சொற்களின் உருபனமைப்பு வகைகளை முன்னிறுத்தி மொழிகளை வகைப்படுத்தலாம். சில மொழிகள் தொடர்நிலை உருபனமைப்பைக் கொண்டவை (concatenative). இவைகளில் தனிநிலை உருபன்களைச் சொற்களில் கொண்ட தனிநிலை மொழிகள் (isolated language), ஒட்டுநிலை உருபன்களைச் சொற்களில் காட்டும் ஒட்டுநிலை மொழிகள் (agglutinative), உருகிய நிலை உருபன்களைச் சொற்களில் காட்டும், உருகுநிலை மொழிகள் (fusional language) எனப் பல வகைகளைக் காணலாம். சில மொழிகளில் உருபன்கள் தொடர்ச்சி நிலையில் தோன்றாமல், புகுந்த நிலையில் தோன்றலாம். இந்த மொழிகளை template அமைப்பு கொண்ட மொழிகள் என்பர். அராபிய மொழியை

இதற்கான எடுத்துக்காட்டாகக் கருதலாம். இம்மொழியில் வேர்நிலை உருபன்கள் தொடர்ச்சியற்ற மெய்யொலிகளைக் கொண்டதாக விளங்கும். சார்பு உருபன்கள் அந்த வேர் உருபன்களின் அமைப்பில் காணப்படும் மெய்களின் இடைவெளிகளில் புகுத்துவதற்கு ஏற்ற வேறுபட்ட உயிர் ஒலிகளைக் கொண்டதாக விளங்கும். வேர் உருபன் அமைப்பில் சார்பு உருபன்களைப் புகுத்துவதன் வாயிலாகச் சொல் உருவாகும். இத்தகைய சொல்லமைப்பைக் கொண்ட மொழிகளைப் 'புகுநிலை உருபனமைப்பைக் கொண்ட மொழிகள் எனலாம்.

உருபன்கள் ஒன்றோடொன்று இணைந்து சொற்களை உருவாக்கும் நிலையில் அவை தொடர்ச்சியாகத் தோன்றுகின்றன. இதை 'உருபன் தொடர்ச்சி நிலை' morphotactics எனலாம். தொடர்ச்சியாக உருபன்கள் நிற்கும் போது சில கட்டுப்பாடுகள் வெளிப்படுகின்றன. சில உருபன்கள் சில வேர் உருபன்களோடு தொடர்ச்சி நிலையில் தோன்றுவதில்லை. கொடு, விடு, தடு போன்ற வினைகள் 'ஐ' உருபை ஏற்றுத் தொடை, விடை, தடை என்ற பெயர்களை உருவாக்க, 'நடு' என்ற வினையோடு 'ஐ' விகுதி சேர்ந்து 'நடை' என்ற பெயர் உருவாவதில்லை. ஒரு சொல்லில் தோன்றும் உருபன்கள் தமக்கென அமைந்த இடத்திலேயே தோன்ற வேண்டும் எனவும், இடம்மாறித் தோன்ற இயலாது எனவும் வலியுறுத்தும் கட்டுப்பாடுகள் உள்ளன. பன்மை உருபன், பெயர் உருபனின் பின்னரும், பன்மை உருபனின் பின்னர் வேற்றுமை உருபுகளும் தோன்றவேண்டும் என்பது தமிழின் நியதி. அவை இடம் மாறித்தோன்றினால் வழுவான சொற்கள் உருவாகும் (மரம்+கள்+உக்கு=மரங்களுக்கு, மரம்+உக்கு+கள்=மரமுக்குகள்*).

வேர்நிலை உருபன்களோடு ஒட்டுநிலை உருபன்கள் பல இணையும்போது வேர்நிலை உருபன்கள் காட்டிய ஒலியமைப்பு, இலக்கணப் பண்பு ஆகியன மாறியோ, மாறாமலோ தோன்றலாம். 'அவன்' என்ற படர்க்கை ஆண்பால் ஒருமை உருபனோடு 'ஐ' என்ற வேற்றுமை உருபு இணையும்போது, வேர்நிலை உருபனின் ஒலிவடிவம் மாறுவதில்லை. 'நான்' என்ற தன்மை ஒருமை உருபன் 'ஐ' வேற்றுமை உருபோடு இணையும் போது 'நான்' என்பது 'என்' என மாறுகிறது. மரம் என்ற வேர் உருபனோடு 'கள்' என்ற பன்மை விகுதி இணையும் போது இலக்கணப் பண்பு மாறாமலும், 'ஓட்டு' என்ற வேர்நிலை வினை உருபனோடு 'நர்' என்ற விகுதி இணையும் போது, வேர் உருபனின் இலக்கணப் பண்பு மாறியும் தோன்றுகிறது.

(மரம் + கள் → மரங்கள், ஓட்டு + நர் → ஓட்டுநர்)
(பெயர்) (பெயர்) (வினை) (பெயர்)

உருபன்களின் தொடர்நிலைத் தோன்றலால் சொற்கள் உருவாகின்றன. உருபன்கள் ஒன்றோடொன்று இணையும்போது ஏற்படுகின்ற ஒலி மாற்றங்களைத் தோன்றல், திரிதல், கெடுதல் இடம்மாறல் என நான்கு வகைகளில் வகைப்படுத்தலாம். மேலும் உயிர், மெய் என்ற ஒலிவகைகளில் இம்மாற்றம் நிகழ்வதை அடிப்படையாகக் கொண்டு பல்வகை ஒலி மாற்றங்களை இனங் காணமுடியும். 'மரம்+ஆ=மரமா' என்ற சொல் ஒலிமாறாத இயல்பான உருபன் அமைப்பு எனவும் 'மரம்+ஐ=மரத்தை' என்ற சொல் ஒலி தோன்றிய உருபனமைப்பு எனவும், 'மரம்+கள்=மரங்கள்' என்ற சொல் ஒலி மாறிய உருபனமைப்பு எனவும் காட்டலாம். மேலும் பல வகையான ஒலிமாற்றங்களைக் காட்டுகின்ற உருபனமைப்புகளையும் இனம் காணமுடியும். ஒலி ஓரினமாதல், வேறினமாதல், உதட்டொலியாதல், அண்ண ஒலியாதல், மூக்கின ஒலியாதல், மெய், உயிராக மாறுதல், உயிர், மெய்யாக மாறுதல், இரட்டுறுதல், உட்புகுதல் போன்ற பல்வகை ஒலிமாற்றங்கள் உருபன்களின் இணைவு நிலையில் ஏற்படுகின்றன. இத்தகைய உருபன் சார்ந்த ஒலிமாற்றங்களை உருபனொலி மாற்றங்கள் எனப் பெயரிட்டு அவைகளைப் பொதுவாகச் 'சந்தி' என்ற செயல்பாட்டின் உள் அடக்குவர். இரண்டு சொற்களின் இடையில் தோன்றும் ஒலிமாற்றங்களைப் புறநிலைச் சந்தி என்ற பெயரின் கீழும், இரண்டு உருபன்களினிடையில் நிகழும் ஒலிமாற்றங்களை அகநிலைச் சந்தி என்ற தலைப்பின் கீழும் விளக்குவர். தமிழ் மரபு இலக்கணங்களில் சந்தி மாற்றங்கள் சிறப்பாக விளக்கப்பெற்றுள்ளன. நன்னூல் சூத்திரத்தில் வரும் ஆதிநீடல், அடி இகரம் ஐ ஆதல், தன் ஒற்றிரட்டல், முன்னின்ற மெய்திரிதல் போன்ற செயற்பாடுகள் உருபனொலிகளில் ஏற்படும் மாற்றங்களை விளக்குவதற்காகவே கொடுக்கப்பட்டுள்ளன.

உருபன்களின் தனிநிலைப் பண்பு, ஒட்டுநிலை உருபன்களின் எண்ணிக்கை, ஒட்டுநிலை உருபன்களின் தொடர் நிலையின் அளவு அல்லது நீட்சி, அவைகளில் தோன்றும் ஒலி மாற்ற வகைகள், போன்றவற்றின் அடிப்படையில், குறிப்பாக உருபன்களின் இணைவால் உருவாகும் சொல்லமைப்பு வாயிலாக உலக மொழிகளைத் தனிநிலை உருபனமைப்பைக் கொண்ட மொழிகள் அல்லது ஒட்டுநிலை மொழிகள், உருகிய நிலை உருபனமைப்பைக் கொண்ட மொழிகள் அல்லது உருகுநிலை மொழிகள் என வகைப்படுத்துவர். சீன மொழியைத் தனிநிலை மொழி எனவும், தமிழ்மொழி, துருக்கிமொழி ஆகியனவற்றை ஒட்டுநிலை மொழி எனவும், ஆப்ரிக்க மொழிகள் சிலவற்றை உருகுநிலை மொழி எனவும் மொழியியலார் கருதுவர்.

தமிழைப் பொறுத்தவரை பெயர்ச்சொல், வினைச்சொல், பெயர்ப்பண்புச் சொல், வினைப்பண்புச் சொல் எனச் சொற்களை வகைப்படுத்தி இன்றைய நிலையில் அவைகளின் உருபனமைப்பை விளக்குவர் தமிழ் மொழியியலார். பெயர்ச்சொற்களில் பெயர் என்ற இலக்கணப் பண்பைக் கொண்ட உருபன்கள் வேர்நிலை உருபனாகவும், இடம்-பால்-எண் காட்டும் உருபன்கள், வேற்றுமை உருபன் போன்றவை ஒட்டு உருபன்களாகவும் தோன்றும். வினைச்சொற்களில் வினை என்ற வேர்நிலை உருபன்களாகவும் வரும். பெயர்ப்பண்புச் சொற்களில் பெயரும், பண்பு உருபனும் அங்கமாகத் தோன்றுகின்றன. வினைப் பண்புச் சொற்களில் பெயரும், வினைப்பண்பு உருபனும் அங்கமாகத் தோன்றுகின்றன.

| | | |
|---|---|---|
| பெயர்ச்சொல்: | பெயர்+இடம்-பால்-எண்+வேற்றுமை+ | அரசு-அன்-ஐ |
| வினைச்சொல்: | வினை+காலஇடைநிலை+இ-பா-எண்+ | இரு-ந்த்-ஆன் |
| | எச்சம் | இரு-ந்த்-அ |
| | எதிர்மறை | இரு(க்க்)-ஆத்-அ |
| பெயரடை | : பெயர்+அடை உருபன் | உயரம்-ஆன |
| வினையடை | : பெயர்+அடை உருபன் | வேகம்-ஆக |

சொல்லில் தோன்றும் உருபன்களைக் காணவும், வகைப்படுத்தவும் தேவையான வழிமுறைகளை வெளிப்படையாக விளக்கியதால், அமைப்பு மொழியியலாரின் சொல்லமைப்பு விளக்கம் அறிவியலடிப்படையிலானது என நிறுவலாம்.

**உளவியல்வழி உருபன்**

உள மொழியியலார் மனித மனத்தில் எவ்வாறு சொற்களும், உருபன் அமைப்புகளும் நிலைபெறுகின்றன என்பதைச் சோதனை வாயிலாக நிறுவ முயல்கிறார்கள். குறிப்பாக, திரிபு உருபன்களைக் கொண்ட திரிபுச்சொற்களும், ஆக்க உருபன்களைக் கொண்ட ஆக்கச்சொற்களும் எவ்விதம் மனித மனத்தில் நிலை நிறுத்தப்பட்டுள்ளன என்பதற்கான கருதுகோள்களை உருவாக்கிச் சோதனை வாயிலாக நிறுவ முயன்றுள்ளனர்.

'முழுப்பட்டியல்' என்ற கருதுகோள் மொழியில் காணப்படுகின்ற, மனிதனுக்குத் தெரிந்த எல்லாச் சொற்களும் தனித்தனியாகப் பட்டியலிடப்பட்டவாறு மனத்தில் நிலைபெறுகின்றன என வலியுறுத்துகிறது. இதன்படி, 'வந்தான், வருகிறான், வருவான், வந்தவன், வந்தது' போன்ற 'வா' என்ற வினையடி ஆக்கச் சொற்களும், 'வருகை, வரவு, வரல்' போன்ற 'வா' என்ற விளையடியாகப் பிறந்த திரிபுச் சொற்களும் பட்டியலிட்ட வகையில் மனித மன அகராதியில் நிலைபெறுகின்றன எனக்

கருதப்படுகிறது. இந்தக் கருத்தை ஏற்றுக்கொள்ள இயலாது. சில ஒட்டுநிலை அமைப்பைக் கொண்ட மொழிகளில் ஆயிரக்கணக்கான சொற்கள் உள்ளன. இவையனைத்தும் மனத்தில் பட்டியல் வடிவில் நிற்கின்றன எனக் கருத இயலாது.

குறைந்தபட்ச REDUNDANCY என்ற கருதுகோள் என்பது மனித மனத்தில் சொற்கள் எல்லாம் பட்டியலிடப்பட்ட வகையில் நிற்பதில்லை எனவும், உருபன்கள் மட்டும் பட்டியலிடப்பட்ட வகையில் தோன்றும் எனவும், தேவைப்படும்போது மொழி பேசுவோர் உரிய வேர்நிலை உருபன், ஒட்டு உருபன் போன்றவற்றைத் தெரிவு செய்து இணைத்து உரிய சொற்களை உருவாக்கிக் கொள்வார்கள் என வலியுறுத்துகிறது. மற்றொரு கருதுகோளின்படி, திரிபுச்சொற்கள் பட்டியலிடப்படாமலும் ஆனால் திரிபு உருபன்கள் பட்டியலிடப்பட்டும், ஆக்கச்சொற்கள் பட்டியலிடப்பட்டும் மனத்தில் நிலைபெறுகின்றன என வலியுறுத்தப்படுகிறது. இதை 'வேர்நிலை உருபன் உணர்த்தல்' (Priming) என்ற சோதனை வாயிலாக நிலைநாட்டமுயன்றனர். உருபன்களால் ஆன அமைப்பைப் பெற்ற சில சொற்கள் தங்கள் வேர்நிலை உருபன்களை உணர்த்தும் தன்மையுடையவை. அதாவது சில சொற்களைக் கேட்டவுடன் மொழி பேசுபவர்கள் அச்சொற்களின் வேர்நிலை உருபன்களை எளிதில் இனங்கண்டு கொள்வர். குறிப்பாக lifting, burned என்ற சொற்களைக் கேட்டவுடன் மொழிபேசுவோர் அதன் வேர் உருபனான lift, burn என்பவைகளை எளிதில் உணர்கின்றனர். ஆனால் Selective என்ற சொல்லைக் கேட்டவுடன் அதன் வேர்நிலை உருபன் 'Select' என உணர்வதில்லை. பொருள் வழித் தொடர்பு வாயிலாகச் சொற்கள் அவைகளின் வேர்நிலை உருபன்களை உணர வழிவகுக்கின்றன. சோதனை வாயிலாக, government என்ற சொல் govern என்ற வேர் உருபனை உணர வழிசெய்ததாகவும், ஆனால் department என்ற சொல் depart என்ற வேர்நிலை உருபனை மாந்தர் உணர வழிவகுக்க வில்லை எனவும் கண்டறிந்தனர். இதன் அடிப்படையில், ஆக்கச்சொற்கள் பிற சொற்களோடு உருபனமைப்பில் ஒத்திருந்தாலும், பொருண்மையமைப்பில் வேறுபட்டிருந்தால் அவை தனித்தனியாகப் பட்டியலிடப்பட்டும், ஒழுங்குத் தன்மையைக் காட்டுகின்ற திரிபுச் சொற்களை உருவாக்குவதற்குத் தேவையான வேர்நிலை, ஒட்டுநிலை உருபன்கள் சொல் வடிவில்லாமல் உருபன் வடிவில் பட்டியலிடப்பட்டும் மனித மனத்தில் நிலைபெறுகின்றன என நிறுவப்பட்டது.

சொல்லில் உருபன்களைக் கொண்ட அமைப்பு உள்ளது என்பது மொழியியல் வாயிலாக நிறுவப்பட்டாலும், அத்தகைய

உருபனமைப்பு மனித மனத்தில் நிலைபெறும் மன அகராதியிலும் காணப்படுகிறது என்பதை நிலைநாட்டப் பேச்சில் தோன்றுகின்ற 'பிழைகள்' தரவாகப் பயன்படுத்தப்படுகின்றன. மனிதருடைய பேச்சில் தோன்றுகின்ற பிழைகளில் குறிப்பாக, 'நாக்குழறல்' வகைப்பிழைகளில் சொற்களும், சொற்களின் முதல்நிலை ஒலிகளும் இடம்மாறித் தோன்றுகின்றன என்பது நிறுவப்பட்ட கருத்து. "If you drop it, it will break" என்பதற்குப் பதிலாக, பிழையாக "If you break it, it will drop" எனவும், "கடையைப் பார்த்து வடையை வாங்கு" என்பதற்குப் பதிலாக "வடையைப் பார்த்துக் கடையை வாங்கு" என்று சொற்களை இடம்மாற்றி இட்டுக் கூறுவதை நாம் பேச்சில் காண்கிறோம். அதைப்போல் 'fresh butter' என்பதற்குப் பதிலாக 'brush felter' எனவும், 'ரெண்டு லெட்டர்' என்பதற்குப் பதிலாக 'லெண்டு ரெட்டர்' எனவும் ஒலிகளை இடம்மாற்றி இட்டுக் கூறுவதையும் நாம் காண்கிறோம். சொற்களும், ஒலிகளும் பேச்சில் இடம்மாறித் தோன்றுவதைப்போன்று, உருபன்கள் இடம் மாறித் தோன்றுவதால் உருவாகும் பிழைகளும் உள்ளன என ப்ராம்கின் என்ற அறிஞர் சுட்டிக்காட்டி இதன் வாயிலாக மனித மனத்தில் உருபன் அமைப்பும் நிலைபெறுகிறது என நிறுவலாம் என்ற கருத்து வெளியிடப்பட்டது. "easily enough" என்பது "easy enougly" எனவும், "Rules of word formation" என்பது "words of rule formation " எனவும் பிழையாகப் பேசப்படும்போது, 'ly' 's' என்ற உருபன்கள் இடம்மாறித் தோன்றுவதை எடுத்துக்காட்டாகக் காட்டலாம்.

எவ்வாறு மனித மனத்தில் உருபனமைப்பும், சொல்லும் நிலைபெறுகின்றன என்பதைக் காணும் வழிமுறையை வகுக்கும் பல ஆய்வுகள் வெளிவந்துள்ளன. சோதனை வாயிலாக, இவை உருபன்கள் மன அகராதியில் நிலைபெறுவதையும், பொதுவாக மன அகராதியின் நிலைபேற்றையும் அமைப்பையும் வெளிப்படையாக நிறுவவும் உதவுகின்றன.

### சொற்கள்

மொழியில் சொற்கள் உள்ளன என்பது ஒவ்வொரு பழைய மரபு இலக்கணத்தாரும் கண்டு வெளிப்படுத்திய உண்மையாகும். கிரேக்க மொழியியலறிஞர்கள் மொழி இயற்கையாக உருவாகியதா அல்லது சமுதாயங்களால் செயற்கையாக உருவாக்கப்பட்டதா என்ற சர்ச்சையைத் தீர்க்கும் வகையில் சொற்களை ஆராய்ந்தனர். ஒலிக்குறிப்புச் சொற்கள் மொழியில் இருப்பதைக் கண்ணுற்று மொழி இயற்கையாகத் தோன்றியது எனவும், பிறசொற்களை

அடிப்படையாகக் கொண்டு, மொழி செயற்கையாக உருவாக்கப்பட்டது எனவும் விளக்கமுற்பட்டனர். மேலும் மொழி சீர்மையானதா, சீர்மையற்றதா என்ற சர்ச்சையை விளக்கும் வண்ணம் எழுந்த சிந்தனைகள் சொற்பிறப்பு, சொல்லமைப்பு குறித்த ஆய்வுகள் எழக் காரணமாயமைந்தன. சொற்களையும் அவைகளின் வாயிலாக எழும் திரிபுச்சொற்களையும் அவைகளின் உருவாக்க ஒழுங்கு நிலையையும் விளக்கும் வகையிலான WORDS and PARADIGM இலக்கணங்கள் எழுந்தன.

மேலும் மரபு இலக்கணத்தார் மொழியில் தோன்றும் சொற்களைப் பொருண்மை அடிப்படையிலும், அமைப்பு அல்லது பிற கூறுகளோடு சார்ந்து வருதல் என்ற பண்பின் அடிப்படையிலும் விளக்கி அவைகளுக்கு இலக்கணப் பெயர்களை வழங்கினர். புறப்பொருள்களைக் குறிக்கும் தன்மையிலும் வேற்றுமை உருபுகளை ஏற்றுவரும் தன்மையிலும் உள்ள கூறுகளைப் பெயர்ச்சொல் எனவும், செயல்களைக் குறிப்பனவும், காலங்காட்டும் கூறுகளை ஏற்பனவும் வினைகள் எனவும், பெயரைச் சிறப்பிக்க வரும் சொற்கள் பெயரடைகள் எனவும், வினைச்சொல்லைச் சிறப்பிக்க வரும் சொற்கள் வினையடைகள் எனவும் வரையறுக்கப்பட்டன. தமிழ் மரபு இலக்கணத்தில் சொற்கள் இலக்கண அடிப்படையில் பெயர், வினை, இடை, உரி என வகைப்படுத்தப்பட்டன.

மொழியின் சொற்களைக் குறித்த விளக்கங்களும், வகைப்பாடுகளும் பண்டைக் கால முதலே இலக்கண உலகில் நிலவும் உண்மைகளே. அமைப்பு மொழியியலார் சொற்களைத் தனித்து நிற்கும் தன்மை கொண்ட, பொருள் குறிக்கும் தன்மை கொண்ட சிறிய கூறுகள் எனக் கொண்டனர். அவை ஒன்று அல்லது ஒன்றிற்கு மேற்பட்ட உருபன்களைக் கொண்ட அமைப்பைப் பெற்றிருக்கும். (நடி, நடி+ப்பு,நடி+ப்பு+க்காக, நடிப்பு+க்காக+வும்). சொற்கள் எழுத்தால் ஆன வரிவடிவத்தையும், ஒலிவடிவத்தையும், உருபன்களால் ஆன அமைப்பையும், இலக்கணப் பண்பையும், பொருண்மைப் பண்பையும் கொண்டவை. சொற்களில் உருபன்கள் உள்ளன எனவும், அந்த உருபன்கள் சொல்லில் தமக்கென மாறாத நிரந்தரமான இடத்தைப் பெற்றவை எனவும், உருபன்கள் சொல்லில் நிற்பதற்குரிய இடங்களை விட்டு வேறு இடங்களில் தோன்றினால் அவை சொற்கள் ஆவதில்லை எனவும், ஆகவே சொல்லில் நிலைபெறுகின்ற உருபன்களை இடமாற்றம் செய்ய இயலாத வகையில் சொற்கள் இருக்கும் எனவும் விளக்குவர் (பெண்+கள்+உக்கு=பெண்களுக்கு, பெண்+உக்கு+கள்=

பெண்ணுக்குகள்*). சொற்களைக் குறித்த உணர்வு மொழிபேசுபவர்களிடம் உள்ளது எனவும், ஆகவே சொற்களை உளவியல் உண்மைகள் எனவும் கருதுவர். மொழிபேசுபவர்களை, ஒரு தொடரை மெதுவாகச் சொல்லும்படிப் பணித்தால், அவர்கள் ஒவ்வொரு சொல்லாகப் பேசுவதைக் காணமுடியும். எனவே சொற்கள் மனத்தால் உணரப்பட்டவை என நிறுவலாம். எழுத்து வடிவ மொழியில் சொற்கள் இடைவெளியிட்டு எழுதப்படும் என்பதை அடிப்படையாகக் கொண்டும் சொல்லின் நிலைபேற்றை நிறுவலாம்.

உருபன்கள் ஒன்றோடொன்று இணைந்த வகையில் உருவாகும் அமைப்பைச் சொற்கள் பெற்றுள்ளன. சொற்களில் தோன்றும் உருபன்கள் வரிசை நிலை அமைப்பையும், உருபன்களின் குழுக்களைக் கொண்ட படிநிலை அமைப்பையும் காட்டுகின்றன. சொற்களின் படிநிலை அமைப்பில் தோன்றும் உருபன் குழுக்களைப் பெயர்ச்சி நிலைச் சோதனை வாயிலாக நிறுவலாம். 'வந்தவர்களையும்' என்ற சொல்லில் 7 உருபன்களும் அவைகளின் குழுக்களும் தோன்றுவதைப் பின்வருமாறு காட்டலாம்.




உருபன்களின் இணைப்பால் நிகழும் சொல் உருவாக்கத்தில் உருபன்களின் வரிசைப்பாடு, தேர்வுக் கட்டுப்பாடு, ஒலிமாற்றம், உயர் ஒலிப்புப் பண்புகளில் ஏற்படும் மாற்றம் போன்றவை வெளிப்படுகின்றன. உருபன்கள் தகுந்த வரிசையில் தோன்றுவதை வரிசைப்பாடு எனலாம் (மரம்+கள்=மரங்கள்). எந்த உருபன் எந்த உருபனோடு இணையவேண்டும் என, மொழியில் வழங்கி வரும் கட்டுப்பாட்டைத் தேர்வுக் கட்டுப்பாடு எனலாம். 'வா' என்ற வினை 'ந்த்' என்ற இறந்தகால இடைநிலையோடும், 'போ' என்ற வினை 'ன்' என்ற இறந்தகால இடைநிலையோடும் தோன்றவேண்டும் என்ற கட்டுப்பாடு தமிழில் உள்ளது. இதில் மாற்றம் ஏற்பட்டால் உருவாகும் வினைமுற்று வடிவம் வழுவானதாகிவிடும் (வா+ந்த்+ஆன்=வந்தான்; வா+இன்+ஆன்=வனான்*; போ+இன்+ஆன்=போனான் போ+ந்த்+ஆன்= போந்தான்*). உருபன்கள் இணையும்போது உருபன்களில் தோன்றுகின்ற ஒலி மாற்றங்களையும் காணமுடியும். இதில் ஒலிதோன்றுதல், திரிதல், கெடுதல், இடம்மாறல், ஓரினமாதல், வேறினமானதல் போன்ற பலவகை ஒலிமாற்றங்கள் தோன்றுகின்றன (மரம்+கள்=மரங்கள், மரம்+ஐ=மரத்தை). உயர்நிலை ஒலிப்புப் பண்பு மாற்றம் என்பதில் stress, pitch, length என்பவைகளில் ஏற்படும் மாற்றங்கள் உள்ளடங்குகின்றன.

சொற்களில் திரிபுச்சொல், ஆக்கச்சொல், கூட்டுச்சொல் அல்லது தொகைச்சொல் என்ற வகைகளைக் காணலாம். சாதரணமாக எல்லாச் சொற்களும் வேர்நிலை உருபன்களாகவோ, வேர்நிலை உருபன்களும் ஒட்டுநிலை உருபன்களும் இணைந்த அமைப்புகளாகவோநிலைபெறுகின்றன. வேர்நிலை உருபன்களின் இலக்கணப் பண்பு, அவைகளோடு பல ஒட்டுநிலை உருபன்கள் இணைந்தாலும் மாறாமலிருந்தால் அத்தகைய சொற்களைத் திரிபுச் சொற்கள் எனலாம் (பெண், பெண்+கள், பெண்+கள்+ஐ). ஒட்டுநிலை உருபன்களின் இணைவால் வேர்ச்சொல்லின் இலக்கணப் பண்பு மாறினால் அத்தகைய சொற்களை 'ஆக்கச்சொற்கள்' எனவும் (நடு+அவு=நடவு, செய்+கை=செய்கை என்பன), இரண்டு வேர்நிலைச் சொற்களின் இணைவால் உருவாகும் சொல்லைக் 'கூட்டுச்சொல்' எனவும் (தலை+முடி=தலைமுடி) வகைப்படுத்தலாம். ஆக்கச்சொல், திரிபுச்சொல், கூட்டுச்சொல் ஆகியனவற்றில் பல வகைகளையும் அவைகளில் காணப்படும் உருபன் வகைகளின் அடிப்படையில் விளக்கலாம். தமிழ் மரபு இலக்கணங்கள் கூட்டுச் சொற்களைத் தொகைச் சொற்கள் எனப் பெயரிட்டு, அவைகளில் வேற்றுமைத் தொகை, வினைத் தொகை, பண்புத் தொகை, உவமைத் தொகை, உம்மைத் தொகை, அன்மொழித் தொகை எனப் பலவகைகளை நிலைநாட்டியுள்ளனர்.

சொற்களின் அமைப்பை அடிப்படையாகக் கொண்டு விளக்கம் வழங்கும் இலக்கணங்கள் மூவகைப்படும். அலகு தொடர்புநிலை இலக்கணம் (Item and Arrangement) அலகு மாறுநிலை இலக்கணம் (Item and Process), சொற்பட்டியல் இலக்கணம் (Word and Paradigm) எனச் சொல்லிலக்கணம் 3 வகைப்படும். இவைகளில் அலகுத் தொடர்பு இலக்கணம் என்பது அமைப்பு மொழியியலாரால் விளக்கப்பெற்றது. இது சொல்லின் அமைப்பை விளக்குகையில் சொல்லில் தோன்றும் உருபன்களையும் அவை சொல்லில் நிற்கும் இடங்களையும் விளக்கும் தன்மையில் அமையும் இலக்கணமாகும். உருபன்கள் அவைகளின் வரிசைப்பாடு என்ற இரண்டினால் உருவாகும் சொல்லின் அமைப்பை விளக்குவதால், இந்த இலக்கணத்தை அமைப்பிலக்கணம் (Structural Grammar) எனவும், அலகுகளின் வகைப்பாட்டையும் இலக்காகக் கொண்டு விளங்குவதால் இதை வகைப்பாட்டு இலக்கணம் எனவும், சொல்லில் காணப்படும் வரிசைப்பாட்டை விளக்க முற்படுவதால் இதை அலகு அடுக்கு இலக்கணம் எனவும் அழைப்பர். இந்த இலக்கணம் சொல் உருவாக்க இலக்கணம், சொற்பட்டியல் இலக்கணம் ஆகியவற்றிலிருந்து வேறுபடுகிறது.

சொல் உருவாக்க இலக்கணம் பத்தொன்பதாம் நூற்றாண்டின் மொழி விளக்கக் கோட்பாட்டில் முக்கியத்துவம் பெற்ற 'கூறுமாற்றம்' என்ற கருத்தை மையமாகக் கொண்டு சொல்லின் அமைப்பை விளக்க முற்படுகிறது. வேர்நிலை உருபன்கள் ஒட்டுநிலை உருபன்களோடு இணைவதால் சொல்லாக மாறுகின்றன என விளக்கப்படுகிறது. இது $x + y \rightarrow z$ என்ற சமன்பாட்டின் வழியில் சொல்லின் உருவாக்கத்தை விளக்க முற்படுகிறது. இதன்படி, 'பல்லை' என்ற சொல் 'பல்' என்ற வேர் நிலை உருபன், ஐ என்ற வேற்றுமை உருபனோடு இணைவதால் உருவாகிறது என விளக்கப்படும் (பல்+ஐ→பல்லை). ஆனால் சொல் வரிசைப்பாட்டு இலக்கணம் சொல்லின் பல உருபன்கள் வரிசையாக நிற்கின்றன என்ற நிலைப்பாட்டு விளக்கத்தைக் கொடுக்கிறதேயன்றி உருபன் மாறிச் சொல்லாக உருவெடுக்கிறது என விளக்குவதில்லை.

ஒரு வேர் நிலை உருபனோடு பல, பிற உருபன்கள் இணைந்து நிற்பதன் மூலம் அமைப்பைப் பெறுகின்ற பல்வேறு தொடர்பான சொற்களைப் பட்டியல் வடிவில் தருகின்ற இலக்கணம் பட்டியல் இலக்கணம் எனப்படும். இத்தகைய இலக்கணம் பண்டைய மரபு இலக்கணத்தாரால் விளக்கப்பட்ட இலக்கணமாகும். குறிப்பாக, கிரேக்க இலக்கணம் சொற்களைப் பெயர்ப்பட்டியல், வினைப்பட்டியல் என்ற வடிவில் பட்டியலிட்டுக்காட்டி, சொற்களின் திரிபு, ஆக்கம் ஆகியனவற்றை மறைமுகமாக விளக்கியது. தமிழில் அத்தகைய பட்டியல் பின்வருமாறு:

| பெயர் | வினை |
|---|---|
| மாடு,மாட்டை,மாட்டால்,மாட்டுக்கு<br>மாட்டின், மாட்டின்பின்,மாட்டின்முன் | செய்,செய்தான், செய்கிறான்<br>செய்த, செய்யாத, செய்து,<br>செய்யாது, செய்யாமல்,<br>செய்தால். . . |

ஆக, அமைப்பு மொழியியலாரின் சொல்விளக்கம், சொல்லை இனங்காணவும் வகைப்படுத்தவும் தேவையான அமைப்பு சார்ந்த வழிமுறைகளை வெளிப்படையாக விளக்குகிறது.

### உளவியல் வழியில் சொல்

மனிதர்கள் பிறர் பேசுவதையும், பிறர் பேச்சையும் இனங்கண்டு, புரிந்துகொள்ளும் திறன் பெற்றிருப்பதால் கருத்துப்பரிமாற்றம் சிறப்புற நிகழ்கிறது. எவ்வாறு மாந்தர் பேச்சை இனங்கண்டு கொள்கிறார்கள் என்பதை உளவியலார் ஆராய்ந்து

வருகின்றனர். பேச்சை இனங்காண்பது என்பதில் பேச்சில் வெளிப்படும் சொற்களை உணர்தல் முக்கியமானது. பேச்சில் தோன்றும் சொற்களை மனித மனத்தில் நிலைபெறும் சொற்களோடு பொருத்திப் பார்ப்பதன் மூலம் பேச்சின் சொற்கள் இனங்காணப்படுகின்றன எனக் கருதப்பட்டு, அது Lexical access என ஆங்கிலத்தில் அழைக்கப்படுகிறது. பேச்சில் தோன்றும் சொற்களை மன அகராதிச் சொற்களோடு பொருத்திப் பார்ப்பதில் பல செயல்பாடுகள் உள்ளடங்குகின்றன எனக் கருதப்படுகிறது.

அதிக வருகை அளவைக் (frequency) கொண்டசொற்கள் அதாவது அதிகமாகப் புழங்குகின்ற சொற்கள் வேகமாக உணரப்படுகின்றன எனவும், இரைச்சல் சூழலாக இருந்தாலும், சொல்லின் சில பகுதிகள் மட்டுமே செவியில் விழுந்தாலும் கூட அதிக வருகை அளவைக் கொண்ட சொற்கள் எளிதாகவும், வேகமாகவும் உணரப்படுகின்றன எனவும் சோதனை வாயிலாக நிறுவப்பட்டுள்ளது. சொல்லை இனங்காணும் நிலையில் மனத்தில் நிலைபெறும் பல சொற்கள் இயக்கநிலையை அடைந்து, பல இணையான சொற்கள் மனத்தில் தோன்றி அதன் மூலம் சொல் இனங்காணல் நிகழ்கிறது எனக் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. இதை 'இணைநிலை இயக்கம்' (Parellel processing) என்பர். ஒரு சொல்லோடு தொடர்புறுகின்ற இணையான, ஒத்திருக்கும் சொற்கள் (neighbourhood words) அதிகமாக இல்லாதிருக்கும் சொற்கள் எளிதில் இனங்காணப்படும் எனவும், ஒத்த பிற சொற்கள் ஒரு சொல்லோடு தொடர்புற்று நின்றால், அவைகளின் தாக்கத்தால் ஒரு சொல்லை இனங்காண்பது மெதுவாக நிகழும் எனவும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

பேச்சில் தோன்றும் சொற்களை உணர்வதிலும் இனங்காண்பதிலும் பல தடயங்கள் பயன்படுத்தப்படுகின்றன. ஒலித்தடயம், காட்சித் தடயம், சொல்லுறவுத் தடயம் ஆகியவை முக்கியமானவை. குரல் வகை ஒலிப்பின் நேரம் என்ற ஒலித்தடயம், உதட்டசைவு என்ற காட்சித்தடயம், ஒலியடிப்படையில் ஒற்றுமையைக் காட்டுகின்ற சொற்களின் உறவைக் காணல் என்ற சொல்லுறவுத் தடயம் ஆகியன பேச்சில் தோன்றும் சொற்களை இனங்காணப் பயன்படுத்தப்படுகின்றன. சொல்லுறவுத் தடயம் பயன்படுத்தப்படுவதை 'ஒலியன் நிரப்பல்' என்ற சோதனை வாயிலாக நிறுவியுள்ளனர். Legislature என்ற சொல்லில் தோன்றும் 's' என்ற ஒலியை நீக்கிவிட்டு அந்த இடத்தில் இருமி நிரப்பி பதிவுசெய்து (LEGIOLATURE) அதை மொழி பேசுபவர்களிடம் வழங்கியபோது, அவர்கள் அந்தச் சொல்லைச் சரியாகப் புரிந்து கொண்டதைக் கண்டுபிடித்து, அதை அடிப்படையாகக் கொண்டு,

ஒலிநிற்கும் சொல்லோடு ஒத்த சொல்லைக் காணல் என்பது ஒரு தடயமாகக் கையாளப்படுகிறது என நிறுவப்பட்டது.

ஒரு சொல்லோடு நெருக்கமான தொடர்புடைய பிறசொற்கள் (Associated words) பேச்சில் முன்பு தோன்றியிருந்தால், சொற்களை இனங்காணுதல் வேகமாக நிகழும் என நிறுவப்பட்டுள்ளது. ஆகவே தொடர்பான சொல் தோன்றல் என்பதை ஒரு தடயமாகக் கருதலாம். ஒரு சொல் திரும்பத் திரும்பப் பேச்சில் தோன்றினால், பின்னர் அவை தோன்றும் போது எளிதில் இனங்கண்டு கொள்ளப்படுகின்றன. இதை Lexical Priming என்ற தடயமாகக் கருதுவர்.

பேச்சும் அதில் தோன்றும் சொற்களும் உடனுக்குடன் (online) இனங்கண்டுகொண்டு புரிந்து கொள்ளப்படுகின்றன எனவும் நிறுவப்பட்டுள்ளது. ஒருவர் வெளியிட்ட கூற்றுக்களைத் திருப்பிக் கூறும் திறமை படைத்தவர்களைப் (shadowers) பயன்படுத்தி, ஒருவர் பேசிய பேச்சைத் திருப்பிப் பேசவைத்த போது அவர்கள் செய்த பேச்சுப் பிழைகள், அந்தப் பேச்சு நிகழ்ந்த உடனடிச் சூழலோடு தொடர்புற்றிருப்பதைக் கண்டு, பேச்சும், பேச்சில் தோன்றும் சொற்களும் 25 மில்லி செகன்டுகளுக்குள் புரிந்து கொள்ளப்படுகின்றன என நிறுவப்பட்டது.

சொற்களை இனங்காண்பதில் மொழியின் பல தளக்கூறுகள், குறிப்பாகப் பொருண்மைத்தளம், சொற்தளம், ஒலித்தளம் என்ற தளக் கூறுகள் இயக்கப்படுகின்றன எனவும் (activated) வேறுபட்ட தளக் கூறுகளைத் தொடர்படுத்திய வகையில் நிகழும் இயக்கம், வேகமாகச் சொற்களை உணர்வதற்கும், ஒரே தளக் கூறுகளைத் தொடர்புபடுத்திய வகையில் நிகழும் இயக்கம் மெதுவாகக் கூறுகளை உணர்வதற்கும் வழிவகுக்கிறது எனவும் கண்டுள்ளனர். அதாவது 'pin' என்ற சொல் பேச்சில் தோன்றினால், அதை உணரும் நிலையில் 'p' என்ற ஒலியை முதல் ஒலியாகக் கொண்டு விளங்கும் பிற சொற்களும் (pit, pat,pet), 'p' என்ற ஒலியல்லாது பிற ஒலிகளில் ஒற்றுமை காட்டும் பிற சொற்களும் (sin, kin, tin, bin, chin) அவைகளின் பொருளும் உடனடியாக இயக்கம் பெற்று மனத்தில் வருகின்றன. அதன் பின்னரே பேச்சில் தோன்றும் 'pin' என்ற சொல் மனத்தில் இயக்கத்தால் வந்த 'pin' என்ற சொல்லோடு தொடர்புபடுத்தப்பட்டு உணரப்படுகிறது எனலாம். இத்தகைய 'இயக்கம்' என்ற கருத்தை 'மூளைவலைக் கொள்கையை' (Neural networks) வலியுறுத்துபவர்களும், சொல் உறவுக் கொள்கையை வலியுறுத்துபவர்களும் (Connectionist) கைக்கொள்ளுவார்கள்.

ஆக, பேச்சை உணர்தலும், பேச்சின் கூறுகளை உணர்தலும், புரிதலும் மாந்தரிடையே நிகழும் செயல்பாடுகள். இச்செயல்பாடுகள் சில காரணங்களால் வேகமாகவோ, மெதுவாகவோ நிகழ்கின்றன எனவும், அதிகமான புழக்கத்தைக் கொண்ட சொற்களும், உரையாடலில் முன்பு வெளியிடப்பட்ட சொற்களும், மறுபடி தோன்றுகின்ற சொற்களும், பேச்சையும், பேச்சில் தோன்றும் சொற்களையும் வேகமாகப் புரிந்துகொள்ள வழிவகுக்கின்றன எனவும் அறியப்பட்டது. இதற்காகப் பல சோதனைகள் உளவியலாரால் நிகழ்த்தப்பட்டு முடிவுகள் வெளியிடப்பட்டுள்ளன. இத்தகைய, ஆய்வுகள் அறிவியல் சார்ந்தவை என்பதும், தற்சார்பற்றவை என்பதும் கண்கூடு.

## அமைப்பு இலக்கணத்தில் தொடர் அமைப்பு

மரபு இலக்கணங்கள் சொல்லின் விளக்கத்துக்கு அளித்த முன்னுரிமை போன்று தொடர் விளக்கத்திற்கு முன்னுரிமை வழங்கவில்லை. இருந்தாலும் சொற்கள் தொடர்ச்சியாக நின்று தொடர்கள் உருவாகின்றன எனவும், அவை முழுமையான பொருளைக் கொண்டவை எனவும், அவைகளில் பங்கெடுக்கும் பெயர், வினை, பெயரடை, வினையடை என்பன புதிய இலக்கணப் பண்புகளான எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் போன்ற தொடர் வாயிலான இலக்கண உறவுப் பண்புகளைப் பெறுகின்றன எனவும், தொடர்களைக் குறிப்பாக வாக்கியங்களைக் கூற்று வாக்கியம், பணிப்பு வாக்கியம், வினா வாக்கியம் எனவும், உடன்பாட்டு வாக்கியம், எதிர்மறை வாக்கியம், செய்வினை வாக்கியம், செயப்பாட்டு வினை வாக்கியம் எனவும், தனி வாக்கியம், கூட்டு வாக்கியம், கலவை வாக்கியம் எனவும் வாக்கியங்களின் அமைப்பு, பண்பு ஆகியனவற்றின் அடிப்படையில் வகைப்படுத்தி மரபு இலக்கணங்கள் விளக்கின.

அமைப்பு மொழியியலார் தொடரின் அமைப்பைப் பிற இலக்கண நெறிமுறைகளைத் தழுவாமல், பொதுமைப்படுத்தி, அமைப்பு அடிப்படையில் விளக்குவதற்கான வழிமுறைகளை வழங்கினர். தொடர்கள் சொற்களாலும், சொற்கள் உருபன்களாலும் ஆனவை என்பதால், தொடர்கள் கடைநிலையில் உருபன்களையும், நடுநிலையில் சொற்களையும், முதல்நிலையில் சொற்களின் தொடர்ச்சியால் ஆன சொற்றொடர்களையும் கொண்டவை எனக் கருதி, தொடரில் பங்கெடுக்கும் பெரிய, நடுநிலை, சிறிய கூறுகளைத் 'தொடர் பகுபத உறுப்புகள்' எனப் பொதுவாக அழைத்தனர். இதனால் தொடர்கள் பகுபத

உறுப்புகளின் தொடர்ச்சியைக் காட்டுபவை எனக் கருதினர். தொடர்கள், அமைப்பு அடிப்படையில் பகுபத உறுப்புகளின் தொடர்ச்சியாலான படிநிலை அமைப்பைக் கொண்டவை என விளக்கினர். தொடர்களில் காணப்படும் சொற்றொடர்களைக் கண்டுபிடிக்க 'கூறு உட்புகுத்தல்' (Substitution) வழிமுறையைக் கையாள வேண்டும் என வலியுறுத்தினர். படிப்படையாக உட்புகுத்தல் வழிமுறையைப் பின்பற்றி நிலைநாட்டப்படும் பெரியவையும், சிறியவையும் ஆன பகுபத உறுப்புக்களைக் கண்டு அவைகளை 'அண்மைப் பகுபத உறுப்புகள்' (Immediate Constituents) என இனங்காண முடியும் எனவும் விளக்கினர்.

'பேராசிரியரின் மகன் இந்துக்கல்லூரியில் படிக்கிறான்' என்ற தொடரில் 'பேராசிரியரின் மகன்' என்ற பகுபத உறுப்பும், 'இந்துக்கல்லூரியில் படிக்கிறான்' என்ற பகுபத உறுப்பும் அண்மைப் பகுபத உறுப்புகளாக உள்ளன. முதல் பகுபத உறுப்புக்குப் பதிலாக 'அவன்' என்ற சொல்லை உட்புகுத்தி, இரண்டாம் பகுபத உறுப்புக்குப் பதிலாக 'வந்தான்' என்ற சொல்லைப் புகுத்தி இந்தத் தொடருக்கு இணையான 'அவன் வந்தான்' என்ற தொடரை அமைக்கலாம். இதனடிப்படையில் முன்குறிப்பிட்ட தொடரில் இரண்டு அண்மைப் பகுபத உறுப்புக்கள் உள்ளன என நிறுவலாம். 'பேராசிரியரின் மகன்' என்ற உறுப்பில் 'பேராசிரியரின்', 'மகன்' என்ற இரண்டு அண்மைப் பகுபத உறுப்புகள் உள்ளன. இவ்வாறு படிப்படியாகத் தொடர்களை உட்புகுத்தல் வழிமுறையைப் பின்பற்றிப் பிரிக்கும்போது பின்வரும் கிளையமைப்பு வடிவம் கிடைக்கும். இந்தப் படிநிலை அமைப்பை அடைப்புக்குறி வடிவத்திலோ, பெட்டக வடிவத்திலோ வெளியிடலாம்.

1. பேராசிரியரின் மகன் இந்துக் கல்லூரியில் படிக்கிறான்
2. ((பேராசிரியரின் மகன் ((இந்துக் கல்லூரியில்) (படிக்கிறான்)))
3.

| | | | | |
|---|---|---|---|---|
| பேராசிரியரின் மகன் | | இந்துக் கல்லூரியில் படிக்கிறான் | | |
| பேராசிரியரின் மகன் | | இந்துக் கல்லூரியில் படிக்கிறான் | | |
| பேராசிரியரின் மகன் | | இந்துக் கல்லூரியில் | | படிக்கிறான் |
| பேராசிரியர் | இன் | இந்து | கல்லூரியில் | |
| | | | கல்லூரி | இல் |

மேற்கண்ட தொடரில் 'பேராசிரியரின் மகன்', 'இந்துக் கல்லூரியில் படிக்கிறான்' என்பவை அண்மைப் பகுபத உறுப்புக்கள். 'பேராசிரியரின்', 'மகன்' என்பன அண்மைப் பகுபத உறுப்புகளாகப் 'பேராசிரியரின் மகன்' என்ற தொடரில் நிலை

பெறுகின்றன. 'பேராசிரியர்' 'இன்' என்பன 'பேராசிரியரின்' என்ற தொடரின் அண்மைப் பகுபத உறுப்புக்கள் ஆகும். இவ்வாறு தொடரின் படிநிலை அமைப்பைக் 'கூறு உட்புகுத்தல் சோதனை வாயிலாகவும்', தொடரின் அண்மைப் பகுபத உறுப்புக்களை அவைகளின் படிநிலை அமைப்பின் வாயிலாகவும் இனங் காணலாம்.

தொடர்கள் தொடர்ச்சி நிலை அமைப்பையும், படிநிலை அமைப்பையும் காட்டுகின்றன. இந்த அமைப்புகளில் பல பகுபத உறுப்புகள் காணப்படுகின்றன. இந்த உறுப்புக்கள் தங்களிடையே இணக்க நிலையையும் காட்டுகின்றன. இணக்க நிலை என்பதைத் தேர்வுக் கட்டுப்பாட்டைக் காட்டுதல் எனலாம். சில பகுபத உறுப்புகள் சில உறுப்புகளோடு மட்டுமே தொடர்நிலையில் நிற்கின்றன என்பதைத் தொடர்கள் காட்டுகின்றன. எடுத்துக்காட்டாகச் 'செய்' என்ற வினை ஒரு தொடரில் பெயர்களை அண்மை உறுப்பாக ஏற்றுவரும். ஆனால் 'நட' என்ற வினை பெயர்களை அண்மை உறுப்பாக ஏற்றுவராது. (அவள் பணியாரம் செய்தாள், *அவள் பணியாரம் நடந்தாள்). 'செய்' என்ற உறுப்பு 'பணியாரம்' என்ற உறுப்பை ஏற்று வருவதால் அவை இரண்டும் இணக்க உறவைக் காட்டுகின்றன எனவும், 'நட' என்ற உறுப்பு 'பணியாரம்' என்ற உறுப்பை ஏற்று வராததால் அவை இரண்டும் இணக்கத்தைக் காட்டாதன எனவும் கருதலாம்.

தொடர்களில் தோன்றும் உறுப்புகள் திரிபடையும் பண்பையும், அவைகளைச் சார்ந்துவரும் உயர் ஒலிப்புப் பண்புகளான stress, pitch, intonation என்பவைகளையும் காட்டுகின்றன. இவைகளையும் தொடரின் பண்புகள் எனலாம். ஆங்கிலத்தில் is, am, will போன்ற துணைநிலை வினைகள் தொடரில் தோன்றும்போது சில இடங்களில் சுருங்கித் தோன்றுகின்றன ( I will = I'll, I am = I'am, He is = He's, they are = they're want to = wanna). இத்தகைய உறுப்புக்களின் ஒலிநிலை மாற்றங்களைத் ஒலித் திரிபடைதல் எனலாம். ஆங்கிலத் தொடர்களில் அழுத்த ஒலிப்புகள் தொடர் உறுப்புகளில் பல இடங்களில் தோன்றி அமைப்பிலும், பொருண்மையிலும் வேறுபாடுகளை உருவாக்குகின்றன. இவைகளை ஒலிப்புப் பண்புகளில் ஏற்படும் மாற்றம் எனலாம். ஆக, மொழியின் தொடர்களில் பகுபத உறுப்புக்களைக் கொண்ட தொடர்நிலை அமைப்பு, படிநிலை அமைப்பு, தேர்வுநிலைப் பண்பு, ஒலிப்பு நிலைப்பண்பு ஆகியன வெளிப்படுகின்றன என அமைப்பு மொழியியலார் விளக்குவர். குறிப்பாக, தொடரின் அண்மைப்

பகுபத உறுப்புகளைப் 'புகுத்தல் வழிமுறை' என்ற சோதனை வாயிலாக நிலைநாட்டலாம் எனவும் கருதுவர்.

தொடர்களின் அண்மைப் பகுபத உறுப்புக்களைக் காண்பதோடு மட்டுமல்லாமல், அவைகளை அமைப்பு மொழியியலார் வகைப்படுத்தியும் விளக்குவர். தொடரின் அண்மைப் பகுபத உறுப்புக்களை இரட்டை உறுப்புக்கள், இரட்டையல்லா உறுப்புக்கள், தொடர்ச்சியான உறுப்புக்கள், தொடர்ச்சியற்ற உறுப்புக்கள் என வகைப்படுத்துவர். இந்த வகைப்பாட்டிற்கு உறுப்புக்களின் எண்ணிக்கை, தொடர்ச்சியாகத் தோன்றும் தன்மை என்ற பண்புகள் அடிப்படையாக அமைகின்றன. பெரும்பாலான மொழித்தொடர்கள் இரண்டு பகுபத உறுப்புக்களைக் கொண்டவை என்றாலும் சில தொடர்கள் இரண்டுக்கும் மேற்பட்ட உறுப்புக்களைத் தொடர்ச்சியாகக் காட்டுகின்றன என நிறுவலாம். இந்த அடிப்படையில் தொடர் பகுபத உறுப்புக்களை இரட்டை உறுப்புக்கள் இரட்டையல்லா உறுப்புக்கள் என வகைப்படுத்துவர்.




தொடர்ச்சியாகத் தோன்றல், தோன்றாமை என்ற பண்புகளின் அடிப்படையில் பகுபத தொடர் உறுப்புக்களை தொடர்ச்சியானவை, தொடர்ச்சியற்றவை எனவும் வகைப்படுத்தலாம்



மேற்குறிப்பிட்ட தொடர் குறித்த 'அண்மைப் பகுபத உறுப்பு விளக்கம்' ஒருபுறம் இருக்க, அமைப்பு மொழியியலாரில் மற்றொரு வகையினர் தொடர்களில் தோன்றும் அண்மைப் பகுபதநிலை உறுப்பு தோன்றும் ஒரு இடத்தில் உட்புகத் தகுந்த பிற கூறுகளைக் கண்டறிந்து அவைகளை ஒரு குழுவாக அமைத்து அதை 'உறுப்புத்தொகுப்பு (form class) என விளக்குவர். அத்தகைய பல உறுப்புத் தொகுப்புகளிலிருந்து உரிய உறுப்புக்களைத் தேர்ந்தெடுத்துத் தொடர்ச்சியாக நிறுத்துவதன் மூலம் செம்மையான தொடர்களின் அமைப்பை விளக்கலாம் எனவும் கருதுவர். மேலும் அவர்கள் தொடர்களைப் பல்வேறு வகையாகப் பிரித்து விளக்குவதோடு, தொடர்களில் உறுப்புக்களை இணைப்பதற்கு உதவுகின்ற பல கூறுகளும், உறவுகளும் காணப்படும் எனவும் விளக்குவர்.

| A | | B | |
|---|---|---|---|
| என்னுடைய | நண்பன் | அருமையாக | நடிப்பான் |
| அந்த | மனிதன் | | நல்லவன் |
| | அவன் | | வருகிறான் |

மேற்கண்ட தொடர்களில் A, B என்ற அண்மைப் பகுபத உறுப்புக்கள் உள்ளன. A நிலையில் வரும் உறுப்புகள் அனைத்தும் ஒன்றிற்குப் பதிலாக மற்றொன்று நிற்கும் தன்மையில் இருப்பதால் அவைகளை ஒரு தொகுதியினுள் அடக்கலாம். ஆக, A , B என்ற தொகுதிகளில் நிற்கும் உறுப்புக்கள் மும்மூன்றும் இரு உறுப்புத் தொகுப்பைக் காட்டுகின்றன எனலாம்.

வெவ்வேறு உறுப்புத் தொகுப்புகளில் வரும் உறுப்புக்கள் தொடர்நிலையில் நிற்பதால் தொடரின் வடிவம் பெறப்படும். தொடர்களில் பகுபத உறுப்புக்களும் (constituent), அருவ வடிவத் தொடரமைப்பும் (construction) தோன்றுகின்றன எனவும், உறுப்பும் அருவ வடிவத் தொடரமைப்பும் இணைந்து உருவ வடிவத் தொடரமைப்பை (constitute) நிலைபெறச் செய்கின்றன என விளக்கப்படுகிறது. இந்த அரூப வடிவத் தொடரமைப்பு 1. மையம் தழுவிய உறுப்புக்களைக் கொண்ட தொடர் வடிவம் எனவும் 2. மையம் தழுவாத உறுப்புக்களைக் கொண்ட தொடர் வடிவம் எனவும் பிரிக்கப்படுகின்றது. மையம் தழுவிய தொடரமைப்பு என்பதில் தோன்றும் உறுப்புக்களில் ஒன்று மைய உறுப்பாகவும் மற்றவை சார்புநிலை உறுப்பாகவும் தோன்றும். எப்படி மையநிலை உறுப்பைக் கண்டு பிடிப்பது? ஒரு முழுத் தொடர் நிற்கும் இடத்தில்

அந்தத் தொடரின் ஓர் உறுப்பை மட்டும் தேர்ந்தெடுத்துப் புகுத்தினால் சரியான தொடர்கள் உருவானால், அத்தகைய உறுப்பை மைய உறுப்பு எனலாம். மையம் தழுவாத தொடர்களில் காணப்படும் உறுப்புக்களை மையநிலை, சார்புநிலை உறுப்புகள் என வகைப்படுத்த இயலுவதில்லை.

மையம் தழுவிய தொடர்களில் கூட்டுநிலைத் தொடர்கள், புகுநிலைத் தொடர்கள் என்ற வகைகள் அடங்குகின்றன. பின்வரும் எடுத்துக் காட்டுக்கள் இந்த வகைப்பாட்டை விளக்குகின்றன. இந்த வகைப்பாடும் அமைப்பு வாயிலான, உறுப்புக்களின் நிலைப்பாடு சார்ந்த வகையிலான வகைப்பாடு என அமைப்பு மொழியியலார் விளக்குவர்.

மையம் தழுவிய தொடர் மையம் தழுவாத தொடர்







தொடரில் பகுபத உறுப்புக்கள் இருப்பதைப் போன்று அமைப்பை இணைக்கும் வகையிலான சில கூறுகளும் உள்ளன என அமைப்பு மொழியியலார் விளக்குவர். குறிப்பாக, ஆளல் (Government), இயைதல் (Concord), சுட்டுதல் (Reference) என்பவைகளைக் காட்டுகின்ற கூறுகள் உள்ளன என விளக்குவர். தொடர்களில் காணப்படும் பெயர், வினை என்ற உறுப்புகளின் இடையில் இயைபு உறவு அல்லது இணக்க உறவு தோன்றுகிறது. இந்த இயைபு உறவை வெளிப்படுத்தும் வண்ணம் சில கூறுகள் தோன்றுகின்றன. இவைகளை இயைபுக் கூறுகள் எனலாம். இடம்-பால்-எண் காட்டும் கூறுகள் இயைபுக் கூறுகளாக மொழியில் தோன்றலாம். தமிழில் எழுவாய்த் தொடர்களும், பயனிலைத் தொடர்களும் இயைபைக் காட்டுகின்றன. (நான் வந்தேன், நீ வந்தாய், அவன் வந்தான், அவள் வந்தாள், அவர்கள் வந்தார்கள்).

தொடர்களில் காணப்படும் ஓர் உறுப்பின் இலக்கணப் பண்பைக் கொண்டு அத்தொடரில் காணப்படும் பிற உறுப்புக்களின் பண்பையும், வருகையையும் உணரமுடியும் என்றால், தோன்றும் உறுப்புக்கும் உணரும் உறுப்புக்கும்

இடையிலான உறவை 'ஆளுமை உறவு' எனலாம். 'காமாட்சி வந்தான்' என்ற தொடரில் 'வந்தான்' என்ற பயனிலை ஆண்பாலைக் காட்டுவதால், அத்தொடரில் காணப்படும் 'காமாட்சி' என்ற பெயர், பாலை வெளிப்படையாகக் காட்டாவிட்டாலும் அது ஆண்பாற் பெயர் என உணரமுடியும். 'வந்தான்' என்ற பகுபத உறுப்பு 'காமாட்சி' என்ற பகுபத உறுப்பை ஆண்பால் பண்பு கொண்டது என உணர வழிவகுப்பதால், அதை 'ஆளும் உறுப்பு' எனவும், 'காமாட்சி' என்ற உறுப்பை ஆளப்படும் உறுப்பு எனவும் கருதி அவைகளினிடையே ஆளுமை உறவு உள்ளது என நிறுவலாம்.

தொடர்களில் காணப்படும் ஒரு உறுப்பை அதே தொடரில் தோன்றும் மற்றொரு உறுப்பு சுட்டிக் காட்டும் வகையிலும், முதல் உறுப்பின் பதிலியாகச் செயல்படும் வகையிலும் இருந்தால் அவைகளினிடையே 'குறுக்குச் சுட்டல் உறவு' (cross reference) உள்ளது எனக் கூறலாம். ஒரு உறுப்பைச் சுட்டுகின்ற பதிலி உறுப்பை 'சுட்டுப்பதிலி' (anaphora) எனவும், அதனால் சுட்டப்படும் உறுப்பை 'முன்தோன்றிய முழு உறுப்பு' (antecedent) எனவும் கருதுவர். "கிருஷ்ணன் எங்கு சுற்றித் திரிந்தாலும் இரவு ஒரு வாயாவது தன் மனைவியின் கையால் சாப்பிட்டு விட்டுத்தான் தூங்குவான்' என்ற தொடரில் 'கிருஷ்ணன்' என்ற உறுப்பு 'முன்தோன்றிய முழு உறுப்பாகவும்', 'தன்' என்ற உறுப்பு 'கிருஷ்ணன்' என்பதைச் சுட்டுகின்ற 'சுட்டுப்பதிலி' யாகவும் செயல்படுவதால் அவைகளுக்கிடையில் 'குறுக்குச் சுட்டல் உறவு' உள்ளது எனவும் நிறுவலாம்.

தொடர்களில் தோன்றும் உறுப்புக்களுக்கு இடையிலான தொடரியல் உறவு வகைகளைப் பின்னர் வந்தபிற மொழியியலறிஞர்கள் தங்கள் தொடரியல் விளக்கங்களில் சிறப்பாக எடுத்துக் காட்டினர். பொதுவாக, தொடரில் தோன்றுகின்ற உறுப்பு உறவுகளையும், குறிப்பாக இணக்க உறவு, ஆளுமை உறவு, சுட்டல் உறவு என்ற உறவு வகைகள் உள்ளன என அமைப்பு மொழியியலார் விளக்குவர். தொடர்கள், அவைகளில் தோன்றும் அண்மைப் பகுநிலை உறுப்புக்கள், பகுபத உறுப்புக்களின் தொகுப்பு, அருவ நிலை தொடரமைப்பு, அவைகளின் வகைகள் போன்ற பல்வேறு கருத்துக்களையும், கூறுகளையும், அமைப்புகளையும், தொடர்புகளையும் எல்லோருக்கும் புலப்படும் வண்ணம் வெளிப்படையான வழிமுறைகளைப் பின்பற்றி இனம்காண அமைப்பு மொழியியலார் வழிவகுத்தனர். இதனால் அமைப்பு மொழியியலாரின் தொடர் விளக்கம் அறிவியல் நெறிமுறைகளைத் தழுவிய விளக்கம் என நிலை நாட்டலாம்.

**உளவியல் வழி தொடர்**

மொழியின் தொடர்களில் அங்கக் கூறுகளான சொற்றொடர்களும், சொற்களும் உருபன்களும் உள்ளன எனவும், இவை தொடர்நிலை அமைப்பையும், தேர்வு நிலை அமைப்பையும், படி நிலை அமைப்பையும் கொண்டுள்ளன எனவும், இந்த அமைப்புகளை அடைப்புக் குறியீடுகளின் வாயிலாகவோ, கிளையமைப்பு வாயிலாகவோ வெளிக்காட்ட முடியும் எனவும் மொழியியலார் விளக்குவர். 'கல்லூரி விழாவில் முதல்வர் நாயர் வெற்றிபெற்ற மாணவர்களுக்கு வித விதமான பரிசுகளை வழங்கினார்" என்ற தொடரின் அங்கக்கூறுகளின் அமைப்பை அடைப்புக்குறி வடிவத்தில் பின்வருமாறு காட்டலாம்.

(கல்லூரி-பெயர் விழாவில்-இடம்)-வேற்றுமைத் தொடர்

(முதல்வர்-பெயர் நாயர்-பெயர்)-பெயர்த்தொடர்

(வெற்றி-பெயர் பெற்ற-பெயரெச்சம் மாணவர்களுக்கு-க்கு) வேற்றுமைத் தொடர்

(பரிசுகளை- ஐ)- வேற்றுமைத்தொடர்

(வழங்கினர்-வினை)

கல்லூரி விழாவில் (வேற்.தொடர்)
முதல்வர் நாயர் (பெயர்த்தொடர்)
வெற்றி பெற்ற மாணவர்களுக்கு (வேற்.தொடர்)
விதவிதமான பரிசுளை (வேற்.தொடர்)
வழங்கினார் (வினை)

உளவியலார் இத்தகைய தொடர் அங்க உறுப்புகள் குறித்த அறிவு மொழிபேசுபவர்களின் மனதில் நிலை பெறுகின்றதா எனவும், அவ்வுறுப்புகளும் தொடரமைப்பும் உளவியல் உண்மைகளா எனவும் காண்பதற்குப் பல ஆராய்ச்சிகளை மேற்கொண்டனர்.

மொழிபேசுகின்ற தகவலாளர்களிடம் சில வாக்கியங்களைக் கொடுத்து அவைகளில் தோன்றும் சொற்களில் எவை மிகுந்த நெருங்கிய தொடர்புடையவை எனக் கணிக்கும்படி வேண்டப்பட்டது. தகவலாளர்கள் தங்கள் உள்ளுணர்வின் அடிப்படையில் வழங்கிய தொடர்புடைய சொற்கள் மொழியியலார் நிறுவுகின்ற தொடரங்கக் கூறுகளோடு ஒத்திருப்பதைக் கண்டதன் மூலம் மனித மனதில் தொடரங்க உறுப்புக்களைக் குறித்த உள்ளுணர்வு உள்ளது என்பதை நிறுவ முயன்றனர்.

தொடரங்க உறுப்புக்கள் மனிதரின் உள்ளுணர்விலும், அவைகளைக் கேட்டு உணரும் தன்மையிலும் உள்ளனவா எனக் கணிக்கச் சோதனைகள் மேற்கொள்ளப்பட்டன. சில வாக்கியங்களைக், குறிப்பாக, விரலால் உருவாக்கப்படும் 'நெடிப்பு' (snap sounds) ஒலிகளை உள்ளடக்கிய வாக்கியங்களை மொழி பேசுபவர்களிடம் கொடுத்து, அந்த வாக்கியங்களை உணர்ந்து கொள்ளுமாறு பணித்தபோது, அந்த நெடிப்பு ஒலிகள் வாக்கிய எல்லையைக் காட்டுவன என அவர்களால் உணர்வதாகப் பட்டது. அந்த நெடிப்பு ஒலிகள் எந்த வகையிலும் வாக்கியத்தை உணரத் தடையாக அமையவில்லை எனவும் கண்டுபிடிக்கப்பட்டது. ஆகவே, வாக்கிய உறுப்புக்கள் கேட்டுணரும் வகையில் உள்ளன எனவும், உளவியல் அடிப்படையில் உண்மையான தொடர் அங்கக் கூறுகள் எனவும் நிலைநாட்டப்பட்டன.கட்ஸ், பீவர் என்ற அறிஞர்கள் இத்தகைய 'நெடிப்பு ஒலி சோதனையை' மேற்கொண்டனர்.

மேற்கண்ட சோதனைகளின் வாயிலாகத் தொடர் அங்க உறுப்புக்கள் மனித மனத்தில் நிலைபெறுகின்றன என்பதைக் காட்டுகின்றனவேயன்றி, எந்த அடிப்படையில் நிலைபெறுகின்றன என்பது வெளிப்படவில்லை. தொடரியல் உறுப்புகளும், தொடர் அமைப்பும் அமைப்பு வழியிலும், பொருண்மை வழியிலும், சொல் வழியிலும் மனத்தில் நிலைநிறுத்தப்பட்டிருக்கலாம் எனக் கருத வாய்ப்பு இருப்பதால் தொடரியல் பண்பை மட்டும் முன்னிலைப் படுத்தி, அத்தகைய அடிப்படையில் தொடர் உறுப்புக்களின் நிலைப்பாட்டைக் காணும் சோதனைகள் மேற்கொள்ளப்பட்டன. இதில் மனத்தில் இருக்கும் தொடர் உறுப்புக்களைக் குறித்த அறிவின் உதவியால் புதிதாகப் பேச்சில் தோன்றும் தொடர் உறுப்புக்களை இனங்காண இயலுமா எனக் காணும் சோதனைகளும் வெளியிடப்பட்டன. இதைப் Prime சோதனை என அழைப்பர்.

ஆங்கில மொழியில் 'கொடு, பெறு, வில்' போன்ற வினைகளைக் கொண்ட வாக்கியங்களில் இரண்டு வடிவங்கள் உள்ளன. இவ்வடிவங்கள் செயப்படு பொருள்கள் இடம்மாறித் தோன்றுவதால் உருவாகின்றன. அவைகளுக்கான எடுத்துக்காட்டு பின் வருமாறு:

| | | | |
|---|---|---|---|
| 1. Mary | gave | Stalin | a book |
| NP | V | NP | NP |
| 2. Mary | gave | a book | to Stalin |
| NP | V | NP | PP |

இத்தகைய வடிவ வேறுபாட்டைக் காட்டும் தொடர்களை மையமாகக் கொண்டு சோதனைகள் மேற்கொள்ளப்பட்டன. முதலில், ஒரு பெண் ஒரு புத்தகத்தை ஒரு பையனிடம் கொடுப்பதைக் காட்டும் படம் மொழிபேசுபவர்களிடம் காட்டப்பட்டது. அதற்கு முன்பாக, NP+V+ NP+ PP என்ற தொடர் உறுப்புக்களைத் தன்னகத்தே கொண்டிருந்த வேறொரு தொடரை (IBM+Moved+a bigger computer+to the Sears Store) வாய்விட்டு மொழிபேசுவோரைப் படிக்க வைத்துவிட்டு, அதன் பின்னர் முன்குறிப்பிட்ட படத்தைக் காட்டி, அதில் நிகழும் நிகழ்வைத் தொடர் வடிவத்தில் கூறுமாறு கேட்டனர். இதற்கு இசைந்து, மொழிபேசுபவர்கள் "The girl gives a book to the boy" என்ற தொடரை வெளியிட்டனர் எனவும் 'The girl gives the boy a book' என்ற தொடரை வெளியிடவில்லை எனவும் கண்டறிந்தனர். இந்தச் சோதனையிலிருந்து, முன்னரே மனத்தில் பதிந்த ஒரு தொடர் உறுப்பு அமைப்பு பின்னர் வழங்கப்படும் தொடர் உறுப்புத் அமைப்பைத் தேர்வு செய்து வெளியிட உதவுகிறது எனவும், ஆகவே தொடர் உறுப்புக்களைக் குறித்த அறிவு மனத்திலும், உள்ளுணர்விலும் நிலைபெறுகிறது எனவும், தொடர் உறுப்புகள் உளவியல் உண்மை எனவும் நிறுவப்பட்டது.

தொடர்களை விளக்கும் இலக்கணங்களில் சூழ்நிலைகளைப் பற்றிய குறிப்புக்களை உள்ளடக்கிய இலக்கணம், உள்ளடக்காத இலக்கணம் என இரு வகைகள் உள்ளன. முதல் வகை இலக்கணத்தின் விதிகள், கூறுகள் விரிவதையோ மாறுவதையோ சுட்டிக்காட்டும் போது, மாற்றம் ஏற்படும் அமைப்புச் சூழல்களையும் விதிகளில் காட்டுமாறு அமைக்கப்படும். இரண்டாம் வகை இலக்கணத்தில் காணப்படும் விதிகளில் அமைப்புச் சூழல்கள் குறிப்பிடப்படுவதில்லை. குறிப்பாக முதல்வகை இலக்கணம் A→B/C-D என்ற வகை விதிகளையும், இரண்டாம் வகை இலக்கணம் A→B என்ற வகை விதிகளையும் கொண்டிருக்கும். சூழ்நிலை குறிப்பிடாத வகை இலக்கணம் மனித மனத்தில் நிலைபெறுகிறதா என்ற கருத்தை மையப்படுத்திய வேறுபட்ட நிலைப்பாடுகள் உள்ளன. சில உளவியலார், சூழ்நிலை குறிப்பிடாத வகையில் தொடரமைப்பைப் படைக்கும் முறையை உள்ளடக்கிய இலக்கணம் மனித மனத்தில் உள்ளது எனவும், சிலர்,

சூழ்நிலை குறிப்பிட்ட வகையில் தொடரமைப்பைப் படைக்கும் முறையைக் கொண்ட இலக்கணமே மனத்தில் உள்ளது எனவும் கூறுவர். முதல் வகை உளவியலாரை modularist எனவும், இரண்டாம் வகை உளவியலாரை Non-modularist எனவும் அழைப்பர். இரண்டாம் வகை உளவியலார், தொடர்கள் எப்போதும் தனித்து நிற்பதில்லை எனவும், பொருண்மை, இன்னோசை, சூழ்நிலைப் பொருண்மை, சமுதாய அம்சங்கள், கருத்தாடல் சூழல் போன்ற பல பண்புகளோடும், அப்பண்புகளோடு தொடர்புற்ற வகையிலும் தான் மனித மனத்தில் நிலைபெறுகின்றன என்பர்.

ஆக, தொடரியல் அடிப்படையில் தொடரைப் பிரித்துத் தொடர் உறுப்புக்களைப் பார்ப்பதும், தொடர் உறுப்புக்களால் ஆன தொடர் அமைப்பு குறித்த அறிவு மனத்தில் நிலைபெற்றுள்ளதா எனக் காண்பதும், அதன் மூலம் தொடர் அமைப்புகள், தொடர் உறுப்புகள் என்பன உளவியல் உண்மைகள் என நிலைநாட்டுவதும் சோதனை வழியில் மறைந்து கிடப்பனவற்றை வெளிப்படையாக்கும் கடனாக உளவியலாரால் கருதப்படுகின்றன. இதனால் உளமொழியியலும் அறிவியல் நெறிமுறையைப் பின்பற்றும் தன்மையுடையதாகிறது.

### மாற்றிலக்கணத்தில் தொடர் அமைப்பு

அமைப்பு மொழியியலார் இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் வழக்கிலிருந்த செய்கைக் கொள்கை (Behaviourism) என்ற உளவியல் கொள்கையை அடிப்படையாகக் கொண்டு, மொழியை ஒரு வகையான செயல் எனக் கொண்டு, செயல்கள் காரணம், விளைவு (Stimulus, response) என்பவைகளோடு தொடர்புடையவை என்பதால், மொழியைப் பயன்படுத்துவதும் ஒரு செயல் எனக் கருதி மொழிச்செயல் காரண விளைவுகளை அடிப்படையாகக் கொண்டது எனக் கருதினர். ஒரு சொல்லையோ, தொடரையோ மொழி பேசுபவர்கள் பயன்படுத்தினால் அதற்கான காரணமும் இருக்கவேண்டும்; அது சில விளைவுகளை எதிர் பார்த்து செய்யப்படும் எனவும் கருதினர். 'பசிக்கிறது' என ஒருவர் சொன்னால், அவர் வயிற்றில் ஏற்படுகின்ற பசிக்கான அறிகுறிகள் காரணம் எனவும், யாராவது அவருக்கு உணவைக் கொடுத்தல், என்பதை விளைவு எனவும் கூறலாம். ஒருவர் கூறும் கூற்றுக்குப் பிறர் மறுமொழியாகக் கூறும் கூற்றும் காரண, விளைவுகளின் வெளிப்பாடே எனக் கருதலாம். அமைப்பு, பொருண்மை, பயன்பாடு என்பவைகளைக் கூற்றுக்கள் கொண்டிருந்தாலும் கூற்றுக்களின் அமைப்பை விளக்குவதையே அமைப்பு மொழியியலார் தம் கடனாகக் கொண்டனர்.

மொழியில், மொழிக்கூறுகளில், குறிப்பாக, மொழியின் பயன்பாட்டுச் சூழலில், காரண விளைவுகளோடு தொடர்புடைய வகைகளில் பயன்படுத்தப்படும் மொழிக் கூறுகளில் ஒலி, ஒலியன், உருபன், சொல், தொடர் உறுப்பு, தொடர் என்பவை உள்ளன எனவும், அவைகளையும் அவைகளின் அமைப்பையும் கண்டு கொள்வதற்கும் வகைப்படுத்துவதற்கும் உரிய வழிமுறைகளை வழங்கி மொழியின் அமைப்பை விளக்க முனைந்தனர் அமைப்பு மொழியியலார். மொழிக் கூறுகளைக் காண்பதற்காக அவை எதிர்நிலையில் நிற்றல் (contrast) வேற்று நிலையில் நிற்றல் (complementation), நிகர்நிலையில் நிற்றல் (equivalent), ஒன்றின் இடத்தில் மற்றொன்று பெயர்தல் (Substitution), வேறுபட்ட பொருள் காட்டுதல் (differential meaning), பொருள் வேறுபட்டுத் தோன்றல், பொருள் ஒன்றுபட்டுத் தோன்றல் போன்ற பண்புகளைக் காண்பதன் மூலம் மொழிக் கூறுகளை இனங்காணலாம் என வலியுறுத்தினர். ஒலியன்கள், உருபன்கள், தொடர் உறுப்புகள், தொடர் எனப் பலவகை மொழிக்கூறுகள் உள்ளன எனவும் அவை ஒன்றிலிருந்து மற்றொன்று பெறப்படும் வகையில் தொடர் நிலையில் நிற்கின்றன எனவும், அவை வேறுபட்ட தள உறுப்புகளாக நிலைபெறுகின்றன எனவும், ஒலியன், உருபன், சொல், தொடர் உறுப்பு ஆகியவைகளுக்கு மாற்று வடிவங்கள் உள்ளன எனவும் அமைப்பு மொழியியலார் விளக்கினர். மொழியையும், மொழிக் கூறுகளையும் விளக்க, குறிப்பாக அவைகளின் அமைப்பை விளக்கி அவைகளை வகைப்படுத்த முயன்றனர். அதற்கான வழிமுறைகளை வழங்கி மொழியமைப்பை விளக்கியது அறிவியல் வழியிலான விளக்கமாக அமைந்தது.

அமைப்பு மொழியியலார் வழங்கிய தொடர் குறித்த அண்மைப் பகுபதத் தொடர் உறுப்பு விளக்கத்தையும், 18ஆம் நூற்றாண்டின் தத்துவ அறிஞர்கள் கடைபிடித்த தருக்கம் சார்ந்த மொழிக் கொள்கைகளையும், 19 ஆம் நூற்றாண்டு மொழியியல் அறிஞர்கள் கைக்கொண்ட 'மொழிமாற்றம்' என்ற கருத்தாக்கத்தையும் அடிப்படையாகக் கொண்டு, மாற்றிலக்கண மொழியியலார், மொழியின் தொடர்களை முதல்நிலை விளக்கப் பொருளாகக் கொண்டு, தொடர்களின் நிலைப்பாட்டை விளக்குவதைத் தவிர்த்து, அவைகளைப் படைப்பதற்கும், மாற்றுவதற்கும் உரிய வழிமுறைகளை வழங்கினர். தொடர் படைத்தல், தொடர் மாற்றல் என்பவைகளை எவ்வாறு நிகழ்த்தலாம் என்பதை விளக்கும் இலக்கணத்தைப் 'படைப்பிலக்கணம்' எனவும் 'மாற்றிலக்கணம்' எனவும் அழைப்பர்.

சாம்ஸ்கி என்ற மொழியியல் மேதையின் கருத்தாக்கத்தால் உருவாகிய இத்தகைய இலக்கணக்கோட்பாடு இருபதாம் நூற்றாண்டின் இடைப்பகுதியிலிருந்து இன்று வரை வளர்ந்து, பல வகைகளில் மேம்படுத்தப்பட்டு வாழ்ந்து வருகின்ற இலக்கணக் கோட்பாடாகும்.

அமைப்பு மொழியியலாரின் மொழி விளக்கம் மொழிக் கூறுகளின் அமைப்பை விளக்குவதற்கும் அதற்கான வழிமுறைகளை வகுப்பதற்கும் முன்னுரிமை கொடுத்தது. ஆகவே அமைப்பு இலக்கணம் மொழிக் கூறுகளின் நிலைப்பாட்டை, வகைப்பாட்டை விளக்குகின்ற விளக்கமாக அமைகிறது. இவ்விலக்கணம் மொழிக்கு முன்னுரிமை வழங்குகிறது. ஆனால் படைப்பு மாற்று இலக்கணவியலார் தொடர்களின் இலக்கண அமைப்பை எவ்விதம் மொழிபேசுபவர்கள் படைக்கிறார்கள் எனவும் மாற்றுகிறார்கள் எனவும், தொடர்களைப் படைக்கவும் மாற்றவும் சில விதிகளைப் பயன்படுத்துகிறார்கள் எனவும், அவ்விதிகளைப் பயன்படுத்தும் போது சில கட்டுப்பாடுகளையும் கடைப்பிடிக்கின்றனர் எனவும் கருதி அவைகளை விளக்க முற்படுகின்றனர். ஆகவே இந்த இலக்கணத்தை மாந்தர் சார்ந்த இலக்கணம் எனவும், ஒரு வகையான செயற்பாட்டு இலக்கணம் எனவும், விதிசார்ந்த இலக்கணம் எனவும் கருதலாம். இவ்விலக்கணம், விதிகளைக் குறித்த விளக்கத்தை அளிப்பதால் எல்லா மொழிகளிலும் கடைப்பிடிக்கப்படும் படைப்பு; மாற்று விதிகளைக் காணமுடியும் என முயல்வதால் இதை மொழிப்பொது இலக்கணம் எனவும் அழைக்கலாம்.

படைப்பிலக்கணம் ஒருவகை செயற்பாட்டு இலக்கணம் என்றாலும் கூட, அதையும் தொடர்களின் பண்புகளை நிலை நாட்டுகின்ற, பல்வேறு வகையான தொடர்களைப் படைத்து மாற்றும் முறைகளை நிலைநாட்டுகின்ற இலக்கணம் எனலாம். புதைந்து கிடக்கின்ற தொடரியல் பண்புகளையும், தொடர்களைப் படைக்கும் விதத்தையும் வெளிப்படையாக்கி, எல்லோருக்கும் புலப்படும் வண்ணம் நிறுவுகின்ற தன்மையைக் கொண்டிருப்பதால், மாற்றிலக்கணத்தை அறிவியல் நெறிமுறையைத் தழுவி உருவான இலக்கணம் எனலாம். இந்த இலக்கணத்தின் மூலம் வெளிவந்த பல தொடர் பண்பு சார்ந்த கருத்துக்கள் பின்னர் உளவியலாரால் சோதனைக்கு உட்படுத்தப்பட்டு நிறுவப்பட்டதையும் நாம் காணமுடியும்.

மொழியானது பல்வகையான இலக்கணத் தொடர்களை உருவாக்கிப் பயன்படுத்துவதற்கு ஏற்ற வகையில் பல உத்திகளை

உட்கொண்டுள்ளது. குறிப்பாக, மொழியின் இலக்கணத் தொடர்களில் அடிப்படையான தொடர்களை உருவாக்குவதற்கும், அவ்வாறு உருவாக்கிய அடிப்படைத் தொடர்களை மாற்றியமைத்து, பல்வேறு புதிய தொடர்களை உருவாக்குவதற்கும் ஏற்ற விதிகளை மறைநிலையில் இலக்கணம் கொண்டுள்ளது. எண்ணிக்கையிலடங்கும் சில விதிகளைக் கொண்டு, எண்ணிக்கையிலடங்காத, எளிமையான அல்லது கடினமான தொடர்களையும் புத்தம்புது தொடர்களையும் உருவாக்குவதற்கான விதிகளையும், வழிமுறைகளையும் மொழி கொண்டுள்ளது எனவும், இத்தன்மையை மொழியின் 'படைப்பாற்றல' (Creativity) எனவும் கருதி, இத்தகைய விதிகளைப் பயன்படுத்தியே மொழிபேசுபவர்கள் மொழித் தொடர்களைப் படைத்து மாற்றும் திறன் பெறுகிறார்கள் எனவும் இந்தத் திறனை உள்ளடக்கிய மொழி அறிவு (linguistic competence) மொழி பேசுவோருக்கு உண்டு எனவும், அதை வெளிக் கொணர்வதே படைப்பு இலக்கணத்தின் குறிக்கோள் எனவும் படைப்பிலக்கணத்தார் கருதுவர்.

மொழியின் தொடர்கள் இலக்கண அமைப்பையும், பொருளையும், ஒலியமைப்பையும் கொண்டவை. ஆகவே மொழியின் இலக்கணத்தை விளக்கும் போது, தொடர்களின் இலக்கண அமைப்பைப் படைத்தல், இலக்கண அமைப்பை மாற்றுதல், தொடர்களுக்குப் பொருள் வழங்குதல், தொடர்களுக்கு ஒலியமைப்பை வழங்குதல் போன்ற செயல்களை நிகழ்த்துவது எவ்வாறு என்பதை விளக்கும் வகையில் இலக்கணம் அமையவேண்டும் என்ற இலக்கைக் கொண்டு மாற்றிலக்கணம் வடிவமைக்கப்பட்டது.

அமைப்பு இலக்கணத்தைப் போன்று மொழித்தரவுகளைத் திரட்டி, மொழியின் கூறுகளையும் அமைப்புகளையும் விளக்கும் முறையை மாற்றிலக்கண மொழியியலார் கையாளவில்லை. மொழிபேசுபவர்களின் மொழி குறித்த உணர்வே (intuition) மாற்றிலக்கணத்தை வடிவமைப்பதற்கான தரவாக அமைகிறது. மொழியைக் குறித்த உணர்வையும் அறிவையும் மொழி பேசுபவர்கள் பெற்றுள்ளனர். இதை வைத்துக் கொண்டு இலக்கணத் தொடர்களையும், இலக்கணத்தில் வழுவான தொடர்களையும் அவர்கள் இனம் கண்டுகொள்கின்றனர். எடுத்துக்காட்டாக, 'ராமன் வந்தான்' என்ற தொடரை இலக்கணத் தொடர் எனவும், 'ராமன் வந்தாள்' என்ற தொடரை இலக்கண வழுத் தொடர் எனவும் தங்கள் மொழி உணர்வின் அடிப்படையில் இனங்கண்டு கொள்கின்றனர். மொழி உணர்வு, மொழி அறிவு

என்பது மொழிக் கூறுகளோடு தொடர்புடைய விதிகளைப் பற்றிய அறிவு எனவும், இலக்கண விதிகளைத் தழுவிய வகையில் தொடர்கள் உருவானால் அவை இலக்கணத் தொடர்கள் எனவும், தழுவாத வகையில் தொடர்கள் உருவானால் அவை இலக்கண வழுத் தொடர்கள் எனவும் இனங்கண்டுகொள்வர். இந்த விதிகளால் ஆன அறிவை வெளிக்கொணர்வதே படைப்பு மாற்றிலக்கணத்தின் கடன் என நிலைநாட்டப்படுகிறது. பொதுவாக, படைப்பிலக்கணம் மனிதரின் மொழியறிவுக்கு வடிவம் கொடுத்து, மொழி அறிவை (Linguistic competence) விளக்க முயல்கிறது. சூழல்களில் மொழியைப் பயன்படுத்துவது எப்படி என்பதைக் குறித்த மொழிப் பயன்பாட்டுவகை விளக்கத்தை (Performance) கொடுக்க முயல்வதில்லை. மனித மனத்தில் காணப்படும் மொழி அறிவு என்பதில் சொல் குறித்த அறிவு, இலக்கண அறிவு, பொருண்மை அறிவு, ஒலி குறித்த அறிவு என்ற வகைகள் உள்ளன என்பதையும் நிறுவுகிறது. இவ்விலக்கணம் மொழி பேசுபவர்களுக்கும், அவர்களது மொழியறிவுக்கும் முன்னுரிமை வழங்கி, இலக்கணத் தொடர்களிலிருந்து இலக்கண வழுவான தொடர்களைப் பிரித்துணர்தல், தொடர்களைப் படைத்தல், மாற்றல், தொடர்களுக்கு இலக்கண அமைப்பு விளக்கம் வழங்குதல், பொருள் விளக்கம் வழங்குதல், ஒலியமைப்பு விளக்கம் வழங்குதல், இவைகளுக்கான விதிகளைப் பயன்படுத்துதல், விதிகளைப் பயன்படுத்தும்போது கட்டுப்பாடுகளைக் கருத்திற் கொள்ளல் எனப் பல்வேறு செயல்களில் எவ்விதம் மொழி பேசுபவர்கள் ஈடுபடுகின்றனர் என்பதை இவ்விலக்கணம் விளக்க முயல்கிறது. மொழியை அடிப்படையாகக் கொண்டு பார்த்தால், எத்தகைய விதிகளையும், விதி செயல்பாட்டில் கட்டுப்பாடுகளையும் மொழி வெளிப்படுத்துகிறது என்பதைக் குறித்த விளக்கத்தை இவ்விலக்கணம் வழங்குகிறது.

தொடர்களைப் படைக்கும் வழிமுறைகளை விளக்குவதற்காக அமைப்பு மொழியியலார் சுட்டிக் காட்டிய அண்மைப் பகுபத உறுப்பு விளக்கத்தைக் கைக்கொண்டு அதைத் தொடர் படைப்பு விளக்கமாகப் படைப்பிலக்கணத்தார் மாற்றியமைத்தனர். 'அந்த அழகான பையன் இந்தப் பெண்ணிற்குப் புத்தகம் கொடுத்தான்' என்ற தொடரின் அண்மைப் பகுபத உறுப்பு விளக்கம் பின்வருமாறு அமையும்.

அந்த அழகான பையன் இந்தப் பெண்ணிற்குப் புத்தகம் கொடுத்தான்

இந்தத் தொடரமைப்பின் கிளை வடிவத்தில் அல்லது படிநிலை வடிவத்தில் ஒரு வேரும், பல கிளைகளும், கிளைக் கணுக்களும் காணப்படுகின்றன. இதில் காணப்படும் கிளைக் கணுக்களுக்கு உரிய இலக்கணப் பெயர்களை வழங்குவதன் மூலம் இலக்கணப் பெயர் பெற்ற கிளை வடிவம் கிடைக்கும். அத்தகைய வடிவம் பின்வருமாறு.

அந்த அழகான பையன் இந்தப் பெண்ணிற்குப் புத்தகம்-ஐ கொடுத்தான்
(சுட்டு)(பெயரடை) (பெயர்) (சுட்டு பெயர் வேற். பெயர்-வேற். வினை




இந்த வாக்கியத்தைப் படைப்பதற்கான வகையில் வெளியிடத் தொடர் படைப்பு விதிகள் பயன்படுத்தப்படுகின்றன. அத்தகைய படைப்பு விதிகள் பின்வருமாறு.

1. வாக்கியம்→பெயர்த்தொடர்+வினைத்தொடர்
2. வினைத் → வேற்றுமைத்தொடர்+வினைத்தொடர்
3. வினைத்→ வினை+(துணைவினை)+
   இயைபுத் தொடர்
4. வேற்றுமைத்→ பெயர்த்தொடர்+வேற்றுமைத் தொடர்
5. பெயர்த்தொடர்→ (சுட்டு)+(பெயரடை)+பெயர்
6. இயைபு → காலம்+எண் பால் இடம்
   பெயர்→பையன், பெண்
   வினை→ கொடு,வில்
   வேற்→க்கு, ஐ
   சுட்டு→ அந்த, இந்த
   பெயரடை→அழகான. . .
   காலம்→ த்த்,ந்த். . .
   எண் பால்→ ஆன், ஆள். .

இந்த விதிகளை முறையாக அமல்படுத்தும் போது பின்வரும் தொடராக்கம் உருவாகும்.




தொடர்படைப்பு விதிகள், விரிப்பு விதிகள் எனவும் அவைகளில் இரண்டு வகைகள் உள்ளன எனவும் விளக்கப்படும். ஒரு வகை விதிகள், இலக்கணக் குறியீடுகளை வேறு இலக்கணக் குறியீடுகளாக விரிக்கும் தன்மை கொண்டவை. மற்றொரு வகை விதிகள் இலக்கணக் குறியீடுகளைச் சொல்லாகவோ, உருபனாகவோ விரிக்கும் விதிகள். 'வாக்கியம்→ பெயர்த்தொடர்+வினைத்தொடர் என்ற விதி, முதல் வகை விதி. பெயர்→ பையன், பெண். . . என்ற விதி இரண்டாம் வகை விதி. இந்த முதல் வகை விதிகளின் செயல்பாட்டால் இலக்கணக் கூறுகளைக் கொண்ட தொடரமைப்பு உருவாகிறது. இரண்டாம் வகை விதிகளின் செயல்பாட்டால் சொற்கள் நிரம்பிய இலக்கணத் தொடரமைப்பு பெறப்படுகிறது. இத்தகைய தொடரை முதல் நிலை இலக்கணத் தொடர் எனலாம். இதன்மேல் சில கட்டாயமான மாற்று விதிகள் செயல்பட்டு, 'கரு வாக்கியம்' உருவாகும் எனவும், கட்டாயமற்ற மாற்று விதிகள் செயல்பட்டுப்பிற இலக்கணத் தொடர்கள் உருவாகும் எனவும் விளக்கப்பட்டது.

தொடரமைப்பைப் படைக்கும் விதிகள், குறிப்பாகக் குறியீடு விரிக்கும் விதிகள், சொல் விரிப்பு விதிகள் போன்றவற்றின் உதவியால் இலக்கணத் தொடர்களும் இலக்கணமற்ற தொடர்களும் உருவாகும் நிலை ஏற்படும் என உணர்ந்ததால் தொடர் படைப்பு விதிகளைக் கட்டுப்படுத்த வேண்டும் எனக் கருதி அவைகளோடு அவை செயல்பட வேண்டிய சூழல்களையும் குறிக்க வேண்டும் எனக் கருதிச் சூழ்நிலை குறிப்பிடும் தொடர் படைப்பு விதிகள் வெளியிடப்பட்டன. வினையைச் செயப்படுபொருள் குன்றிய, குன்றா வினை எனப் பிரித்துச் செயப்படுபொருள் குன்றா வினை என்பது ஐ-வேற்றுமைத் தொடரின் பின் வரும் எனவும், செயப்படு பொருள் குன்றிய வினை பிற வேற்றுமைத் தொடரின் பின்வரும் எனவும் குறிக்கும் வகையில் அமையும் தொடர் விரிப்பு விதியைச் சூழ்நிலை குறிப்பிடு விதிகள் எனலாம்.

வினை → செயப்படுபொருள்குன்றிய வினை / வேற்றுமைத்தொடர்

செயப்படுபொருள்குன்றா வினை / ஐ-வேற்றுமைத்தொடர்

செ.ப.பொ.குன்றாவினை→ படி, கொடு, விடு. . .

செ.ப.பொ.குன்றியவினை→ வா, நட, இரு . . .

ஆக, தொடரமைப்பு படைப்பு விதிகளான குறியீடு விரிப்பு விதிகள், சொல் விரிப்பு விதிகள் ஆகியனவற்றில் சூழ்நிலை குறிப்பிடும் விதிகளும், சூழ்நிலை குறிப்பிடா விதிகளும் உள்ளன எனவும், இவைகளின் செயல்பாட்டால் மட்டுமே இலக்கணத் தொடர்களை உருவாக்க இயலும் எனவும் விளக்கப்பட்டன. மேலும் தொடர் படைப்பு விதிகள் இயல்பாகவே வரிசைப்பாட்டைப்பெற்றவை எனவும் கருதப்பட்டன.

தொடர்படைப்பு விதிகளால் படைக்கப்பட்ட இலக்கணத் தொடர்களில் மாற்று விதிகள் செயல்பட்டு மாறிய இலக்கணத் தொடர்கள் உருவாகும் எனவும், மாற்று விதிகளில் கட்டாய வகை மாற்று விதி, கட்டாய மற்ற வகை மாற்று விதி என இருவகைகளும், இரண்டாம் வகையில் ஒரு தொடர் மாற்றுவிதிகள், பல் தொடர் மாற்று விதிகள் என்ற வகைகளும் உள்ளன எனக் கருதப்பட்டது.

பல தொடர் மாற்று விதிகளில் தொடர் இணைக்கும் மாற்று விதி, தொடர் புகுத்தும் மாற்றுவிதி என்ற வகைகளும் உள்ளன என விளக்கப்பட்டது. மாற்று விதிகள் பின்வரும் அமைப்பைக் கொண்டவை: X+Y+Z => X+Y+A+Z 'ராமன் படித்தான்' என்ற உடன்பாட்டுத் தொடரை எதிர்மறைத் தொடராக்குவதற்கான மாற்று விதி பின்வருமாறு:

பெயர் - வினை+காலம்+இயைபு= பெயர்-வினை+அ+இல்லை

1 2 3 4 1 2

(ராமன் படி + த்த் + ஆன்) (ராமன் படி+அ+இல்லை)

மாற்று விதிகள் தொடரில் பொருள் மாற்றத்தைத் தரலாம் - கட்டாயவகை மாற்றுவிதிகள், படைத்த இலக்கணத் தொடரில் செயல்பட்டுக் கருவாக்கியங்களை உருவாக்கும். கட்டாயமற்ற வகை மாற்று விதிகள் பிற தொடர்களைப் பெற வழிவகுக்கின்றன. அதில் ஒரு தொடர் மாற்று விதிகள், உடன்பாட்டு வாக்கியங்களிலிருந்து எதிர்மறை, வினா, வியங்கோள், பணிப்பு, செயப்பாட்டு வாக்கியம் ஆகியனவற்றைப் பெற வழிவகுக்கும். பல்தொடர் இணைப்பு மாற்று விதிகளில் அடங்குகின்ற கூட்டல் விதி கூட்டு வாக்கியத்தையும், புகுத்தல் மாற்று விதி கலவை வாக்கியங்களையும் பெற வழிவகுக்கின்றன. மாற்று விதிகள் செயல்படும்போது உருபன்கள், சொற்கள் போன்றவை தோன்றல், திரிதல், கெடுதல், இடம்மாறல் போன்ற செயல்களுக்கு உள்ளாகலாம். இந்த மாற்று விதிகள் செயல்படுவதால் விளையும் வாக்கியங்களுக்கான எடுத்துக்காட்டுகள் சில பின்வருமாறு:

முருகன் நடந்தான் => முருகன் நடக்க வில்லை

முருகன் நடந்தானா

முருகா நட

முருகன் புத்தகத்தைப் படித்தான் => புத்தகம் முருகனால் படிக்கப்பட்டது

=> புத்தகத்தைப் படித்த முருகன்

முருகன் படித்தான் +
முருகன் தேறினான் => முருகன் படித்துத் தேறினான்

முருகன் படித்தான் => முருகன் படிக்க விரும்பினான்
முருகன் விரும்பினான்

மாற்றிலக்கணத்தில் ஒலியியல் விதிகளும் வடிவமைக்கப் பட்டன. இவ்விதிகள் கருவாக்கியங்கள், மாறிய வாக்கியங்கள் (இலக்கணத் தொடர்கள்) என்பவைகளில் செயல்பட்டு உரிய ஒலியமைப்பைத் தொடர்களுக்கு வழங்குகின்ற விதிகள். இவை தொடரில் தோன்றும் சொற்களின், உருபன்களின் இடையே ஏற்படும் உருபொலியனியல் மாற்றங்களை ஏற்படச் செய்து

இலக்கணத் தொடர்களை ஒலிவடிவத் தொடர்களாக உருவாக்க வழி வகுக்கின்றன. ஒலிகள் தோன்றல், திரிதல், கெடுதல், இடம்மாறல் போன்ற செயல்களுக்கு உள்ளாகலாம். இவைகளை ஒலியியல் விதிகள் குறிப்பிடுகின்றன. 'முருகன்+பார்+அ+இல்லை' என்ற எதிர்மறை வாக்கியத்திற்கு 'முருகன்+பார்+க்கவில்லை என்ற ஒலி வடிவத்தை ஒலியியல் விதிகள் வழங்குகின்றன.

ஆக, தொடர்களுக்கு 4 வகை வடிவங்கள் உள்ளன எனவும், அவை 4 வகையான விதிகளால் பெறப்படுகின்றன எனவும், இந்தத் தொடரிலக்கணத்தின் உருவில் 3 வகையான தளங்கள் (தொடர் படைப்புத்தளம், தொடர் மாற்றுத் தளம், ஒலியமைப்பு வழங்கும் தளம்) உள்ளன எனவும் விளக்கப்படுகிறது. தொடரின் வடிவங்களும் அவைகளோடு தொடர்புடைய விதிகளும் பின்வருமாறு:

| | | |
|---|---|---|
| முதல்நிலை இலக்கண வாக்கியம் | ... | தொடர் படைப்புவிதி(1)+<br>சொல்விரிப்புவிதி(2) |
| கருவாக்கியம் | ... | தொடர் படைப்பு விதி(1)+<br>சொல்விரிப்புவிதி(2)+<br>கட்டாயவகை மாற்றுவிதி(3) |
| மாறிய வாக்கியம் | ... | கட்டாயமற்ற மாற்றுவிதி(4)+<br>கட்டாயவகை மாற்றுவிதி |
| ஒலிவடிவ வாக்கியம் | ... | மேற்கண்ட விதிகள்(4)+<br>ஒலியியல் விதி |

தொடரின் இலக்கண அமைப்பைப் படைத்து, மாற்றி, ஒலிவடிவம் வழங்குவதை மொழி பேசுபவர்கள் எவ்வாறு நிகழ்த்துகிறார்கள் என்பதை வெளிப்படையாக்கும் தன்மையில் இந்த இலக்கணம் அமைவதால் இதுவும் அறிவியல் நெறிமுறையைத் தழுவிய மொழிவிளக்கம் எனலாம்.

## தொடரமைப்பு விதிகள்

தொடர்கள் சொற்களின் தொடர்ச்சி நிலையில் உருவாகின்றன என்றாலும் அவைகளில் சொற்றொடர்களும் இலக்கண அமைப்பும் உள்ளன என முன்பே நிறுவப்பட்டது. மரபு இலக்கணத்தார் தொடரின் இலக்கணக் கூறுகளாக எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் எனப் பிரித்தது சொற்றொடர்களின் செயற்பாட்டு அடிப்படையில்தான் எனக் கொள்ளலாம். உலகியல் நிகழ்வுகளைக் குறிப்பதற்காகத் தொடர் உருவாக்கப்படுகிறது எனக்

கருதினால் அந்த நிகழ்வுகளில் பங்கெடுக்கும் நபர்கள், செயல், காலம், இடம், செயலின் சிறப்பு, நபர்களின் சிறப்பு என்பகைளைக் காட்டவே எழுவாய், பயனிலை, செயப்படுபொருள், காலம், இடம் போன்ற இலக்கணச் சொற்றொடர்கள் தொடர்களில் தோன்றுகின்றன எனக் கூறலாம். தொடரின் பண்புகளை மிக நுணுக்கமாக ஆராய்ந்ததன் விளைவாக, பல புதிய செய்திகள் புலப்பட்டன. தொடரின் பண்புகளை விளக்கும் துறை 'தொடரியல்' எனப்படும். இத்துறையில் படிப்படியாக வளர்ந்த பல சிந்தனைகளின் வாயிலாக, குறிப்பாகச் சாமஸ்கி என்ற அறிஞர் வகுத்த கொள்கைகளின் அடிப்படையில் விளக்கப்பட்ட தொடரின் பண்புகள் இங்கு விளக்கப்படுகின்றன. குறிப்பாக, தொடர்களின் படைப்பும், மாற்றமடைதலும் எவ்வாறு விதிகளின் வாயிலாக நிகழ்கின்றன என்பது இங்கு விளக்கப்படுகிறது. இத்தகைய விளக்கத்தை வழங்கும் இலக்கணம் 'விதி சார்ந்த படைப்பு மாற்று இலக்கணம்' என அழைக்கப்படுகிறது.

தொடர்களில் சொற்றொடர்களும், சொற்றொடர்களில் சொற்களும் தொடர்ச்சியாகத் தோன்றுகின்றன. இது தொடர்களின் பொதுவான அமைப்பு என்றாலும், தொடர்களில் இலக்கண வடிவம், பொருள், ஒலிவடிவம் என 3 வடிவங்கள் உள்ளடங்குகின்றன. தொடரின் இலக்கண வடிவத்தில் புதைநிலை வடிவம், புறநிலை வடிவம் என இரு இலக்கண வடிவங்கள் உள்ளடங்குகின்றன. தொடரின் புதைநிலை வடிவம் தொடரின் இலக்கண வடிவத்தை உருவாக்கும் திறன் கொண்ட உருவாக்க விதிகவால் உருவாக்கப்படுகின்றது எனவும், இவ்விதிகள் சில பண்புகளைக் கொண்டவை எனவும் 'படைப்பு மாற்று இலக்கணம்', விளக்குகிறது.

தொடரின் இலக்கண வடிவத்தைப் படைக்கும் விதிகள் X→Y என்ற சூழல் குறிப்பிடா விதிகளாவோ, X→ Y/A-B என்ற சூழல் குறிப்பிடும் விதிகளாகவோ, X→ W (சொல்) என்ற சொல் விரிப்பு விதிகளாகவோ X→ சொல் இலக்கண அணு[1]+அணு[2]+அணு[3] என்ற சொல்லிலக்கண நுண்கூறு விரிப்பு விதிகளாகவோ இருக்கலாம். இவைகளின் செயல்பாட்டால் 'வாக்கியம்' என்ற இலக்கணக் கூறு, படிப்படியாக விரிக்கப்பட்டுப் பெயர்த்தொடர், வினைத்தொடர், வேற்றுமைத் தொடர் போன்ற சொற்றொடர்களைக் கொண்ட தொடரின் இலக்கண வடிவம் காட்டும் கிளையமைப்பு உருவாகும். தமிழில் காணப்படும் தொடர் உருவாக்க விதிகள் பின்வருமாறு: இவை இங்கு நுணுக்கமாக விளக்கப்படவில்லை.

வாக்கியம் → பெயர்த்தொடர்+வினைத்தொடர்+துணைவினைத்தொடர்

வினைத்தொடர்→ வேற்றுமைத்தொடர்+வினைஎச்சம்+வினை

வேற்றுமைத்தொடர் → பெயர்த்தொடர்+வேற்றுமைஉருபு

பெயர்த்தொடர்→ வேற்றுமைத்தொடர்+பெயரெச்சம்+பெயர்

பெயரெச்சம்→வினை+காலம்+பெயரெச்சஉருபு

வினையெச்சம்→வினை+வினைஎச்சஉருபு

துணைவினைத்தொடர் →துணைவினை+கால உருபு+இயைபு உருபு

இதன்படி 'அவன் அவளைப் பார்த்தான்' என்ற தொடரின் கிளையமைப்பு பின்வருமாறு உருவாகும்.




தொடரின் இலக்கண அமைப்பை உருவாக்கும் விதிகள் அகநிலை வரிசைப்பாட்டைக் கொண்டவை. அதாவது ஒரு கூறு விரிப்பு விதியின் செயல்பாட்டால் உருவாகும் இலக்கணக் கூறின் மேல் அடுத்த விதி செயல்படுகின்ற இயல்பான வரிசைப்பாட்டை இவை காட்டுகின்றன (வாக்கியம்→ பெயர்த்தொடர் +... என்ற விதி விரிக்கின்ற 'பெயர்த்தொடர்' என்ற கூறை விரிக்கும் விதி பெயர்த்தொடர் பெயர் முதல் விதியின் பின்னர் வருகிறது). இவ்விதிகள் வாக்கியத்தில் பெயர்த்தொடர், வினைத்தொடர், துணை வினைத்தொடர் ஆகியன உள்ளன எனவும், அவைகளின் உள்ளே பிற தொடர்கள் வருவதையும் காட்டுகின்றன. இதன் மூலம் ஒரு தொடரின் உள்ளே மற்றொரு தொடர் புகுந்து நிற்பதைக் காட்டுகின்றன எனவும் இதனால் தொடரின் படைப்பாற்றல் திறன் (Creativity) வெளிப்படுகிறது எனவும் கூறலாம். சொற்றொடர்களுக்கான சில எடுத்துக்காட்டுகள் பின்வருமாறு:

வினைத்தொடர் = என்னை +பார்க்க+வா

வேற்றுமைத்தொடர் = அந்த அழகான படம் + ஐ

பெயர்த்தொடர் = பாதியில் + விட்ட + வேலை

பெயரெச்சம் = படி+த்த்+அ

வினைஎச்சம் = படி+த்த்+உ

துணைவினைத்தொடர் = கொள்+ண்ட்+ஆன்

தொடர் உருவாக்க விதிகளால் ஆன தளம் படைப்பிலக்கணத்தில் உண்டு. அதைப்போல் தொடர் உருவாகத் தேவையான சொற்களை எல்லாம் பட்டியலிடப்பட்ட ஒரு தளமும் படைப்பிலக்கணத்தில் உண்டு. இதில் சொற்களின் பண்புகள் விளக்கப்பட்டு நிலைநிறுத்தப்படும். குறிப்பாக, சொற்களின் இலக்கணப் பண்பு, பொருள், ஒலிவடிவம், சொற்கள் பிற இலக்கணக் கூறுகளோடு இணைந்து வரும் பண்பு (இதைச் சொற்களின் பிற இலக்கணக்கூறு தேர்வு எனவும் கூறுவர்) ஆகியன குறிப்பிடப்படும். 'பையன்' என்ற சொல்லின் இலக்கணப் பண்பாக '+பெயர்+மானிடர்' போன்ற இலக்கண நுண்கூறுகளும், இலக்கணத் தேர்வுப் பண்பாக எண் பெயரடை-(ஒரு பையன்), குணப்பெயரடை- (அழகான பையன்) போன்றவைகளும், ஒலிவடிவமாக 'p+a+y+y+a+n' என்ற ஒலிகளும் அவைகளின் நுண்ணிய ஒலிக் கூறுகளும் குறிப்பிடப்படும்.

தொடரின் இலக்கண அமைப்பு உருவாக்கும் விதிகளின் செயல்பாட்டினால் விரித்துப்பெறப்படும் இலக்கணக் கூறான சொற்கூறுகள் (பெயர், வினை, வேற்றுமை உருபு) போன்றவற்றில் தகுந்த சொற்களையும் உருபுகளையும் சொல் தளத்திலிருந்து தேர்ந்தெடுத்துப் புகுத்துவதன் வாயிலாக, சொல்புகுந்த இலக்கணத் தொடர்கள் உருவாகின்றன. இத்தொடரமைப்பை, இலக்கணப் 'புதைநிலைத் தொடர்' (Deep Structure) எனலாம். சொல்லைப் புகுத்துவதற்கு உதவும் விதியைச் 'சொல் புகுத்தும்விதி' எனலாம். சொல்புகுத்து விதிகள் சில பண்புகளைக் கொண்டவை. இவை அகராதியை உற்று நோக்கி ஓர் இலக்கணக் குறியீட்டுக்கு உகந்த சொற்களை பொருத்திப்பார்த்து, தேர்ந்தெடுத்து இலக்கணக் கிளையமைப்பில் உள்ள இலக்கணக் குறியீடுகளும் நுண் கூறுகளும் நிற்கும் இடத்தில் புகுத்தும்



இவ்வாறு உருவாகும் இலக்கணப் புதைநிலைத் தொடர்களுக்குச் சில பண்புகள் உள்ளன. இவை தொடரின் இலக்கண அமைப்பைக் கிளையமைப்பு வடிவில் காட்டுகின்றன. இந்தக் கிளையமைப்பைக்கொண்டு, தொடர்களில் பங்கெடுக்கும் சொற்றொடர்களின் இலக்கண உறவுகளான எழுவாய், செயப்படு பொருள் முதலியனவற்றை உய்த்துணரலாம். கிளையமைப்பில் 'வாக்கியம்' என்ற குறியீட்டின் கீழ் நேரடியாக வரும் பெயர்த்தொடரை எழுவாய் எனவும், 'வினைத்தொடர்' என்ற குறியீட்டின் கீழ் நேரடியாக வரும் பெயர்த்தொடரைச் செயப்படு பொருள் எனவும் கணிக்கலாம். கிளையமைப்பில் பெயர்த்தொடரின் நிலையை வைத்து இலக்கண உறவைக் கண்டுபிடிப்பது ஆங்கிலம் போன்ற 'வரிசை மாறா அமைப்பை' (Configurational) கொண்ட மொழிகளுக்குப் பொருந்தும். தமிழ் போன்ற வரிசைமாறும் அமைப்பைக் கொண்ட (Non configurational) மொழிகளில் கிளையமைப்பு முக்கியத்துவம் பெறாமல் உருபுகள் முக்கியத்துவம் பெறுவதால் செயப்படுபொருளைப் பெயர்த்தொடர் ஏற்று வரும் 'ஐ' வேற்றுமை உருபால் உணரலாம். எழுவாயை எந்த வேற்றுமை உருபையும் ஏற்று வராத பெயர்த்தொடர் எனத் தற்காலிகமாகக் கூறலாம்.




புதை நிலைத் தொடர்கள், தொடர்களின் பொருளைப் பெறுவதற்கான எல்லாச் செய்திகளையும் உள்ளடக்கியவை எனக் கருதப்படுகின்றன. மேலும் இவை மாற்றுவிதிகளின் செயல் பாட்டுக்கு ஏற்றவையாகவும், ஒரு சில வகைகளில் பிரித்து இவைகளை மாற்று விதியின் செயல்பாட்டுக்கு உட்படுத்தலாம். புதைநிலைத் தொடர்கள் மாற்று விதிகளின் செயல்பாட்டுக்கு உள்ளாகித் தொடரின் 'புறநிலை இலக்கணத்தொடர்' (Surface ) உருவாகும். ஆகவே இவை இலக்கணத்தின் 'மாற்றுத்தளத்திற்குச் செல்லும் தன்மையில் உள்ளவை.

இலக்கணத்தின் மாற்றுத்தளம் மாற்று விதிகளைக் கொண்டவை. மாற்று விதிகளுக்கெனச் சில பண்புகள் உள்ளன.

இவை புதைநிலை இலக்கணத் தொடரைப் புறநிலை இலக்கணத் தொடராக மாற்றுகின்றன. இவை வடிவமாற்றத்தைத் தொடர்களில் தருகின்றனவேயன்றிப் பொருளில் எந்த மாற்றத்தையும் தருவதில்லை. காரணம், புதைநிலை இலக்கணத் தொடர்கள் பொருள் பெறுவதற்கான எல்லாப் பண்புகளையும் பெற்றிருக்கும். மாற்று விதிகள் x+y+z=> x+a+z என்ற வடிவமைப்பைக் கொண்டவை. இவை புதைநிலைத்தொடரில் தோன்றும் சொற்கள், உருபன்கள் போன்றவற்றைத் திரிக்கவும், அழிக்கவும், புதிய கூறுகளைத் தோற்றுவிக்கவும், கூறுகளை இடம்மாற்றவும், தேவையான செயற்பாடுகளை நிகழ்த்துகின்ற தன்மையைப் பெற்றவை. இவைகளில் பல நுண்ணிய வகைகளை ஆய்வுகள் வழியாகக் கண்டு கொண்டுள்ளனர்.

மாற்று விதிகளின் செயல்பாட்டிற்கு நிபந்தனைகளும் தடைகளும் உள்ளன. எடுத்துக்காட்டாக, பெயர்த்தொடர் நீக்கல் விதி, பெயர்த் தொடருக்குப் பதிலாகப் பெயர்ப் பதிலியையோ, பெயர்ப் பிரதிபலிப்புப் பதிலியையோ இடும் விதி ஆகியவை செயல்படப் பெயரும் பதிலியும் ஒரே பொருளைச் சுட்டுவனவாகவும், ஆகவே ஒரே சுட்டல் குறியீட்டைப் பெற்றதாகவும் இருக்கவேண்டும்.

1. ராமன், வந்தான்+ராமன், போனான் => ராமன் வந்து போனான்
2. (ராமன், வருவதாக) ராமன் கூறினான் => (தான் வருவதாக) ராமன் கூறினான்
3. (செல்வி அருணைத் திட்டினாலும்) அருண், சிரித்துக் கொண்டிருப்பான் => (செல்வி அருணைத் திட்டினாலும்) அவன் சிரித்துக்கொண்டிருப்பான்.

மாற்றுவிதியில் ஒரு வகையாக, பெயர்த்தொடர் நகர்வு என்பதைக் கருதலாம். இதில் புகுதொடரின் எழுவாய் பெயர்த்தொடர், நிலைத்தொடரின் எழுவாய் நிலைக்கும், செயல்படுபொருள் நிலைக்கும் நகர்தல் என்ற இரண்டு வகைகள் உள்ளன. பெயர்த் தொடர் நகர்வு சில காரணங்களுக்காக நிகழ்கிறது. 1. புகு தொடரின் எழுவாய் பெயர்த்தொடர் வேற்றுமை பெற இயலாத நிலையில் இருக்கலாம். இதற்குப் புகு தொடரில் உள்ள செய எனும் வாய்பாட்டு வடிவப் பயனிலை வினை காரணமாகிறது. ஏனென்றால் செய எனும் வாய்பாட்டு வடிவப் பயனிலை வினைக்கு வேற்றுமை வழங்கும் பண்பும் தகுதியும் இல்லை. ஆகவே செய எனும் வாய்பாட்டு வினை எச்சத் தொடரில் (புகுதொடர்) எழுவாயாக நிற்கும் பெயர்த்தொடர் வேற்றுமை பெறுவதற்காக நிலைத்தொடரின் எழுவாய் நிலைக்கோ செயப்படு பொருள் நிலைக்கோ நகரலாம். ஆங்கிலத்தில் இத்தகைய நிலையைக் காணலாம்.

it seems (that John is a genius) =>

* John seems (that is a genius)

(it) seem (John to be a genius) => (எச்சப்புகு தொடர்

John seems (— to be a genius) எழுவாய் நிலைத் தொடர்

John thinks (that she is good) => எழுவாய் நிலைக்கு நகர்தல்)

* John thinks her that — is good

John thinks (she to be good) => எச்சப்புகு தொடர்

John thinks her (— to good) எழுவாய் நிலைத்தொடர்

எழுவாய் நிலைக்கு நகர்தல்)

தொடரில் நிற்கும் கூறுகளில் சில நகர்ந்து வேறு இடங்களுக்குச் செல்கின்றன. நகர்வில் சில கட்டுப்பாடுகள் உள்ளன. எந்தத் தொடர்களில் நிற்கும் கூறுகள் நகர இயலும் அல்லது நகர இயலாது என்பதை நிலைநாட்டுகின்ற கட்டுப்பாடுகள் உள்ளன. இவைகளை Constraints என்பர். இவை ஆங்கிலத் தொடர்களில் காணப்படுகின்றன.

a. கலவைப் பெயர்த்தொடர்களில் உள்ள வினாக்கூறுகள் நகர இயலாது

You believe (the story (that Mary sacked wh) =>

*Whom do you believe (the story that Mary sacked-) . . .நகர்வு இல்லை

You believe (that Mary sacked wh)

Whom do you believe (that Mary sacked-). . .

வினாக்கூறு பெயர்த்தொடரின் உள் இருப்பதால் நகர்வு நிகழ்கிறது

b. ஒரு வாக்கியத்தில் எழுவாயாகச் செயல்படும் மற்றொரு வாக்கியத்தின் அங்கமாக நிற்கும் வினாக் கூறு நகர முடியாது

(That Mary sacked wh) is unbelievable =>

* (Who that Mary sacked -) is unbelievable

c. கூட்டுத் தொடரமைப்பில் அங்கமாக நிற்கும் வினாத்தொடர் நகர முடியாது.

Mary (chewed the gum and blew wh) =>

* What did Mary chew the gum and blew

d. வினாக்கூறு ஒன்று முன்பே நகர்ந்திருந்த நிலையிலுள்ள தொடர்களிலிருந்து மற்றொரு வினாக்கூறு நகர முடியாது.

Maggie wonder (who sacked wh) =>

Who did Mary wonder (who sacked-)

மாற்று விதிகளில் நிகழ்வதற்கான சில சாதகச் சூழல்கள் அமைய வேண்டும். இல்லை என்றால் மாற்று விதியின் செயல்பாடு தடைப்படும். தொடரின் சில கூறுகள் பிற கூறுகளின் நகர்வைக் கட்டுப்படுத்துகின்றன. இவையில்லாத சூழல், நகர்வுக்கு ஏதுவாக அமையும். கூறுகள் நகரும்போது தாம் முன்னர் நின்ற இடத்தை (பழைய இடம்) விட்டுப் புதிய இடங்களுக்குச் செல்கின்றன. 1. பழைய இடம், புது இடத்தின் எல்லைக்கு உட்பட்டு வந்தால் நகர்வு நிகழும். இல்லையேல் நகர்வு நிகழாது. இதை 'எல்லைக்குள் வரல்' என்ற தடைச் சூழல் எனலாம்.

You accept (the argument (that the committee showed promise wh)

Who do you accept (the argument (that the committee should promise-)

'wh' கூறு நிற்பது ஒரு பெயர்த்தொடரின் கீழே. அது நகர்ந்து செல்லவேண்டியது இடம் நிலை வாக்கியத்தின் முன் புறத்துக்கு. இந்த இடம், அக்கூறின் எல்லைக்குள் வரவில்லை. ஆகவே நகர்வு நிகழாது.

முற்று வாக்கிய வடிவப் புகு வாக்கியத்தின் (காலம் காட்டும் வினை கொண்ட புகுவாக்கியம்) கீழ்வரும் எழுவாய் அந்த முற்றுவாக்கியத்தை உள்ளடக்கும் நிலை வாக்கிய எழுவாய் நிலைக்கு நகரமுடியாது. ஆனால் காலம் காட்டாத எச்சவடிவ வினையைக் கொண்ட புகுவாக்கியப் பெயர்த் தொடர், நிலைவாக்கிய எழுவாய் நிலைக்கு நகரமுடியும்.

It is believed that John is a genius =>

* John is believed that he is a genius

It is believed John to be a genius =>

John is believed to be a genius

குறிப்பான எழுவாயைக் கொண்ட புகுவாக்கியச் செயப்படுபொருள், நிலைவாக்கிய எழுவாய் நிலைக்கு நகர முடியாது. இதை Specified Subject condition என்பர்.

(it) seems John admires Mary =>

*. Mary seems (John admires -)

மாற்று விதிகளை ஒரு தொடரின் எல்லைக்குள் செயல் படுவன, தொடரின் எல்லை தாண்டிச் செயல்படுவன என வகைப்படுத்தலாம். செயப்பாட்டு வினை வாக்கிய மாற்று விதி ஒரு தொடரின் எல்லைக்குட்பட்டுச் செயல்படும் விதி. வினாத் தொடர் நகர்வு விதி எல்லையைத் தாண்டி வினாத் தொடரை நகர்த்தும் விதியாகும். மாற்று விதிகள் வரிசைப்படுத்தப்பட்டவை; செயற்கையாக வரிசைப் படுத்தப்பட்டவை. இந்த வரிசைப்பாட்டில் ஒரு விதியின் செயல்பாடு மற்றொரு விதியின் செயல்பாட்டுக்கு ஏற்ற சாதகமான அமைப்பை வழங்கும் வகையில் விதிகள் வரிசைப்படுத்தப்பட்டால், அதை 'ஊட்டும் வரிசைப்பாடு' (feeding order) எனவும், அவ்வாறு இல்லாத வரிசைப் பாட்டைத் 'தடுக்கும் வரிசைப்பாடு' (bleeding order) எனவும் கருதலாம். ஊட்டும் வரிசைப்பாட்டில் அடுக்கப்படும் மாற்றுவிதிகளின் தொகுதியை 'மாற்று விதி பேட்டரி' என்பர். மாற்று விதிகள் சுழல்முறையிலும் செயல்பட்டுப் பல கடினமான கலவைத் தொடர்களை உருவாக்குகின்றன.

புதைநிலை இலக்கணத் தொடர்களுக்குப் பொருள் வழங்குவதன் மூலம் தொடரின் பொருள் பெறப்படுகிறது. இலக்கணத்தின் பொருண்மையியல் தளத்தில் உள்ள பொருள் இணைப்பு விதிகளால் புதைநிலைத் தொடருக்குப் பொருள் வழங்கப்படுகிறது. தொடரில் தோன்றும் சொற்களின் பொருளை (அவை பொருள்நுண் கூறு வடிவத்தில் தோன்றும்) தொடரின் கிளையமைப்பையும், பொருளின் இணக்கத்தையும் அடிப்படையாகக் கொண்டு தகுந்தவாறு படிப்படியாக இணைத்துத் தொடரின் பொருளைப் பொருள் இணைப்பு விதிகள் தருகின்றன. இத்தகைய தொடர் பொருளை மையமாகக் கொண்டு நிகர்நிலைப் பண்புத்தொடர் (Analytical sentence), எதிர்நிலைப் பண்புத்தொடர் (Contradictory sentence), தொகுநிலைப் பண்புத்தொடர் (Synthetic sentence) என்பவைகளை இனங்கண்டு கொள்ளலாம் எனக் கட்ஸ் என்ற அறிஞர் விளக்குவார். நிகர்நிலைப் பண்புத் தொடரில் எழுவாயும், பயனிலையும் ஒரேவகைப் பொருண்மை நுண்கூறுகளைப் பெற்றிருக்கும் எனவும், எதிர்நிலைப் பண்புத் தொடரில் எதிர்வகைப் பொருண்மைக் கூறுகளைப் பெற்றிருக்கும் எனவும் தொகுநிலைப் பண்புத் தொடரில் இந்த இருவகை நுண் கூறுகளற்ற எழுவாயும், பயனிலையும் காணப்படும்

எனவும் கூறலாம். (1. கல்யாணமாகாதவன் பிரம்மச்சாரி 2. கல்யாண மானவன் பிரம்மச்சாரி 3. அந்த அரசன் பிரம்மச்சாரி).

புறநிலை இலக்கணத் தொடர்களுக்கு ஒலி வடிவம் வழங்கப்படுகிறது. இதற்காக இத் தொடர்கள் இலக்கணத்தின் ஒலியியல் தளத்துக்குச் செல்ல வேண்டும். புறநிலைத் தொடர்களில் உள்ள சொற்கள் ஒலிவடிவத்தை நுண் கூறு வடிவத்தில் முதலிலேயே பெற்றிருக்கும். அவைகளின் மேல் ஒலி விதிகள் செயல்பட்டு தகுந்த ஒலி மாற்றங்களைச் செய்து தகுந்த ஒலியமைப்பைப் பெற்ற தொடர்களை உருவாக்கும். மாற்றுவிதிகளைப் போன்று ஒலிகளின் தோன்றல், திரிதல், கெடுதல், இடம்மாறல் என்பவைகளை ஒலிநுண் கூறுகளைக் கொண்டு நிகழ்த்துகின்றன. ஒலிவிதி செயல்படுவதற்கு முன் இருக்கும் வடிவம் புதைநிலை ஒலிவடிவம் எனவும், ஒலிவிதி செயல்பாட்டின் வாயிலாக வரும் தொடர் வடிவத்தைப் புறநிலை ஒலிவடிவம் எனவும் அழைக்கலாம். ஒலிவிதிகள் $x \rightarrow y$ /A-B என்ற வடிவத்தைக் கொண்டவை. அவை ஒலி நுண்கூறுகளின் மேலும், நுண்கூறுத் தொகுதிகளின் மேலும் (ஒலிகள்) செயல்படுகின்றன.

ராமன் புத்தகம்-ஐ பெற்-த்-ஆன் =>

ராமன் புத்தக -த்த்-ஐப் பெற்-ற்-ஆன்

இத் தொடர்களில் மகரம் கெடுதல், த்த் தோன்றல், பகரம் தோன்றல், தகரம் றகரமாதல் என்ற மாற்றங்கள் ஒலிவிதியின் செயல்பாட்டால் நிகழ்கின்றன.

விதிவகைத் தொடரிலக்கணம் பல வகையான தொடர் வகைகளையும் பல வகையான விதிகளையும் மூன்று வகையான தளங்களையும் கொண்டுள்ள வகையில் வடிவமைக்கப்படுகிறது. மனிதர்கள் தொடர்களை எவ்விதம் படைக்கிறார்கள் என்பதற்கான மாதிரியாக இந்த இலக்கணம் வடிவமைக்கப்பட்டது. தொடர்களை மனிதர்கள் படைக்கும்போது இலக்கணப் புதைநிலைத் தொடர்களைத் தொடர் உருவாக்க விதிகளாலும், சொல்புகுத்து விதிகளாலும் படைத்து, புதைநிலைத் தொடர்களுக்குப் பொருள் இணைக்கும் விதிகளால் பொருள் வழங்கி, மாற்று விதிகளால் புதைநிலைத் தொடர்களைப் புறநிலைத் தொடர்களாக மாற்றி, ஒலி விதிகளால் புறநிலைத் தொடர்களை ஒலியமைப்புத் தொடர்களாக மாற்றி, இவ்வாறு தொடரின் இலக்கண, பொருண்மை, ஒலி வடிவங்களை உருவாக்குகின்றனர் என இந்த இலக்கணம் கருதுகிறது. தொடரின் பொருண்மை, இலக்கண அமைப்பு,

ஒலியமைப்பு ஆகியனவற்றின் செம்மையற்ற தன்மைக்கும் செம்மைத் தன்மைக்கும் விதிகளின் செயல்பாடே காரணம் என வலியுறுத்தப்படுகிறது.

மொழி பேசுபவர்களிடம் தொடர் வடிவம் பற்றிய அறிவும் அதைப் படைக்கும் விதிகளைப் பற்றிய அறிவும் உள்ளது எனவும், இந்த அறிவின் வழியாகத் தொடரை இனங்காணவும், அதற்கு அமைப்பு விளக்கம் கொடுக்கவும் முயல்கிறார்கள் எனக் கொண்டு இதை விளக்கும் ஒரு 'மாடலாக' (மாதிரி Model) இலக்கணத்தை வடிவமைத்தது மறைந்து கிடப்பனவற்றை வெளிக்கொணர மேற்கொண்ட முயற்சியாகும். ஆகவே படைப்பிலக்கண விளக்கம் அறிவியல் நெறிமுறையிலானது எனலாம். மாற்றிலக்கணத்தில் தோன்றிய பல கருத்துக்கள் உளவியல் உண்மைகளா என நிறுவும் வண்ணம் உளவியலாரும் பல ஆராய்ச்சிகளை மேற்கொண்டுள்ளனர்.

## உளவியல் வழி தொடரமைப்பு விதி

மொழிபேசுபவர்களுக்கு மொழியின் தொடர்களைக் குறித்த உள்ளுணர்வும், அறிவும் உள்ளன. சில தொடர்களை மொழிபேசுபவர்களிடம் வழங்கி அவை அந்த மொழியின் செம்மையான தொடர்களா இல்லையா எனக்கேட்கும் போது, அவர்கள் கூறுகின்ற ஆம், இல்லை என்ற பதிலை வைத்துக்கொண்டு, அத்தொடர்கள் அந்த மொழியின் தொடர்களா இல்லையா என்பதை நிறுவ முடியும். ஆனால் மொழியியலாரும் உளவியலாரும் ஒரு தொடரைக் கேட்கும்போதும், படிக்கும் போதும் எவ்விதம் மொழிபேசுபவர்கள் அத்தொடரை உண்மையான, செம்மையான மொழித்தொடர்கள் என உணர்ந்து அதற்கு அமைப்பு விளக்கம் கொடுக்கிறார்கள் என்பதைக் கண்டறியும் சோதனை முறைகளை வெளியிட்டுள்ளனர். 'தொடரமைப்பு காணல்' (Parsing) என்பதை, தொடர்களை ஒரு மொழிக்கே உரியவை என உணர்ந்து, அவைகளுக்கு அமைப்பு விளக்கம் வழங்கும் செயல் எனலாம். தொடரமைப்பைக் காண்பதற்கு இலக்கண வடிவங்களையும், தொடர்களின் தோற்றத் தகுதியையும் (Probability) மொழி பேசுபவர்கள் பயன்படுத்துகிறார்கள் எனவும், தொடரமைப்பு காணல் தொடரின் பொருள் மயக்கத்தைத் (Ambiguity) தவிர்ப்பதற்கும் உதவுகிறது எனவும் கருதப்படுகிறது. மயக்கம் தரும் தொடர்களை இனங்கண்டு, ஒரு குறிப்பிட்ட சூழலில் ஒரு பொருளை அத்தொடர்களுக்கு மொழிமாந்தர் எவ்விதம் வழங்குகிறார்கள் என்பது ஓர் அடிப்படையான ஆய்வாகக் கருதப்படுகிறது.

ஒரு குறிப்பிட்ட சொல்லைக் கேட்டவுடன் அந்தச் சொல்லோடு எத்தகைய கூறுகள் (சொற்கள், தொடர்கள்) போன்றவை இணைந்து வரக்கூடும் என்ற அறிவை அடிப்படையாகக் கொண்டு, இன்னின்ன கூறுகள் தாம் ஒரு சொல்லைச் சார்ந்து வரும் என எதிர்பார்த்து, அந்த எதிர்பார்ப்பு நிகழ்கிறதா என நிச்சயிப்பதன் வாயிலாகத் தொடர்களின் அமைப்பு உணரப்படுகிறது. இதைச் சில சோதனைகள் வாயிலாக நிரூபிக்கலாம். வேற்றுமைத் தொடர்கள் பெயர்த்தொடரோடும் வினைத் தொடரோடும் சார்ந்து வரும் தன்மையிலிருப்பதால் சில தொடர்கள் பொருள் மயக்கம் தருகின்றன. "She kept the dog on the beech" என்ற தொடரில் "On the beech" என்ற வேற்றுமைத் தொடர் 'the dog' என்ற பெயரோடு இணைகிறதா அல்லது 'keep' என்ற வினையோடு இணைகிறதா என்பதனடிப் படையில் பொருள் மயக்கம் ஏற்படுவதுண்டு. வேற்றுமைத் தொடர் பெயரோடு இணைந்தால், 'கடற்கரை நாயை அவள் வைத்துக் கொண்டாள்' என்ற பொருளும், வினையோடு இணைந்தால், 'நாயை அவள் கடற்கரையில் வைத்திருந்தாள்' என்ற பொருளும் பெறப்படும். இதே போன்று 'She discussed the dog on the beach' என்ற தொடரும் மயக்கம் தருவது. 'on the beach' என்ற வேற்றுமைத் தொடர், 'the dog' என்ற பெயரோடு சார்ந்து நின்றால் 'அவள் கடற்கரை நாயைக் குறித்துப் பேசினாள்' என்ற பொருளும், 'discuss' என்ற வினையோடு இணைந்தால், "கடற்கரையில் அவள் நாயைப்பற்றிப் பேசினாள்" என்ற பொருளும் பெறப்படும். இந்த இரண்டு பொருள்களின் வேறுபாட்டை, வேறுபட்ட இலக்கணக் கிளையமைப்பு வடிவங்களின் வாயிலாக விளக்கலாம் :




இந்த இரண்டு தொடர்களையும் ஆங்கில மொழி பேசுவோர் சிலரிடம் கொடுத்து, எந்தப் பொருள் உங்களுக்கு முதலில் தோன்றுகிறது எனக் கேட்ட போது, முதல் தொடருக்கு வேற்றுமைத்தொடர் வினையோடு இணைவதால் வரும் 'வினைசார்பொருள்' 95 விழுக்காடும், வேற்றுமைத்தொடர் பெயரோடு இணைவதால் வரும் 'பெயர் சார் பொருள்' 5 விழுக்காடு மனத்தில் வந்தது எனவும், இரண்டாம் தொடருக்கு

வினைசார் பொருள் 10 விழுக்காடும், பெயர் சார் பொருள் 90 விழுக்காடும் மனத்தில் வந்தது எனவும் தரவுகளை ஆய்வு செய்ததன் வாயிலாகப் பெறப்பட்டது. இதிலிருந்து 'keep' என்ற வினை வினை சார் வேற்றுமைத் தொடர்களை ஏற்கும் பண்பையும், discuss என்ற வினை பெயர்சார் வேற்றுமைத் தொடர்களை ஏற்கும் பண்பையும் கொண்டவை எனக் கணிக்கப்பட்டன. ஆகவே keep என்ற வினை V+NP+PP என்ற அமைப்புக்குள் வரும் வினை எனவும், அதாவது அந்த வினை NP, PP என்ற தொடர்களை ஏற்கும் தன்மை கொண்ட வினை எனவும், 'discuss' என்ற வினை V+NP என்ற அமைப்புக்குள் வரும் வினை எனவும் NPஐ மட்டும் ஏற்கும் தன்மை கொண்ட வினை எனவும் கருதப்பட்டன. பிற கூறுகளைத் தேர்வு செய்கின்ற பண்பு என இதைக் கருதலாம் (Sub categorization preference). இந்தத் தேர்வுப் பண்பை மையமாகக் கொண்டு இத்தகைய வினைகளைக் கொண்ட தொடர்களின் பொருள் மயக்க நிலை முறியடிக்கப்படுகிறது எனவும், இதனால் ஒரே பொருள் தொடருக்கு வழங்கப்படுகிறது எனவும் நிலைநாட்டலாம். பொருள் மயக்கம் தரும் தொடர்களின் மயக்கத்தைத் தவிர்த்து, தொடர்களுக்கு ஒரே ஒரு பொருளை மொழிபேசுபவர்கள் வழங்குவது எவ்விதம் நிகழ்கிறது என்பதைக் காண மற்றொரு வழிமுறையை உளவியலார் வெளியிட்டனர்.

மொழி பேசுபவர்களிடம் 'திசை திருப்பும் தொடர்களை' (Garden Path Sentences) வழங்க வேண்டும். திசை திருப்பும் தொடர்கள், தற்காலிகமாக மயக்கம் தரும் தொடர்களாகவும், ஒன்று அல்லது பல பொருள்களை நாம் வழங்குவதற்கு ஏதுவான அமைப்பைக் கொண்டவையாகவும், ஆனால் நாம் எதிர்பார்க்காத பொருளே அதன் உண்மைப் பொருளாக அமையும் தன்மையைக் கொண்டவையாகவும் இருப்பன. அத்தகைய தொடர்களின் எடுத்துக்காட்டு பின் வருமாறு :

The horse raced past the barn fell

The complex houses many people

The students forgot the solution was in the back of the book

மொழி பேசுபவர்களிடம் இத்தகைய 'திசை திருப்பும் தொடர்களை'க் கொடுத்து, அவர்கள் இத் தொடர்களுக்குப் பொருள் வழங்கும் நிலையில் ஏற்படும் சிக்கலைக் காணவேண்டும். சிக்கல் இருந்தால் அவர்கள் இத் தொடர்களின் அமைப்பையும் பொருளையும் புரிய அதிக நேரம் எடுத்துக் கொள்வார்கள். தொடரில் தோன்றும் சொற்களை ஒவ்வொன்றாக மெதுவாகக் காட்டி, எந்தச் சொல்லை அவர்கள் பார்க்கும் போது அச்சொல்லின் மீது அதிக நேரம் கண் நிலையாய் நிற்கிறது

என்பதை உற்றுநோக்கி 'அதிகநேரம் பிடித்தலை'க் கண்டு கொள்ளலாம். இதன் படி முதல் எடுத்துக்காட்டில் raced என்ற சொல்லிலும், இரண்டாம் தொடரில் houses என்ற சொல்லிலும், மூன்றாம் தொடரில் Solution என்ற சொல்லிலும் கண்பார்வை அதிக நேரம் நிலையாக நிற்கும்.

கொடுக்கப்பட்ட முதல் தொடரில் raced என்ற செயப்படு பொருள் குன்றிய வினையைப் பார்த்ததும் அதற்குப் பின்னால் இடத்தைக் குறிக்கும் பெயர் வரவேண்டும் என எதிர்பார்த்து 'barn' என்ற இடப்பெயர் வந்த உடன் அவர்களது எதிர்பார்ப்பு சரி என நினைக்கையில் 'fell' என்ற வினை வருவதால் பொருள் கொடுப்பதில் சிக்கல் ஏற்படுகிறது. ஆனால் 'raced past the barn' என்பதை ஒரு பெயரெச்சத் தொடராகக் (Relative clause) கருதி அது 'horse' என்ற பெயரின் பண்பைக் குறிக்கும் தொடராக வருகிறது எனக் கொண்டால் அந்தத் தொடரின் மயக்கத்தைத் தவிர்க்க இயலும். அதாவது இந்தத் தொடரை (The horse (which raced past the barn) fell) என்ற அமைப்பைக் கொண்டதாகக் கருதவேண்டும்.

இரண்டாம் தொடரில் Complex Houses என்ற அங்கத் தொடரைப் பெயர்த் தொடர் எனக் கருத வாய்ப்பு இருப்பதால் சிக்கல் ஏற்படுகிறது. ஆனால் 'houses' என்பதை வினையாகக் கருதினால் சிக்கல் வராது. மூன்றாம் தொடரில் 'the solution' என்ற தொடரை மட்டும் பிரித்து அதை 'forgot' என்ற வினையின் செயப்படு பொருளாகக் கருதுவதால் சிக்கலும், 'the solution was in the back of the book' என்ற தொடரை 'forgot' என்ற வினையின் செயப்படுபொருளாகக் கொண்டால் சிக்கல் தீர்தலும் ஏற்படும்.

ஆக, ஒரே திசையில் சென்று சில எதிர்பார்ப்புக்களை, (குறிப்பாக, சொற்களின் பிற கூறுகளைத் தேர்வு செய்கின்ற பண்பின் அடிப்படையிலான சில எதிர்பார்ப்புக்களை) முன்னிறுத்தித் தொடர்களுக்கு அமைப்பை வழங்குவதற்கு ஏதுவாக அமைவதால், சில தொடர்கள் பொருள் பெறுதலிலும், வழங்கலிலும் சிக்கலை ஏற்படுத்துகின்றன. ஆகவே இவைகளைத் திசை திருப்பும் தொடர்கள் எனலாம். எனவே தொடர்களின் கூறுகளுக்குரிய 'பிற சொல்தேர்வுப் பண்புகள்', தொடர்களுக்கான அமைப்பை வழங்குவதிலும், பொருளை வழங்குவதிலும், மொழிபேசுவோரிடம் தாக்கத்தை ஏற்படுத்துகின்றன எனலாம். பொதுவாகச் சொற்தேர்வுப் பண்பும், அதனால் உருவாகும் எதிர்பார்ப்புக்களும் பொருள் வழங்கலில் முக்கியமானவை என நிறுவப்பட்டன.

தொடரமைப்பை வழங்குவதில் மொழிபேசுபவர்களின் அனுபவமும், தொடரமைப்புகளின் வருகை எண்ணிக்கையும், சொற்களின் வருகை அளவும் (frequency) தாக்கம் ஏற்படுத்துகின்றன. பரிச்சயமான தொடர்களுக்கும், சொற்களுக்கும் எளிதில் அமைப்பும், பொருளும் வழங்கப்படுகின்றன எனக் கருதலாம். நினைவின் பரப்பு எல்லைக் குறைபாடு, இருவகையான பொருண்மை நபர்களை ஏற்று வரும் தன்மையிலும் ஆனால் ஒரே வடிவத்தையும் கொண்ட வினைகள் (வெளு=அவன் வெளுத்தான், அவன் துணியை வெளுத்தான்) சூழ்நிலை சார்ந்த கட்டுப்பாடுகள் போன்றவைகளும் தொடர் அமைப்பாக்கம் செய்வதில் சிக்கலை ஏற்படுத்துகின்றன. உளவியல், மொழியியல் அறிஞர்களில் சிலர், தொடர்களுக்கு அமைப்பு விளக்கம் வழங்குவதில் தொடரைக் குறித்த இலக்கண அறிவு முதன் முதலிலும், பொருண்மை, சூழல் போன்றவைகளைக் குறித்த அறிவு பின்னரும் கையாளப்படுகின்றன எனக் கருதுவர். இத்தகைய அறிஞர்களை modularist என ஆங்கிலத்தில் அழைப்பர். சில அறிஞர்கள், எல்லா வகையான அறிவும் ஒருங்கிணைந்து தொடரின் அமைப்பு விளக்கம் வழங்குகையில் செயல்படுகின்றன என்பர். இவர்களை 'non modularist' என அழைப்பர்.

தொடர்களுக்கு அமைப்பு விளக்கம் கொடுத்தல் என்பது ஊகத்தின் அடிப்படையிலும் (Probability) நிகழ்கிறது எனச் சிலர் விளக்குவர். மனித மனம், பல வகையான அமைப்பு விளக்கங்களை ஒரே நேரத்தில் மனத்தில் கொண்டு வருகிறது. இந்த அமைப்பு விளக்கங்களுக்கு உரிய 'தோற்றத் தகுதி' (Probability) கணிக்கப் படுகிறது. எடுத்துக்காட்டாக, 'The horse raced past the barn fell' என்ற தொடரில் 'raced past the barn' என்பதைப் பெயரெச்சத் தொடர் எனவும், வினைத் தொடர் எனவும் கருத வாய்ப்பு இருப்பதால் இரண்டு வகைத் 'தோற்றத் தகுதி' கொண்டது எனலாம். இதில் வினைத் தொடர் என்பது அதிகத் தோற்றத் தகுதி கொண்டது எனவும், பெயரெச்சத் தொடர் (Relative clause) குறைவான தோற்றத் தகுதி கொண்டது எனவும் கருதலாம். மனித மனம் தொடரைக் கேட்ட உடன் தொடருக்கு அமைப்பு விளக்கம் கொடுக்க முனைவதால், அதிகத் தோற்றத் தகுதி கொண்ட வினைத்தொடர் விளக்கத்தைச் சரியான விளக்கம் எனக் கருதுகிறது. இதனால் பொருள் வழங்கலில் சிக்கலும் தவறும் ஏற்படுகின்றன. இந்நிலையில் சில தொடர்களுக்கு அமைப்பு விளக்கம் கொடுக்கும்போது குறைவான தோற்றத் தகுதி கொண்ட தொடர் விளக்கத்தை வழங்க வேண்டிய கட்டாயம் ஏற்படுகிறது. இது சிக்கல் ஏற்பட்ட பின்னரே உதயமாகிறது. இதனால் தான் சில

தொடர்களுக்கு அமைப்பு விளக்கம் வழங்க அதிக நேரம் பிடிக்கிறது. எனவே தொடர்களுக்கு அமைப்பு விளக்கம் வழங்குவதில் தொடர், தொடர் அங்கங்கள் ஆகியனவற்றின் தோற்றத் தகுதியின் அளவு முக்கியப் பங்கைப் பெறுகிறது எனவும் அதையும் கணக்கில் கொண்டே மொழிபேசுபவர்கள் தொடர்களுக்கு அமைப்பு விளக்கம் கொடுக்கிறார்கள் எனவும் நிறுவப்படுகிறது.

தொடர்களை மொழி பேசுபவர்கள் புரிந்து கொள்வதிலும், அவைகளுக்கு அமைப்பு விளக்கம், பொருண்மை விளக்கம் ஆகியனவற்றை வழங்குவதிலும் பல பண்புகள் தாக்கம் ஏற்படுத்துகின்றன. பிற கூறுகளைச் சொற்கள் சார்ந்து நிற்கும் பண்பு, அதன் காரணமாக மொழிபேசுபவர்கள் மனத்தில் நிகழும் எதிர்பார்ப்புகள், தொடர்களின் தோற்றத் தகுதியின் அளவு, ஆகிய் பண்புகள் கையாளப்படுகின்றன என உள மொழியியலார் நிறுவுகின்றனர். இவை சோதனை வாயிலாக நிறுவப்படுவதால், அறிவியல் நெறிமுறைகளின் அடிப்படையில் இவ்வாய்வு முடிவுகள் நிலைநாட்டப்படுகின்றன எனலாம்.

## தொடர் உறவு இலக்கணம்

சொற்றொடர்களால் தொடரும், சொற்களால் சொற்றொடர்களும், அமைப்பைப் பெறுகின்றன. தொடர்களில் காணப்படும் சொற்றொடர்களின் உறவையும், சொற்றொடர்களில் காணப்படும் சொற்களின் உறவையும் பொதுமைப்படுத்தி விளக்க 'தொடர் உறவு இலக்கணம்' முயல்கிறது. தொடர்களில் காணப்படும் கூறுகளான சொற்றொடர்களினிடையே இலக்கண உறவு, பொருண்மை உறவு, வேற்றுமை உறவு, தொடர் கட்டுறவு, நகர்வு உறவு எனப் பல வகையான உறவுகள் காணப்படுகின்றன எனவும், இவை அனைத்தும் 'ஆளுகை உறவு' என்ற பொதுப்பெயரின் கீழ் வருகின்றன எனவும், 'தொடர் உறவு இலக்கணம்' விளக்குகிறது. மேலும் சொல்லுக்கும் தொடருக்கும் இடையே பிறப்பு உறவு உள்ளது எனவும் சொல்லின் பண்புகளைக் கொண்டே தொடரின் அமைப்பை உய்த்துணர முடியும் எனவும் இவ்விலக்கணம் விளக்குகிறது.

ஒரு தொடரில் தோன்றுகின்ற சொற்றொடர்கள் காட்டுகின்ற வேறுபட்ட உறவுகளில் ஒரு கூறு தலைமை நிலைக்கூறு எனவும், பிற கூறுகள் சார்பு நிலைக் கூறுகள் எனவும் கருதப்படுகின்றன. ஆகவே இவ்வுறவுகள் அனைத்தும் சார்புநிலை உறவுகள் எனவும், அவ்வுறவில் நிற்கும் தலைமை நிலைக் கூறை 'ஆளும் கூறு' எனவும்,

சார்பு நிலைக் கூறுகளை 'ஆளப்படும் கூறு' எனவும் கொண்டு, இந்தச் சார்பு நிலை உறவை 'ஆளுகை உறவு' எனவும் அழைப்பர்.

மொழியில் காணப்படும் தொடர்களை 'முற்றுத்தொடர்' 'எச்சத்தொடர்' என இரு வகையாகப் பிரிக்கலாம். "அவன் வந்தான்" என்பது முற்றுத்தொடர். "அவன் வந்து", அவன் வர', அவன் வந்தான் என்று' என்பவை எச்சத்தொடர்கள். முற்றுத்தொடர்களில் பயனிலை வினை காலங்காட்டும் இடை நிலைகளையும், இணக்க உருபன்களையும் (இணைபு உருபன்களையும்) பெற்று வரும். (வ-ந்த்-ஆன்)-எச்சத்தொடர்களில் இயைபு உருபன்கள் இல்லாதிருக்கும்; அந்த இடத்தில் எச்ச உருபன் வரும். இத்தகைய தொடரை, 'செய்து' எனும் வாய்பாட்டு வினை எச்சத்தொடர் எனலாம் (வ-ந்த்-உ). எச்சத்தொடர்களில் கால இடைநிலை, இயைபு உருபன் இரண்டும் இல்லாமல் எச்ச உருபன் மட்டும் வினையில் தோன்றினால் அத்தகைய தொடரைச் செய எனும் வாய்பாட்டு வினை எச்சம் எனலாம் (வர்-அ). ஒரு முற்றுத்தொடரின் பின்னர் என, என்று என்ற உருபன்கள் வந்தால் அதையும் ஒரு எச்சவாக்கியம் எனலாம். அதைக் கூற்று எச்ச வாக்கியம் எனலாம்.

முருகன் ஊருக்குப் போனான் - முற்று

முருகன் ஊருக்குப் போய் - செய்து எச்சம்

முருகன் ஊருக்குப் போக - செய எச்சம்

முருகன் ஊருக்குப் போனான் என்று - கூற்று எச்சம்
(செய்து வகை எச்சம்)

எச்சத் தொடர்களை உள்ளடக்கிய முற்றுத்தொடர்கள் கலவைத் தொடர்களாகின்றன.

(முருகன் ஊருக்கு வந்து) நேற்று திரும்பிப் போனான்

(முருகன் ஊருக்கு வர) நினைத்தான்

(முருகன் ஊருக்கு வருவான் என்று) அவன் தந்தை கூறினார்.

தொடர்களில் பெயர்த் தொடர், வினைத் தொடர், வேற்றுமைத் தொடர், பெயரடைத் தொடர், வினையடைத் தொடர், துணை வினைத் தொடர் என்ற வகைகள் உள்ளன. பெயர்த் தொடரில் பெயரும் பிற கூறுகளும், வினைத் தொடரில் வினையும் பிற கூறுகளும் எனச் சொற்றொடர்கள் அமைப்பைக் கொண்டுள்ளன. ஒரு சொற்றொடரின் கீழ்ப் பிற சொற்றொடர்களும், தொடர்களும் (வாக்கியம்) அடங்கி வரலாம். பெயர்த் தொடரில் பிற தொடர்களும், சொற்றொடர்களும் தோன்றலாம்.

| | |
|---|---|
| மலையின்+அருவி | வேற்றுமைத்தொடர் + பெயர் |
| மலையிலிருந்து விழுகின்ற+ அருவி | எச்சத் தொடர் + பெயர் |
| மிகவும் அழகான + அருவி | பெயரடைத் தொடர் + பெயர் |

தொடர்களின் இலக்கண, பொருண்மை கட்டமைப்புகளுக்கு அடிப்படையாக அமைபவை சொற்களாகும். இவைகளுக்குச் சில பண்புகள் உள்ளன. இவை இலக்கணப் பண்பையும், பொருண்மைப் பண்பையும், பிற இலக்கணக் கூறுகளையும் பொருண்மைக் கூறுகளையும் தம் சார்பு நிலைக் கூறுகளாக ஏற்றுக் கொள்ளும் பண்பையும் கொண்டவை. எனவே இப்பண்புகளைச் சொற்களின் பண்புகளாக வெளிப்படையாகக் குறிப்பிட்டுக் காட்டவேண்டும் எனவும், அவ்வாறு குறிப்பிட்ட வகையிலான சொற்கள் அகராதி வடிவத்தில் இலக்கணத்தில் நிறுத்தப்படவேண்டும் எனவும், ஒரு சொல்லின் பண்பிலிருந்து அதைத் தலைமை நிலைக் கூறாகக் கொண்டு விளங்கும் சொற்றொடர் அல்லது தொடரின் அமைப்பை உய்த்துப் பெறமுடியும் எனவும் அவ்வாறு பெறுவதற்கான நியதியை அமைப்பு விரிப்பு நியதி எனவும் கருதலாம். 'கொடு' என்ற சொல் ஒரு வினை எனவும், செயப்படுபொருள் குன்றாவினை எனவும், 'ஐ' வேற்றுமைத் தொடரையும், 'க்கு' வேற்றுமைத் தொடரையும் சார்பு நிலை இலக்கணக் கூறுகளாக ஏற்றுவரும் எனவும், கொடுப்போன், பெறுவோன், கொடுக்கப்படுவது' என்ற 3 பொருண்மைக் கூறுகளை சார்புநிலைப் பொருண்மைக் கூறுகளாக ஏற்றுவரும் எனவும் கருதி, இப்பண்புகளைப் பின்வருமாறு குறிப்பிட்டு அகராதியில் நிறுத்தலாம்.

கொடு = + [வினை]

+ [செயப்படுபொருள் குன்றா வினை]

+ [வேற்றுமைத்தொடர்-க்கு, வேற்றுமைத்தொடர்-ஐ-]

+ [கொடுப்போன், பெறுவோன், கொடுக்கப்படுவது]

'கொடு' என்ற வினையின் இலக்கணக் கூறு தேர்வுப் பண்பு, பொருண்மைக் கூறுத் தேர்வுப் பண்புகளிலிருந்து 'விரித்துணரும் நியதியால்' (Projection principle) பின்வரும் தொடரமைப்பை உய்த்துணரலாம். எழுவாய் நியதியால் எழுவாய்ப் பெயர்த்தொடர் இருப்பதையும் உயத்துணரலாம்.

கொடு = பெ.தொ [(வே.தொ-க்கு + வே.தொடர்-ஐ+கொடு]

<கொடுப் போன்> <கொடுக்கப் படுவோன்> <கொடுக்கப் படுவது>

மேற்கண்ட நியதிகளால் சொல்லின் பண்பிலிருந்து தொடரை விரித்துப் பெறலாம். அந்தத் தொடரில் அங்கமாகும் இலக்கணக் கூறுகளையும், பொருண்மைக் கூறுகளையும் சுட்டிக்காட்டலாம். அத்தகைய அமைப்பில் வினை ஆளும் கூறாகவும் பிற கூறுகள் ஆளப்படும் கூறுகளாகவும் மாறும்.

தொடரில் காணப்படும் சொற்றொடர்களின் இலக்கண உறவை விளக்க, தொடரில் தலைமை நிலைக்கூறுகளும், சார்பு நிலைக்கூறுகளும் உள்ளன என விளக்கப்படும். இதன்படி முற்றுவாக்கியத்தில் வினை முற்று விகுதிகள் (காலம் காட்டும் இடைநிலைகள், இடம்+எண்-பால் காட்டும் விகுதிகள் ஆகியன) தலைமை நிலைக்கூறுகளாகவும், எச்சவாக்கியத்தில் எச்ச விகுதிகள் தலைமை நிலைக்கூறுகளாகவும், பெயர்த் தொடரில் பெயர் தலைமை நிலைக்கூறாகவும், வினைத் தொடரில் 'வினை' தலைமைக் கூறாகவும், வேற்றுமைத் தொடரில் வேற்றுமை உருபு தலைமைக் கூறாகவும், வினையடைத் தொடரில் வினையடை, தலைமைக்கூறாகவும், பெயரடைத் தொடர்களில் பெயரடை தலைமைக் கூறாகவும் தோன்றும். எல்லா வகையான தொடர்களும் சொற்றொடர்களும் தங்கள் இலக்கண அமைப்பில் முழுத் தொடர் ($X^{ii}$), அரைத் தொடர் ($X^{i}$) தலைமை நிலைக்கூறு (X) என்ற கூறுகளைக் கொண்ட படிநிலை அமைப்பைக் கொண்டு தோன்றும் எனவும் முழுத்தொடரில் 'சுட்டு+ ' என்ற அமைப்பும், அரைத் தொடரில் 'அடை+ ' என்ற அமைப்பும் காணப்படும் என விளக்கப்படுகிறது.

$X^{ii}$
சுட்டு $X^{i}$
அடை X

பெயர்த் தொடர்(பெ$^{ii}$)
சுட்டு பெ1
அடை பெ
அந்த நல்ல பையன்

வினைத் தொடர்(வி$^{ii}$)
சுட்டு வி
அடை வி
அழகாக பாடு

வேற்றுமைத் தொடர்(வே$^{ii}$)
சுட்டு வே1
அடை வே
மகள் க்கு

முற்றுத்தொடர்(மு)
சுட்டு மு$^{1}$
அடை மு
அவன் அவளைப் பார் தத்+ஆன் க்கிற்+ஆன்

எச்சத்தொடர்(எ$^{11}$)
சுட்டு எ$^{1}$
அடை எ
அவன் அவளைப் பார் த்த்+உ க்க த்த்+அ

தொடரின் பொருண்மை உறவு தொடரின் பயனிலை வினைக்கும் அதைச் சார்ந்து வரும் பெயர்த் தொடர்களுக்கும் இடையில் இருக்கும் உறவு. வினையைச் சார்ந்து வரும் பொருண்மைக் கூறுகளாகச் செயலுக்கு உள்ளாகுபவன் (Patient), செய்வோன் (Agent), செயல் உணர்வோன் (experiencer), கருவி (Instrument), செயல் பயனடைவோன் (Beneficiary), நிகழிடம் (location), செயல் தொடக்கம் (source), செயல் முடிவு (target) என்ற பொருண்மைக் கூறுகள் வரலாம். 'வா' என்ற வினை செயலுக்கு உள்ளாவோனையும், கொடு என்ற வினை 'செய்வோன், செயலுக்கு உள்ளாவோன், பயனடைவோன்' என்பவைகளையும் 'வெட்டு' என்ற வினை A,I,P என்பவைகளையும், தேர்வுப் பொருண்மைக் கூறுகளாகக் காட்டுகின்றன. இவை செயலோடு தொடர்புடைய நபர்கள் எனப்படும். செயலுக்கும் செயலோடு தொடர்புடைய நபர்களுக்கும் இடையிலான உறவைப் பொருண்மை உறவு எனவும், இந்த உறவு தொடர்களில் காணப்படும் சொற்றொடர்களில் குறிப்பாக, பெயர்த்தொடர்களால் காட்டப்படுகிறது எனவும், இவைகளுக்கு ஏற்ப வேற்றுமை உருபுகள் பெயர்த்தொடர்களோடு இணைந்து இக்கூறுகளைக் காட்டும் எனவும் விளக்கப்படும். தொடரில் வெளிப்படும் பொருண்மை உறவில் வினையானது தலைமைநிலைக் கூறாகவும் (ஆளும் கூறு), பெயர்த் தொடர்கள் (நபர்) சார்புநிலைக் கூறுகளாகவும் (ஆளப்படும் கூறு) தோன்றுகின்றன.

தொடர்களில் காணப்படும் வினைக்கும் பெயர்த் தொடர்களுக்கும் இடையே வேற்றுமை உறவு காணப்படுகிறது. தொடரின் (முற்று எச்சம்) சுட்டுக் கூறாக வரும் பெயர் எழுவாய் வேற்றுமையை ஏற்றும், தொடரின் அடையாக வரும் வினைத் தொடரோடு இணைந்து வரும் பெயர்த் தொடர்கள் செயப்படுபொருள், கொடை, கருவி, நீங்கல், இடம் போன்ற வேற்றுமைகளை ஏற்றுவரும் எனவும் கொள்ளப்படுகிறது. தொடரில் தோன்றும் வினை (பயனிலை)க்கும் பெயர்களுக்கும் (நபர்) இடையிலான இலக்கண உறவை வேற்றுமைகள் வெளிப்படுத்துகின்றன. தொடரின் பெயர்த் தொடரான எழுவாய்ப் பெயர்த்தொடர் அதன் வேற்றுமையை வாக்கிய 'முற்றுவிகுதி'களின் மூலமும், தொடரின் பிறபெயர்த் தொடர்கள் அவைகளின் வேற்றுமையான செயப்படுபொருள், கருவி, கொடை, நீங்கல், இடம் போன்றவற்றை உரிய வேற்றுமை விகுதிகள் வாயிலாகப் பெறுகின்றன என விளக்கப்படும். ஒரு முழுத்தொடரில் அங்கமாகும் வேற்றுமை உருபு அதன் அண்மைப் பெயர்த்

தொடருக்கு வேற்றுமையை வழங்கும் என விளக்கப்படுகிறது. வேற்றுமை உருபு, முற்று உருபு ஆகியன வேற்றுமையை வழங்குவதால் வேற்றுமை வழங்கும் கூறு (ஆளும் கூறு) எனவும், வேற்றுமை பெறும் பெயர்த்தொடர்களை வேற்றுமை வாங்கும் கூறு (ஆளப்படும் கூறு) எனவும் அழைப்பர்.




தமிழில் வேற்றுமை உருபு இல்லாத பெயர்த் தொடரை எழுவாய் எனவும், -ஐ வேற்றுமை உருபு கொண்ட பெயர்த் தொடரைச் செயப்படுபொருள் எனவும், -க்கு வேற்றுமை உருபைக் கொண்ட பெயர்த்தொடரைக் கொடைவேற்றுமை எனவும், -ஆல் உருபு கொண்ட பெயர்த் தொடரைக் கருவி வேற்றுமை எனவும், -இல், -இடம் என்ற வேற்றுமை உருபுகளைக் கொண்ட பெயர்த் தொடரை இடவேற்றுமை எனவும் கருதுவர். தமிழில் எழுவாய் தவிரப் பிற வேற்றுமைகள் அவைகளுக்குரிய உருபுகளால் வெளிப்படையாக்கப்படுகின்றன. ஆங்கிலம் போன்ற மொழிகளில் எழுவாய், செயப்படுபொருள் என்ற வேற்றுமைகள், உருபுகள் வாயிலாக வெளிப்படுத்தப்படுவதில்லை. ஆகவே அவைகளுக்கு வேற்றுமையைப் பிற கூறுகள் வழங்குகின்றன எனக் கருதப்படுகிறது. எழுவாய் வேற்றுமையை வாக்கிய முற்று விகுதிகளும் (இயைபு உருபுகளும்) செயப்படுபொருள் வேற்றுமையை வினையும், பிற வேற்றுமைகளை preposition களும் பெயர்த் தொடர்களுக்கு வழங்குகின்றன என விளக்கப்படுகிறது.




வேற்றுமையைப் பெயர்த்தொடர்களுக்கு ஆளும் அலகுகள் (முற்றுவிகுதி, வேற்றுமை உருபு, வினை) வழங்குவதில் சில நிபந்தனைகள் உண்டு. வேற்றுமை வழங்கும் கூறும், வாங்கும் கூறும் ஒரு முழுத்தொடரின் சகோதரிகளாக (சகோதர உறவில்) நிற்கவேண்டும் ஆங்கிலத் தொடரில் John. INF என்பனவும், give, a book என்பனவும், to, mary என்பனவும் சகோதர உறவில் நிற்கின்றன. தமிழில் மதன்; த்தான்; கலா, -க்கு; புத்தகம் : ஐ என்பவை சகோதர உறவில் நிற்கின்றன.

தொடர்களில், சில பெயர்த்தொடர்கள் தம் நிலையை விட்டுவிட்டுப் பிற இடங்களுக்கு நகர்கின்றன. ஆங்கிலத்தில் செயப்பாட்டு வினைத் தொடரில், செயப்பாட்டு வினையின் பின்னால் வரும் பெயர்த்தொடர் வேற்றுமை பெற இயலாதது. இதன் காரணம் செயப்பாட்டு வினைக்கு வேற்றுமையை வழங்கும் தன்மை கிடையாது. ஆகவே அவ் வினையின் பின்வரும் பெயர்த்தொடர் நகர்ந்து முற்றுவிகுதியின் முன் சென்று எழுவாய் வேற்றுமையைப் பெறும்.




பொதுவாக, பெயர்த்தொடர், வேற்றுமைத்தொடர், வினை என்பவைகளுக்கிடையே வேற்றுமை உறவு காணப்படுகிறது.

ஆங்கிலத்தில் செய எனும் வாய்பாட்டு வினை எச்சத் தொடரைப் புகுநிலைத் தொடராகப் பெற்றிருக்கும் நிலைத் தொடர்களைக் கலவைத் தொடர் எனலாம். இவைகளில் காணப்படும் புகுநிலைத் தொடர்களில் எழுவாய் தோன்றா நிலையிலும் இருக்கலாம். ஆனால் அந்தத் தோன்றா எழுவாயை, நிலைத்தொடரின் எழுவாயுடனும், செயப்படுபொருளுடனும் இணைப்பதற்கு ஏதுவான நிலை உள்ளது. புகுநிலைத் தொடரின் தோன்றா எழுவாயை நிலைத்தொடரின் எழுவாயே அல்லது செயப்படுபொருளே எனக் கருதுவதற்கு நிலைத்தொடரின் பயனிலை காரணமாக அமைகிறது.

John INF persuade Mary (-to go)

John INF promise Mary (-to go)

முதல் தொடரில் (-) என்ற தோன்றா எழுவாய், நிலைத் தொடரின் செயப்படு பொருள் எனக் கருதலாம் (Mary). இப்படிக்குக் கருதுவதற்கு 'Persuade' என்ற வினையின் பண்பே காரணம் எனலாம். இரண்டாம் தொடரின் (-) என்ற தோன்றா எழுவாய், நிலைத்தொடரின் எழுவாயே (John) எனக் கருதலாம். இப்படிக் கருதுவதற்கு 'promise' என்ற வினையே காரணம் எனலாம். ஆகவே இவைகளைக் 'கட்டுப்பாட்டுவினைகள்' (control verbs) எனலாம். நிலைத் தொடரின் எழுவாய், அல்லது செயப்படுபொருளுக்கும், புகுநிலை வாக்கியத்தின் தோன்றா எழுவாய்க்கும் இடையிலான உறவைக் 'கட்டுப்பாட்டு உறவு' (control relation) என்பர். எனவே தொடர்களில் தோன்றும் பெயர்த்தொடருக்கும், தோன்றாப் பெயர்த் தொடருக்கும் இடையில் 'கட்டுப்பாட்டு உறவு' உள்ளது எனலாம்.

தொடர்களில் தோன்றும் முழுப்பெயர்த் தொடர்களுக்கும், அவைகளைச் சுட்டுகின்ற பதிலிடு பெயர்களுக்கும் இடையிலான உறவைக் 'கட்டுறுதல் உறவு' எனலாம். பதிலிடு பெயர்களில் மூவிடப்பெயர்கள், மூவிடப் பிரதிபலிப்புப் பெயர்கள் என இருவகைகள் (அவன்;தான்) உள்ளன. இவை தொடரிலுள்ள ஒரு பெயர்த்தொடரோடு கட்டுறவில் நிற்கலாம். கட்டுறவில் நிற்பதற்கு அவை ஒரே பொருளைச் சுட்டவேண்டும் அல்லது சக சுட்டல் தன்மை (co-reference) பண்பைக் கொண்டிருக்கவேண்டும்.

கந்தன் தன்னை அடித்துக்கொண்டான். (தன்:பிரதிபலிப்புப் பெயர்)

வள்ளி கந்தனை முத்தினாலும் அவன் அசையவேயில்லை.

முதல் தொடரின் 'கந்தன், தன்' என்ற கூறுகளுக்கிடையே பெயர்+பிரதிபலிப்புப் பெயர் கட்டுறவு உள்ளது.

இரண்டாம் தொடரில் 'கந்தன், அவள்' என்ற கூறுகளுக்கிடையே பெயர்-மூவிடப்பெயர் கட்டுறவு உள்ளது.

ஒரே முழுத் தொடரின் கீழ்ச் சகோதர உறவில் நின்றால் மட்டுமே பிரதிபலிப்புப் பெயர், உரிய பெயர்த்தொடரோடு கட்டுறவில் நிற்கும் எனவும், ஆனால் மூவிடப்பெயர் வெவ்வேறு முழுத்தொடர்களில் நின்றாலும் உரிய பெயர்த் தொடரோடு கட்டுறவில் நிற்கும் என்ற நிபந்தனையும் வெளியிடப்பட்டது. இதன்படி "மேரி தன்னைப் பார்த்துக் கொண்டாள்" என்பதில் மேரி, தான் என்பவை கட்டுறவில் நிற்கின்றன எனவும் "மேரி அவளைப் பார்த்தாள்" என்பதில் 'மேரி, அவள்' என்பவை கட்டுறவில் நிற்க வில்லை எனவும் அறியலாம்.

எனவே தொடர்களில் பெயர்த்தொடர்களுக்கும் அவைகளைச் சுட்டுகின்ற பதிலிப்பெயர்களுக்கும் இடையில் கட்டுறவு உண்டு என நிறுவலாம். கட்டுறும் பதிலிகளை ஆளப்படும் அலகு எனவும் கட்டுறவைக்கும் பெயர்த் தொர்டரை 'ஆளும் அலகு' எனவும் நிறுவலாம்.

தொடர்களில் தோன்றும் சொற்றொடர்கள் தங்கள் நிலைத்தானத்தைவிட்டு வேறு இடங்களுக்கு நகர்கின்றன. இதன் வாயிலாகப் பிற செம்மையான தொடர்கள் உருவாக வழி பிறக்கிறது. ஒரு தொடர் நகரும் போது தான் முதலில் நின்ற இடத்தில் ஒரு சுவட்டை விட்டுச் செல்கிறது. இத்தகைய சொற்றொடர் நகர்வில் சில வகைகளும், சில கட்டுப்பாடுகளும் உள்ளன. முந்தைய தொடரிலக்கணங்களில் மாற்று விதிகள் பல வகைகள் கண்டு பிடித்து விளக்கப்பட்டன. ஆனால் அவைகளை எல்லாம் கருத்திற் கொண்டு பொதுமைப்படுத்தியதன் விளைவாகத் தொடரில் மாற்றம் என்பது சொற்றொடர்களின் நகர்வால் மட்டுமே உருவாகிறது என தொடர் உறவு இலக்கணத்தில் விளக்கப்படுகிறது. தொடர் நகர்வில் பெயர்த்தொடர் நகர்வு, வேற்றுமைத் தொடர் நகர்வு என்பன முக்கியமானவை. இந்த நகர்வு வகைகள் ஆங்கில மொழித் தொடர்களுக்கு மிகவும் பொருந்தி வருகின்றன. ஆங்கிலத்தில், தொடரின் இயைபு உருபன் நகர்வு, வினை நகர்வு, பெயர்த் தொடர் நகர்வு என்பன விளக்கப்படுகின்றன.

INFநகர்வு: John will cook the food => will John cook the food

NP நகர்வு: e will be given Mary something Mary will be given (-) something

: it seem to me (John to be unhappy) =>

John seems(-) to be unhappy

: John persuaded (she to go) =>

John persuaded her ((-) to go)

Whநகர்வு: 1. John will put wh in the garage =>

What will John put (-) in the garage

wh

2. e seem to (Mary to have seen John) =>

Who seems (- to have seen John)

3. Joe said (that she thought (that she loves wh)

Who did Joe say (that she thought (that she loved(-))

INF நகர்வு வினாத்தொடரைப் பெற வழிவகுக்கிறது. எல்லாப் பெயர்த்தொடர் நகர்வுகளும் பொருண்மை மதிப்பற்ற நிலையிலிருந்து பொருண்மை மதிப்புள்ள நிலைக்கு நகர்கின்றன. நகரும் போது அவை 'சுவடு'களை அவை நின்ற இடத்தில் விட்டுச் செல்கின்றன. வேற்றுமையைப் பெறுவதற்காகப் பெயர்த் தொடர்கள் நகர்கின்றன. அவைகளின் நகர்வால் செயப்பாட்டு வினை வாக்கியங்களும், எழுவாயைப் பெறும் நிலைவாக்கியங்களும் செயப்படுபொருளைப் பெறும் நிலைவாக்கியங்களும் உருவாகும். வினாத்தொடர், பொருண்மை மதிப்பற்ற நிலையிலிருந்து பொருண்மை மதிப்பைப் பெறும் நிலைக்குச் செல்கிறது. நகரும்போது வினாத் தொடர் சுவடைவிட்டுச் செல்கிறது. வினாத் தொடர் நகர்வில் வினா வடிவம் கொண்ட பெயர்த்தொடர், வேற்றுமைத்தொடர், வினையடைத் தொடர் ஆகியன நகருகின்றன. வேற்றுமை பெற்ற நிலையிலிருந்து வேற்றுமை பெறாத நிலைக்கு வினாத் தொடர்கள் நகர்கின்றன. ஆக, தொடர்களில் நகரும் கூறுகள் உள்ளன எனவும், அவை நகரும் போது சுவடுகளை விட்டுச் செல்கின்றன எனவும், நகரும் கூறுக்கும் அது விட்டுச் செல்லும் சுவட்டுக்கும் இடையிலான உறவு ஒரு வகையான கட்டுறவு (Binding) எனவும் தொடர் உறவு இலக்கணம் விளக்குகிறது.

மேலே குறிப்பிட்ட தொடர்களின் அங்கமான சொற்றொடர்களிடையே காணப்படும் உறவுகள் பலவாக இருந்தாலும், அவைகளைப் பொதுமைப்படுத்தி 'ஆளுகை உறவு'

எனப் பெயரிட்டு அவ்வுறவில் ஆளும் கூறுகளும் ஆளப்படும் கூறுகளும் கட்டுண்டு, ஒன்றை மற்றொன்று ஆளும் வகையில் நிற்கின்றன எனத் தொடர் உறவு இலக்கணம் வெளிக்காட்டுகிறது. மறைந்து கிடக்கும் தொடர் உறவுகளைத் தகுந்த சான்றுகளோடு வெளிப்படையாகக் காட்ட முற்படுவதால் இந்த இலக்கணம் அறிவியல் நெறிமுறைகளைத் தழுவியது எனலாம்.

**உரைக்கோவை**

சொற்கள் தொடர்ச்சியாகத் தோன்றுவதால் சொற்றொடரும், சொற்றொடர்கள் தொடர்ச்சியாகத் தோன்றுவதால் தொடரும் உருவாவதைப் போன்று, தொடர்கள் தொடர்ச்சியாகத் தோன்றுவதன் வாயிலாக உருவாகும் மொழியலகை 'உரைக்கோவை' எனலாம். உரைக்கோவைகளைப் படைத்தல், புரிதல் போன்ற செயற்பாடுகள் ஒவ்வொரு மொழியிலும் காலங்காலமாக நிகழ்ந்து வருகின்றன. தமிழ் மரபில் கவிதை வடிவ உரைக்கோவைகள் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தோன்றி, தனக்கே உரிய இலக்கிய மரபுகளை வரையறுத்துத் தமிழ் வளர்ந்து வந்துள்ளது. தமிழின் பழைய இலக்கியமான சங்க இலக்கியங்களைத் திறனாய்வு செய்த உரையாசிரியர்கள், சங்க இலக்கியங்களின் அமைப்பு, கருத்து, நடை, உத்தி போன்ற சீரிய பண்புகளை உரைநடை வடிவத்தில் விளக்கி, தமிழில் உரைமரபு என்ற இலக்கியத் திறனாய்வு மரபை நிலைநாட்டியுள்ளனர். அத்தகைய உரை மரபின் தொடர்ச்சியாக, இன்றும் கூட கவிதைகளைப் படித்து அவைகளின் பண்புகளை விளக்கும் நிலையில், பதவுரை, பொழிப்புரை போன்ற உரைகளை உருவாக்கிக் கவிதையை விளக்குகிறோம். தமிழில் பதினாறு, பதினேழாம் நூற்றாண்டுகளில் பிறமொழிக் கலப்பால் எழுந்த மணிப்பிரவாள உரைநடை வகை எழுந்ததையும், பின்னர்ப் பதினெட்டாம் நூற்றாண்டில் ஆங்கிலேயரின் வரவால் தமிழில் உரைநடை வடிவ உரைக்கோவைகள், குறிப்பாக நவீனங்கள் எழுந்ததையும் தமிழ் மொழி வரலாறு காட்டுகிறது. தொல்காப்பியத்திலும் கவிதை, உரைநடை வடிவ உரைக்கோவைகளைப் படைக்கும் நிலையில் கடைப்பிடிக்க வேண்டிய உத்திகளைக் குறித்த விளக்கம் காணப்படுகிறது. எனவே உரைக்கோவை என்ற கருத்தாக்கமும் அதன் வடிவமான கவிதை வடிவம், உரை நடை வடிவம், நாடக வடிவம் என்பனவற்றைக் குறித்த விளக்கங்களை வழங்குவதும் தமிழ் மரபுக்குப் புதியதல்ல.

பிறரைக் கவரும் வண்ணம் நயமாகப் பேசுவது, எழுதுவது எவ்வாறு என்ற கருத்துப்புலப்பாட்டு நெறிமுறைகள் கிரேக்கர்கள்

காலத்திலிருந்தே தொடர்ச்சியாக வெளியிடப்பட்டாலும், உரைக்கோவை என்பதன் அமைப்பையும், அதைப் படைத்தல், புரிதல் சார்ந்த வழிமுறைகளையும் வெளிப்படையாக வெளியிட்ட பெருமை மொழியியலாரைச் சாரும். குறிப்பாக, அறிவியல் நெறிமுறைகளை முன்னிறுத்தி, உரைக்கோவைகளை இனங்கண்டு அவைகளின் அமைப்பு, கருத்து, இலக்கு, சூழ்நிலைச்சார்பு போன்றவற்றை விளக்கும் முறை மொழியியலாரால் வெளியிடப்பட்டது. இதில் ஹேரிஸ் என்ற அமெரிக்க மொழியியலறிஞர், பர்த், கூத்தாடு, வான்டைக் போன்ற ஐரோப்பிய மொழியியலறிஞர்கள் முக்கியமானவர்கள் ஆவர்.

சூழல் சார்பு, இலக்கு, கருத்து, வடிவமைப்பு என்ற நான்கு பண்புகளை உரைக்கோவை பெற்றுள்ளது. உரைக்கோவைகள் சூழலைச் சார்ந்து தோன்றுகின்றன. பண்பாட்டுச்சூழல், இலக்கியச்சூழல், அறிவியல் சூழல், அரசியல், கல்வி, நீதி போன்ற சூழல்களைச் சார்ந்தும் அவைகளை வெளிக்காட்டும் வகையிலும் உரைக்கோவைகள் அமைகின்றன. சங்க இலக்கியங்கள் தமிழரின் பண்பாட்டுச் சூழலையும், தமிழரின் அகப்புற வாழ்க்கை முறைகளையும் வெளிக்காட்டுகின்றன. அறிவியல் கட்டுரை என்ற உரைக்கோவை அறிவியல் சூழலில் நிகழ்கின்ற செயற்பாடுகளைப் பொதுவாகவும், ஆய்வுப் பொருள், ஆய்வு முறை, ஆய்வுக்கருவி, ஆய்வு முடிவு போன்ற பல கருத்துக்களைக் குறிப்பாகவும் விளக்குகின்ற வகையில் அமைகிறது. எனவே உரைக்கோவைகள் சூழலைச் சார்ந்து வருபவை.

உரைக்கோவைகள் படைப்பவர்களின் இலக்கையும், மன விழைவையும் குறிப்பாகக் காட்டுகின்றன. 'திருமண அழைப்பிதழ்' என்ற உரைக்கோவை திருமண நிகழ்வுக்குப் பிறரை 'அழைத்தல்' என்ற இலக்கைக் கொண்டவை. ஒரு நூலில் காணப்படும 'மதிப்புரை' என்ற உரைக்கோவை அந்நூலை அறிமுகம் செய்தல், மதிப்பிடுதல் என்ற இலக்கைக் காட்டுகிறது.

உரைக்கோவைகள் பல கருத்துக்களை வெளியிடும் வகையில் அமைப்பாக்கம் செய்யப்பட்டவை. ஒரு தலைப்பையும், அந்தத் தலைப்பைச் சார்ந்த கருத்துக்களையும் சீர்மையாக அடுக்கி, கருத்தோட்டம் கொண்ட வகையில் படைக்கப்படுவதால் உரைக்கோவைகள் கருத்துக்களின் அடுக்கைக்கொண்டவை. உரைக்கோவையின் கருத்துக்கள் அடுக்கப்படும் போது அவைகளை ஒன்றோடொன்று தொடர்புபடுத்தி, கருத்தோட்டத்தை

வெளிப்படுத்தும் வகையில் படைப்பதற்குச் சில உத்திகள் பயன்படுத்தப் படுகின்றன. இவைகளைக் 'கருத்தடுக்கும் உத்திகள்' எனலாம். கருத்துக்களை அடுக்குதல் என்ற செயல்பாட்டில்

1. நிகரான கருத்துக்களை அடுக்குதல்
2. எதிரிடையான கருத்துக்களை அடுக்குதல்
3. காரணம்-விளைவு என்ற வரிசையில் அடுக்குதல்
4. பொதுமை-சிறப்பு என்ற வரிசையில் அடுக்குதல்
5. முழுமை-அங்கம் என்ற வரிசையில் கருத்துக்களை அடுக்குதல்

என்ற வழிமுறைகளும் உத்திகளும் பயன்படுத்தப்படுகின்றன.

**சொல்லுக சொல்லின் பயனுடைய, சொல்லற்க**
**சொல்லில் பயனிலாச் சொல்**

மேற்கண்ட குறள் இரண்டு கருத்துக்களை, ''பயனுடைய சொற்களைச் சொல்லுக'', ''பயனிலாத சொற்களைச் சொல்லாதிருக்கவும்" என்ற இரண்டு எதிர்நிலைக் கருத்துக்களை அடுக்கியவாறு உருவாக்கப்பட்ட உரைக்கோவை எனலாம்.

உரைக்கோவை என்ற அலகு தொடர்களின் தொடர்ச்சியைக் கொண்ட ஓர் அமைப்பைக் காட்டுகிறது. விளக்கவேண்டிய இலக்குக்கும் கருத்துக்கும் ஏற்ற தொடர்களைத் தேர்ந்தெடுத்து அவைகளை நுட்பமாக அடுக்குவதன் வாயிலாக உரைக்கோவையின் புற அமைப்பு வடிவமைக்கப்படுகிறது. ஆகவே உரைக்கோவைகள் பல தொடர்களைக் கொண்டவை; தொடர்களின் அடுக்கைக் கொண்டவை; தொடர்களை அடுக்கும் போது அவைகளை அமைப்போட்டம் கொண்டவையாக மாற்றுவதற்குச் சில அலகுகளும் பயன்படுத்தப்படுகின்றன. உரைக்கோவையில் காணப்படும் தொடர்களை இணைக்கப் பயன்படுத்தும் உத்திகளைஅமைப்பு இணைப்பு உத்திகள் எனலாம். இவைகளில் சில பின்வருமாறு:

1. தொடர்களை ஒரே காலங்காட்டும் தன்மையில் அடுக்குதல்
2. முதல் தொடரின் எழுவாய், பயனிலைக் கூறுகள் அடுத்த தொடரில் வருமாறு அமைத்தல்
3. தொடர்களுக்கிடையில் தகுந்த இணைப்புக் கூறுகளைப் பயன்படுத்துதல்

4. முதல் தொடரில் தோன்றிய சொல்லுக்கு நிகரான பதிலியை இரண்டாம் தொடரில் பயன்படுத்துதல்

5. இணக்கக் கூறுகளின்றித் தொடர்களை அடுக்குதல்

தொடர் இணக்க உத்திகள் பயன்படுத்தாத வகையில் தொடர்கள் அடுக்கப்பட்டால், அவைகளின் அமைப்போட்டத்தை உணர, உலகைக்குறித்த நமது அனுபவங்களும், ஊகங்களும், தொடர்களின் கருத்துக்களும் பயன்படுகின்றன.

> பாட்டியின் வீட்டுப் பழம் பானை,
> அந்தப் பானையின் ஒருபுறம் ஓட்டையடா;
> ஓட்டை வழியொரு சுண்டெலியும்,
> உள்ளே புகுந்து நெல்நின்றதடா;

இந்தப் பாடலில் 3 கருத்துக்களும் அவைகளை வெளிப்படுத்தும் 3 தொடர்களும் உள்ளன. அவை

1. ஒரு பாட்டியின் வீட்டில் ஒரு பழம் பானை இருந்தது
2. அந்தப் பானையில் ஒரு புறம் ஓட்டை இருந்தது
3. அந்த ஓட்டை வழியாக ஒரு சுண்டெலி பானையின் உள்ளே புகுந்து நெல்லைத்தின்றது.

இம் மூன்று தொடர்கள், 'அந்த, ஓட்டை' என்ற இணைப்பு அலகுகள் வாயிலாக இணைக்கப்பெற்றுள்ளன. 'பானை' என்ற சொல்லுக்குப் பதிலாக 'அந்தப் பானை' என்ற சொல்லையும் 'ஓட்டை' என்ற சொல்லைத் திரும்பவும் பயன்படுத்தியதால் இப்பாடலில் அமைப்போட்டம் சிறப்பாக நிகழ வழி பிறந்தது.

உரைக்கோவைகள் அமைப்பு, கருத்து, இலக்கு, சூழல் என்ற பண்புகளைக் காட்டுவன எனக் கூறலாம். தொடர்களின் அடுக்கைக் கொண்டு விளங்குவதால் அதன் வடிவமும் அமைப்போட்டமும் நிலை நாட்டப்படுகின்றன. கருத்துக்களின் அடுக்கைக் கொண்டு விளங்குவதால் அதன் பொருண்மை வெளிப்படுகிறது. படைப்பரின் மன விழைவையும், இலக்கையும் குறிப்பாகச் சுட்டுவதால் உரைக்கோவையின் இலக்கு வெளிப்படுகிறது. நகைச்சுவைக்காக எழுதப்படும் உரைக்கோவை அந்த இலக்கைக் கொண்டது. சூழலைக் குறிப்பால் உணர்த்தும் தன்மையால், உரைக்கோவையின் சூழல்சார்புப் பண்பு உணரப்படுகிறது.

உரைக்கோவைகளைப் பேச்சு, எழுத்து என்ற மொழி வடிவத்தின் அடிப்படையிலும், ஈடுபடும் நபர்களின் அடிப்படையிலும், முன்னர்க் குறிப்பிட்ட பண்புகளான சூழல்,

இலக்கு, கருத்து, அமைப்பு என்பவைகளின் அடிப்படையிலும் வெவ்வேறு வகையாகப் பிரித்து வரையறை செய்யலாம். சொற்பொழிவு, உரையாடல், கட்டுரை, பேட்டி, கடிதம், நாட்குறிப்பு, மளிகைப்பட்டியல், சிரிப்பு உரை, விளம்பரங்கள், வாசகர் கடிதங்கள், பாடங்கள், தலையங்கங்கள், புத்தகங்கள் போன்ற பல வகையான உரைக்கோவை வகைகளையும், கவிதை உரை, கட்டுரை வடிவ உரை, நாடக வடிவ உரை போன்ற வடிவங்களையும் நாம் இனங்கண்டு, வேறுபடுத்தி விளக்கமுடியும்.

முந்தைய மொழிபயிற்றல், மொழி ஆய்வு நிலைகளில் கட்டுரைகளையும் கவிதைகளையும், பனுவல்களையும், படைப்பதையும் ஆய்வு செய்வதையும் குறித்த விளக்கங்கள் கொடுக்கப்பட்டன. ஆனால் அவை தற்சார்புத் தன்மையில் இருந்தன. தம் திறமைக்கு ஏற்ப சிலர் சிறந்த கட்டுரைகளை எழுதும் திறன்பெற்றனர். ஆனால் இன்று உரைக்கோவையின் பண்புகளைத் திட்டவட்டமாக வரையறுத்ததன் காரணமாக, எவ்வாறு உரைக்கோவைகளைப் படைப்பது, புரிவது என்ற செயற்பாடுகளை விளக்கும் நிலையும், கற்பிக்கும் நிலையும் ஏற்பட்டுள்ளன. ஆகவே உரைக்கோவை குறித்த விளக்கங்களை அறிவியல் அடிப்படையிலான மொழியியல் விளக்கம் எனலாம்.

# 3. மொழியின் பொருண்மை

## பொருண்மை

உண்மையை நிலைநாட்டுவதும், நிலைநாட்டுவதற்கான வழிமுறைகளை வழங்குவதும் அறிவியலின் அடிப்படைப் பண்புகளாக அமைகின்றன. மொழியின் நிலைப்பாடு பொருண்மையில் அடங்கியுள்ளது. மொழியும் மொழிக் கூறுகளும் பொருண்மை உடையவை. பொருளைச் சுட்டிக்காட்டவும், உணர்த்தவும் மொழிக்கூறுகள் பயன்படுத்தப்படுகின்றன. மொழிக்கூறுகளின் பொருள் பற்றிய உணர்வும், அறிவும் மொழிபேசுபவர்களிடம் உள்ளன. இலக்கணக் கூறுகளையும், ஒலிகளையும் போல மொழிக்கூறுகளின் பொருள் வெளிப்படையாகக் கண்ணுக்குப் புலப்படாவிட்டாலும், அது மனத்தில் படிந்திருக்கும் உண்மையென மொழிபேசுபவர்கள் உணர்கின்றார்கள். இதை மொழியை விளக்கும் அறிஞர்கள் ஏற்றுக்கொள்கிறார்கள்.

மொழிவழிச் செயல்பாடுகள் அனைத்தும் பொருள் அடிப்படையில் நிகழ்பவையே. மொழியைப் பயன்படுத்திக் கருத்துக்களைப் பரிமாறுவதிலும், மொழியை வெவ்வேறு பயன்பாடுகளை முன்னிறுத்தி, குறிப்பாக, உலக நிகழ்வுகளை விளக்குதல், பிறரை நெறிப்படுத்துதல், உணர்வுகளை வெளிப்படுத்துதல், சமுதாய நல்லிணக்கத்தை ஏற்படுத்துதல், சொல்லுக்கு இணையான குறியீடுகளை உருவாக்குதல் (தண்ணீர்=$H^2O$), மன உணர்வுகளை எழுப்புதல் போன்ற பல்வேறு பயன்பாடுகளுக்கும், மொழிபெயர்த்தல், மொழி கற்பித்தல், கணினியை இயக்குவதற்காக மொழியறிவை அதற்கு வழங்குதல் போன்ற எல்லா வகையான மொழிவழிச் செயல்பாடுகளுக்கும் மொழியின் பொருண்மையே அடிப்படையாக அமைகிறது.

மரபு இலக்கணங்களும், அமைப்பு இலக்கணங்களும், படைப்பு இலக்கணங்களும் மொழியின் கூறுகளை இனங்கண்டு நிலை நாட்டுவதற்கும், மொழிக் கூறுகளின் பண்புகளை விளக்குவதற்கும் பொருளைப் பயன்படுத்தியுள்ளமை கண்கூடு. கிரேக்க, ரோம, இந்திய இலக்கண மரபுக் காலத்திலிருந்தே சொற்களையும் தொடர்களையும் வரையறை செய்யும் போது,

பொருண்மை அடிப்படையில் வரையறையும் விளக்கமும் வழங்கப்பட்டன. பெயர்ச்சொல் என்பது உலகப் பொருள்களைக் குறிப்பன எனவும், வினைச்சொல் என்பது செயலைக் குறிப்பது எனவும் விளக்கப்பட்டன. சொற்கள் ஒலிக்குறிப்புச் சொற்கள் (காகம், விக்கல்), அடுக்குத்தொடர்கள் (படபட, மடமட), மரபு வழி வந்த சொற்கள் (மரம்,நிலம்) என வகைப்படுத்தப்பட்டபோது அதற்குச் சொல்லின் பொருண்மை காரணமாக அமைந்தது. பத்தொன்பதாம் நூற்றாண்டின் மொழியியல் அறிஞர்கள் மொழி மாற்றத்தையும், மொழிகளின் பிறப்பையும் மூல மொழிகளின் மீட்டுருவாக்கத்தையும் குறித்த கொள்கைகளையும், விளக்கங்களையும் கொடுக்கின்றபோது சொற்களின் பொருள் மாற்றத்தைக் குறித்துப் பேசியதோடு, பல தொடர்பான மொழிகளில் தோன்றும் பிறப்பால் ஒற்றுமை கொண்ட சொற்களை (Cognates = பிறப்பால் ஒற்றுமை காட்டும் சொற்கள்) இனங்காண்பதற்குச் சொற்களின் பொருளையே அடிப்படையாகக் கொண்டனர். சொற்பொருள்களின் மாற்றங்களைப் பொருள் குறுகல், பொருள் விரிதல், பொருள் உயர்வு நிலை அடைதல், பொருள் இழிவு நிலை அடைதல், பொருள் மங்கலமாதல், பொருள் அமங்கலமாதல் என வகைப்படுத்தி விளக்கினர்.

அமைப்பு மொழியியலார் மொழிக் கூறுகளின் பொருளை வெளிப்படையாக விளக்க முற்படவில்லை என்றாலும், 'பொருளை வேறுபடுத்தும் பண்பு' (distinguishing) என்பதை மையமாகக் கொண்டு 'ஒலியன்'களையும், 'பொருள் கொண்ட பண்பு' என்பதை மையமாகக் கொண்டு 'உருபன்'களையும், 'சொல்லையும்' விளக்கினர். படைப்பு மொழியியலார், தொடர்களை விளக்குகையில், தொடக்க காலக்கட்டத்தில் தொடர்களின் பொருளை விளக்க முயலவில்லை என்றாலும், பின்னர், தொடர்களுக்குப் பொருண்மை விளக்கம் வழங்குவது எவ்வாறு என ஆராய்ந்தனர். தொடர்கள் பொருளைப்பெறும் விதத்தையும், மொழி பேசுபவர்கள் தொடர்களுக்கு எவ்விதம் பொருளை வழங்குகின்றனர் எனவும் விளக்கினர். ஆக, மொழி விளக்கக் கோட்பாடுகள் பல்வேறு நிலைகளில் மொழிக்கூறுகளின் பொருளை ஒரு விளக்கப் பொருளாகவும், மொழிக்கூறுகளை வரையறுக்கும் கருவியாகவும் கருதின. மொழிவிளக்கத்தில் தொடக்க நிலையிலிருந்தே பொருளுக்கும், புறச்சூழலுக்கும் முன்னுரிமை கொடுத்தவர்களில் லண்டன் மொழியியலார் குறிப்பிடத்தக்கவர்கள் எனலாம்.

பொருளை விளக்கி நிலைநாட்டுவதிலும், மனத்தில் அருவ நிலையில் உறைந்து கிடக்கும் பொருளை உணரவும், புரியவும்,

பொருளின் பண்புகளைக் காணவும் தேவையான வழிமுறைகளை வழங்க முயலும் பொருண்மையியல் ஆய்வுகள் அறிவியல் சார்ந்தவையே என நிறுவலாம். பொருண்மை ஆய்வுகளில் மொழிக்கூறுகளின் பொருள் என்றால் என்ன என்பதை விளக்குதல், மொழிக் கூறுகளின் பொருண்மை உறவுகளை விளக்குதல், பொருளைப் பகுப்பாய்வுக்கு உட்படுத்திப் பொருளின் நுண்கூறுகளைக் கண்டு விளக்குதல், பொருளைத் தொகுப்பாய்வுக்கு உட்படுத்திப் பெரும் பொருட்களங்களைக் கண்டறிந்து நிலை நாட்டுதல், மொழிக்கூறுகளின் பொருண்மை மாற்றத்தைக் கண்டறிந்து அவைகளை விளக்கி வகைப்படுத்துதல் என்ற பல செயல்பாடுகள் அடங்குகின்றன.

மொழிக் கூறுகளின் பொருள் அருவநிலையில் மனத்தில் படிந்திருந்தாலும் கூட, அதை மொழிபேசுபவர்கள் தங்கள் உள்ளுணர்வின் வாயிலாக இனங்கண்டு கொண்டாலும் கூட, மொழிபேசுவோருக்குப் பொருண்மை குறித்த அறிவு இருந்தாலும் கூட, இவையனைத்தும் மறைந்த நிலையில் இருப்பவை, நிகழ்பவை எனக் கொண்டு பொருளை வெளிப்படையாகக் கண்டு கொள்வதற்கான வழிமுறைகள் வழங்கப்பட்டன. பொருள் ஒற்றுமை காட்டும் சொற்கள், பொருள் எதிர்நிலைச் சொற்கள், ஒப்புருச் சொற்கள், பல பொருட்களைக் காட்டும் ஒரு சொல், பொருள் உயர்நிலை, கீழ்நிலைச் சொற்கள் ஆகியனவற்றைச் சுட்டிக் காட்டுவதன் மூலம், அவை பொருள் அடிப்படையில் நிறுவப்படுகின்றன என்பதையும், அவைகளின் மூலம் பொருளின் நிலைப்பாட்டை உணரலாம் என்பதையும் பொருண்மையியலார் குறிப்பிடுவர். மேலும் சொற்களின் பொருளை நேரடியாக விளக்கி வகைப்படுத்தும் முயற்சிகளும் மேற்கொள்ளப்பட்டன.

உலகில் நிலை பெறும் பொருட்கள், செயல்கள், நிகழ்வுகள் ஆகியனவற்றைச் சுட்டிக்காட்டச் சொற்கள் பயன்படுத்தப் படுவதால் அவைகளே சொற்களின் பொருட்கள் என விளக்கப்பட்டது. உலகில் நிலைபெறும் பொருட்கள், செயல்கள், நிகழ்வுகள் ஆகியன மனத்தால் உணரப்பட்டு (Perception) கருத்தாக உருவெடுத்து (Conceptualization) அவை மொழிக்கூறுகளால் சுட்டிக்காட்டப்படுவதால், புறஉலகைச்சார்ந்து மனத்தில் தோன்றும் எண்ணங்களே மொழிக்கூறுகளின் பொருள் என ஆக்டன்-ரிச்சர்டு என்ற அறிஞர்கள் விளக்குவர். இதன்படி 'மரம்' என்ற சொல்லின் பொருள் அச்சொல் குறிக்கும் 'மரம்' ' என்ற எண்ணம் எனக் கருதப்படும். சொல்லிற்கும் சொல் சுட்டுகின்ற கருத்து அல்லது எண்ணத்திற்கும் இடையிலான தொடர்பே

சொல்லின் பொருள் என 'உல்மன்' விளக்குவார். இதன்படி 'மரம்' என்ற சொல்லின் பொருள் மரம் என்ற சொல்லுக்கும் அந்தச் சொல் சுட்டுகின்ற 'மரம்' என்ற எண்ணத்திற்கும் இடையிலான 'சுட்டல் உறவு' எனக் கருதப்படும்.

மேற்குறிப்பிட்ட விளக்கங்கள் சொல்லின் பொருளை ஒரு வஸ்து, உறவு எனக் கருதுகின்றன. இத்தகைய விளக்கத்தைத் தவிர்த்துச் சொற்பொருள் ஒருவஸ்து அல்ல எனவும், அது மனத்தில் உறைந்திருந்தாலும் கூட அதைச் 'சொல் விளையாட்டின்' மூலம் இனங்கண்டு கொள்ளலாம் என விட்ஜன்ஸ்டீன் என்ற அறிஞர் விளக்குவார். சொற்களைத் தொடர்களில் ஒன்றிற்குப் பதிலாக மற்றொன்றை நிறுத்தி அவைகளில் பொருள் வேறுபாடு தோன்றுகிறதா என்ற மொழிவிளையாட்டை ஆடி, சொற்கள் ஒத்த பொருளைக் கொண்டவையா, வேறுபட்ட பொருளைக் கொண்டவையா எனக் கணிக்க முடியும் என்பார் விட்ஜன்ஸ்டீன். இதைப் பொருளின் செயல்பாட்டு விளக்கம் என்பர். பொருள் என்பது சொற்களின் பயன்பாட்டில் படிந்துள்ளது. எவ்வாறு பயன்படுத்துகிறோமோ அதற்கு ஏற்ப அதன் பயன்பாடும் பொருளும் மாறும் எனவும் இதைச் 'சொல்லைப்புகுத்தி நோக்குதல்' என்ற சோதனையால் அறியலாம் எனவும் விளக்குவர். 'is' என்ற சொல்லுக்கு 'equal' என்ற பொருளும், வேறு பொருட்களும் உள்ளன.

Twice two <u>is</u> four

Twice two <u>equals</u> four ஆகவே is = equals

Rose is red

* Rose equals red ஆகவே is ≠ equals

தத்துவ இயலாரில் சிலர், ஒரு கூற்று வாக்கியம் பொருள் கொண்டதா என நிறுவ அது உண்மை என நிறுவுவதற்கான சான்றுகளைக் (Truck value) காணவேண்டும் என்பர். உண்மை மதிப்பைப் பெறும் தொடர்கள் பொருள் கொண்டவை எனவும், உண்மை மதிப்பற்றவை பொருளற்றவை எனவும் நிலைநாட்டப்படும். 'காகம் கறுப்பு' என்ற தொடர் பொருள் கொண்டது எனக் கருதவேண்டுமென்றால் உலகில் காகம் இருக்க வேண்டும், அதன் நிறம் கறுப்பாக இருக்கவேண்டும். இதை நிறுவும் தறுவாயில் இந்தத் தொடர் உண்மையாகிவிடும். எனவே பொருளுள்ளதாகிவிடும்.

சொல்லின் பொருள் அதன் பயன்பாட்டில் படிந்துள்ளது எனவும், நாம் எந்த இலக்கோடு மொழிக்கூறுகளைப்

பயன்படுத்துகிறோமோ அதன் அடிப்படையில் அதன் பொருள் பெறப்படும் என்பர் 'பேச்சுச் செயல்' கோட்பாளர்கள். இத்தகைய இலக்குப் பொருளை 'மனப்பாங்குப் பொருள்' (Intentional Meaning) என்பர். 'உன்தலையில் ஒரு வண்டு இருக்கிறது' என ஒருவர் கூறினால், அந்தத் தொடருக்கு ஒரு சுட்டுப் பொருள் இருந்தாலும் அது 'எச்சரித்தல்' என்ற செயலை நிகழ்த்தப் பயன்படுத்தப் படுவதால், 'எச்சரித்தல்' என்ற பேச்சுச் செயல் இத்தொடரின் மனப்பாங்குப் பொருள் எனலாம்.

பொருளில் பல வகைகள் உள்ளன எனவும் நிறுவப்பட்டுள்ளது. அதில் சுட்டுப்பொருள் ஒரு வகையாகும். மொழிக் கூறுகள் சுட்டுகின்ற எண்ணங்களையும், கருத்துக்களையும் அவைகளின் சுட்டுப்பொருள் எனலாம். இதில் நேர்நிலைச் சுட்டுப் பொருள், மறைநிலைச் சுட்டுப்பொருள் (Denotation, Connotation) என இருவகைகள் உள்ளன. நேர்நிலைச் சுட்டுப்பொருள் என்பது சொற்களால் நேரடியாகச் சுட்டப்படும் எண்ணங்கள் எனவும் ('மரம்' என்பதன் பொருள் 'மரம்' பற்றிய எண்ணம்), மறைநிலைச் சுட்டுப் பொருள் என்பது சொற்கள் சுட்டுகின்ற கருத்தோடு இணைந்த வகையில் தோன்றுகின்ற மன வழியால், சமுதாய வழியால் பெறப்படும் கருத்துக்கள் எனவும் கூறலாம். 'பெண்' என்ற சொல் 'மானிடப் பெண் இனம்' என்ற நேர்நிலைச் சுட்டுப் பொருளையும், மென்மை, தாய்மை, இரக்கம், எளிதில் அழுதல் என்ற உளவியல் பண்புகளையும், சிறப்பாகச் சமைத்தல், பரிமாறல், புடவை அணிதல், தலைமுடியை நீளமாக வைத்திருத்தல், அழகுபடுத்துதல் போன்ற சமுதாயம் சார்ந்த சிறப்புப் பண்புகளையும் கொண்டிருப்பவர்களைக் குறிக்கிறது எனக் கொண்டு இவை போன்ற மறைநிலைச் சுட்டுப்பொருளையும் காட்டுகிறது என்பர்.

சசூர் என்ற அறிஞர் மொழிக்குறியீடுகளுக்குச் (சொல், தொடர் போன்றவை) சுட்டுப் பண்பு, மதிப்பு, பொருளடக்கம் என்ற 3 பண்புகள் உள்ளன எனவும், மொழிக்குறியீடுகள் எண்ணங்களைச் சுட்டுவதற்காகப் பயன்படுத்தப்படுவதால் சுட்டுப்பண்பு குறியீடுகளுக்கு வருகிறது எனவும், ஒரு குறியீடு பிறகுறியீடுகளோடு கொண்டிருக்கும் தொடர்பின் அடிப்படையில் குறீயீடுகளுக்கு மதிப்பு வருகிறது எனவும், சுட்டுப் பண்பும், மதிப்பும் இணைவதன் வாயிலாகக் குறியீடுகளின் பொருளடக்கம் பெறப்படும் எனவும் விளக்குவார்.

சொற்களுக்குத் தருக்கப்பொருள், உணர்வுப்பொருள் என்ற இருவகையான பொருள்கள் உள்ளன என உல்மன் என்ற அறிஞர்

விளக்குவார். எண்ணங்களைச் சுட்டுகின்ற தன்மையால், எண்ணங்களுக்கும் சொற்களுக்கும் இடையிலான உறவால் சொற்கள் தருக்கப் பொருளைப் பெறுகின்றன எனவும், இது சொற்களின் இயல்புப் பொருள் எனவும், சொற்களைப் பயன்டுத்துபவரின் உணர்ச்சிகளை வெளிப்படுத்தும் பண்பின் காரணமாகச் சொற்கள் உணர்வுப் பொருளைப் பெறுகின்றன எனவும், இதை மாந்தர் பொருள் எனவும் விளக்கினார். 'பெண்கள், மகளிர்' என்ற இரு சொற்களும் ஒரே தருக்கப் பொருளை, அதாவது 'மானிட இனத்துப் பெண்பால் நபர்கள்' என்ற தருக்கப் பொருளைப் பெற்றிருந்தாலும், உணர்வு அடிப்படையில் 'மகளிர்' என்ற சொல் உயர் மதிப்பைக் கொண்டதாகவும், பெண்கள் என்ற சொல் சாதாரணச் சொல்லாகவும் இருப்பதைக் கொண்டு அவை வேறுபட்ட உணர்ச்சிப் பொருள்களைக் கொண்டவை எனலாம். சொற்களின் உணர்வுப் பொருளைக் கண்டு கொள்வதற்காக ஆஸ்குட், டேனன்பாம் என்பவர்கள் 'பொருண்மை காணும் கருவி' (Semantic differential) என்ற ஒரு கருவியை வடிவமைத்தனர். உணர்வால் நிலைநாட்டப்படும் பண்புகளான நல்ல, கெட்ட, அன்பு: கடுமை, கோபம் : மகிழ்ச்சி போன்ற பண்புகளின் அளவைகளைக் குறிக்கின்ற ஒரு அளவுகோல் கொண்ட பட்டியலை அவர்கள் வடிவமைத்தனர். இதை Semantic device என்றனர். இந்தப் பட்டியலை வெவ்வேறு மக்களிடம் கொடுத்து, ஒரு 'சொல்லை', அதாவது அதன் உணர்வுப் பொருளைக் காணவிரும்பும் ஒரு சொல்லை முதலில் வழங்கி, அச்சொல் எத்தகைய உணர்வை மக்களிடம் ஏற்படுத்துகிறதோ அந்த உணர்வைக் கொடுக்கப்பட்ட பட்டியலில் காணப்படும் பண்போடு பொருத்தி அப்பண்பை குறியிடச் செய்து நிரப்பிப் பெற்றனர். இந்தப் பட்டியல் படிவத்தைப் பலரிடமிருந்து தரவாகப் பெற்று, அவைகளில் ஒரு சொல் எத்தகைய பண்புகளை மக்களிடம் எழுப்பியது என்பதைப் புள்ளியியல் ஆய்வுக்கு உட்படுத்தி, அதன் மூலம் ஒரு சொல்லின் 'உணர்வுப் பொருளைக் காணமுடியும்' என நிறுவினர். இதன்படி 'அம்மா' என்ற சொல் 'மிக நல்லவர்', மிக்க அன்புமிக்கவர்', 'மிக மென்மையானவர்' என்ற பண்புகளை மனத்தில் தரக்கூடும். இவ்வாறு சொற்கள் எழுப்பும் மன உணர்வுகளைப் 'பண்புப் பட்டியல் நிரப்பல்' என்ற வழிமுறையின் வாயிலாக நிறுவலாம் என வெளிப்படையாக விளக்கினர்.

தருக்கப் பொருட்களில் அதாவது, சுட்டுப் பொருளில், மனத்தில் நிலைபெறும் எண்ணங்களையோ, அவ்வெண்ணங்கள் எழுப்புகின்ற புல உலகப் பொருட்களையோ சுட்டுகின்ற

தன்மையால் சொற்கள் பெறும் சுட்டுப்பொருள் ஒருவகை எனவும் (மனிதன்=மானிட இன ஆண்பால்), பிற சொற்களைச் சுட்டுகின்ற பண்பால் வரும் சுட்டுப்பொருள் மற்றொருவகை எனவும் கொள்வர். மனிதன், ராமன் அந்த நண்பன் போன்ற சொற்களை 'அவன்' என்ற இடப்பெயரால் குறிக்கலாம். ஆகவே 'அவன்' என்பதன் சுட்டுப் பொருளாக இச் சொற்களைக் காட்டலாம். ஆகவே இவைகளைச் 'சொல் என்ற சுட்டுப்பொருள்' எனக் கருதலாம்.

பொருளைச் சுட்டுகின்ற கூறுகளின் அடிப்படையிலும் பொருட்களை, சொற்பொருள், தொடர் பொருள், உரைக்கோவைப் பொருள், மரபுத் தொடர் பொருள் எனப் பிரிக்கலாம். சொல்லுக்கு வழங்கப்படும் இயல்புப் பொருளைச் சொற்பொருள் எனவும் (மரம்), சொற்களின் பொருளை இணைத்து அதனால் தொடருக்கு வழங்கப்படும் பொருளைத் 'தொடர் பொருள்' எனவும், (மரம் விழுந்தது), தொடர்களின் பொருளை இணைத்து அதனால் உரைக்கோவைகளுக்கு வழங்கப்படும் பொருளை 'உரைக்கோவைப் பொருள்' எனவும், மரபுத் தொடர்களுக்கு நிரந்தரமாக வழங்கப்படும் பொருளை 'மரபுத்தொடர்ப் பொருள்' எனவும் (கைநாட்டு, இது கையை நிலைநாட்டுதல் என்பதைக் குறிக்காமல், 'கை ஒப்பம்' என்ற நிரந்தரப் பொருளைக் குறிக்கிறது. ஆகவே மரபுத் தொடரின் பொருளை அத்தொடரில் காணப்படும் சொற்களின் பொருள்களை ஒருங்கிணைப்பதன் மூலம் பெறமுடியாது), சில கூறுகள் சில கூறுகளோடு மட்டும் இணைந்து வரும் தன்மையால் பெறுகின்ற பொருளை 'இணைவுப் பொருள்' (Collocational Meaning) எனவும் வகைப்படுத்தலாம். 'ஊசிய' என்ற பெயரடை 'பண்டம்' என்ற இணைவுப் பொருளையும், 'அழுகிய' என்ற பெயரடை 'முட்டை' என்ற இணைவுப் பொருளையும் காட்டுகின்றன. இவ்விரண்டு சொற்களின் தருக்கப் பொருள் ஒன்றேயாகும் (கெட்டுப்போன).

லீச் என்ற அறிஞர் சொற்கள், தொடர்கள் போன்றவற்றின் பொருள்களை உரிய வகையில் வரையறை செய்து விளக்கியுள்ளார். ஒரு சொல் சுட்டுகின்ற இயல்பான பொருளைச் 'சுட்டுப்பொருள்' (Conceptual Meaning) எனவும், (அப்பா), சமுதாயத்தையும், மனத்தையும் அடிப்படையாகக் கொண்டு நம் மனத்தில் ஒரு சொல் எழுப்புகின்ற உணர்வுகளை 'உணர்வுப்பொருள்' எனவும் (பெண்=புடவை கட்டுபவள்), வெவ்வேறு நடை உணர்வுகளையும் பண்புகளையும் காட்டுகின்ற சொற்பொருளை 'நடையியல் பொருள்' (Stylistic Meaning) எனவும் (சாவு:மரி) நம்மிடையே

செய்கை மாற்றங்களை ஏற்படுத்தும் தன்மையிலான சொற்பொருட்களைத் 'தாக்கப் பொருள்' (Affective Meaning) எனவும் (கழுதை), நமது மனத்தில் கிளர்ச்சி உணர்வை ஏற்படுத்தும் பொருட்களைக் 'கிளர்ச்சிப் பொருள்' (Reflected Meaning) எனவும் (கோழி=பெண்ணின் பின்னால் செல்பவன்), பிற சொற்பொருளோடு மட்டும் இணையும் தன்மையைக் காட்டும் பொருட்களை 'இணைவுப் பொருள்' (Collocational Meaning) எனவும் (கெட்ட மாணவன், ஊசிய வடை, அழுகிய பழம் போன்றவை), பல வகையான பொருட்களை நம் மனத்தில் ஏற்படுத்தும் சொற்பொருளைச் 'சேர்க்கைப் பொருள்' (Associative Meaning) எனவும் (தேர்தல்=ஓட்டு, பிரச்சாரம், வெற்றி, தோல்வி, ஊர்வலம்), தொடரில் ஒரு பொருள் முன்னிலைப் படுத்தப்படுவதன் அடிப்படையில் மதிப்பைப் பெறும் சொற்பொருளைக் 'கருப்பொருள்' (Thematic meaning) எனவும் (மனைவி, அவள் சொல்லே மந்திரம்) எதைச் சுட்டிக்காட்டவேண்டும் என ஒருவர் நினைக்கிறாரோ அதை 'மனவிழைவுப் பொருள்' (intended meaning) எனவும் (உடனடியாக கல்யாணம் பண்ணணும் என்றால் காசு வேண்டாமா?= கல்யாணத்தை ஒத்திபோடு), கேட்பவர் எதைப் புரிந்து கொள்கிறாரோ அதை 'மனம் பெறுபொருள்' (interpreted meaning) எனவும் (கல்யாணம் பண்ணக் காசுவேண்டாமா?= பேசுபவருக்குக் கல்யாணம் பண்ண விருப்பமில்லை) லீச் என்பவர் வகைப்படுத்துவார். லீச் என்பாருடைய பொருள் வகைப்பாட்டில், மொழிக் கூறுகள், பேசுபவர்கள், அவர்களின் மனப்பாங்கு, தொடரில் சொல் பெறும் நிலை, தொடரில் சொல் பிற சொற்களோடு கொண்டிருக்கும் உறவு ஆகிய பல பண்புகளைக் கருத்திற்கொண்டு பொருள் வகைப்பாடு செய்யப்பட்டுள்ளது என்பது தெளிவாகிறது.

மேற்கூறிய பொருள் வகைப்பாடுகளைப் பொதுமைப் படுத்தும் போது, சுட்டல் பொருள்(சொல்) உணர்வுப் பொருள், (மனம்), பிரதிபலிப்புப்பொருள் (சமுதாயம்) ஆகிய 3 வகையான பொருட்கள் உள்ளன என விளக்கலாம். மொழிக்கூறுகளின் பொருள் மறைநிலையில் உள்ளது என்பது எல்லோராலும் ஏற்றுக்கொள்ளப் பட்டாலும், பொருண்மையியலார் அதை வெளிப்படையாக வரையறை செய்து, வகைப்பாடு செய்ய முயன்ற முயற்சி பொருண்மையியலாரின் அறிவியல் சார்புத் தன்மையை வெளிக்காட்டுகிறது.

மொழிக் கூறுகளின் பொருளை வெளிப்படையாக்கிக் காட்டுவதற்கு, பொருண்மை சார்ந்த உறவுகளைக் காட்டுகின்ற

சொற்களைச் சுட்டிக்காட்டுவது மரபாக ஏற்றுக் கொள்ளப்பட்ட வழிமுறையாகும். அகராதிகளிலும் ஒரு சொல்லின் பொருளை விளக்க, அதே மொழியிலிருந்தும், அயல் மொழிகளிலிருந்தும் வேறு நிகரான சொற்களையும், தொடர்களையும், அந்தச் சொல் சுட்டுகின்ற புற உலகப் பொருளின் படத்தையும் சுட்டிக்காட்டுவது மரபாக உள்ளது. எனவே ஒரு சொல்லின் பொருளை நேரடியாகக் காட்ட முடியாது எனவும், வேறொரு சொல்லை வழங்கி, அந்தச் சொல்லும் முன்குறிப்பிட்ட சொல்லும் பொருளில் ஒன்றானவை அல்லது எதிர்நிலையில் நிற்பவை எனக்காட்டிச் சொல்லின் பொருளை உணரவைக்கலாம் எனவும் கூறுகிறோம். எனவே ஒரு சொல்லின் பொருளை வெளிக்காட்ட, பொருண்மை அடிப்படையில் தொடர்புள்ள பிறசொற்களைச் சுட்டிக் காட்டுகிறோம். ஒரு சொல்லோடு பொருளால் தொடர்புறும் பிற சொற்கள் உள்ளன என்பது இலக்கணத்தாராலும், அகராதியியலாராலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட உண்மை. அத்தகைய தொடர்புடைய சொற்களை நிகர்நிலைச் சொற்கள் (வருடம் : ஆண்டு), எதிர்நிலைச் சொற்கள் (ஆண் : பெண்), பொருள் உட்கோடல் சொற்கள் (பூ : மல்லிகை), ஒப்புருச் சொற்கள் (ஆறு=எண், ஆறு=நீரோடும் இடம்)பல் பொருட்சொற்கள் (முடி=தலைமுடி, கிரீடம்) என வகைப்படுத்தலாம்.

இரண்டு சொற்கள் ஒரே பொருளைக் குறிக்கும் போது அவை நிகர்நிலைச் சொற்கள் ஆகின்றன. அவைகளை ஒரு பொருட் பன்மொழி எனத் தமிழ் மரபு இலக்கணத்தார் குறிப்பர். அவைகளை இனம்காணத் தருக்க வழிமுறைகள் பயன்படுத்தப்படுகின்றன. இரண்டு சொற்கள் இருவழிக் குறிப்பு உறவைக் கொண்டிருந்தால், அதாவது ஒன்றைக் கூறினால் மற்றொன்றும், மற்றொன்றைக் கூறினால் முதலில் சொன்ன ஒன்றும் உணரப்படும் வகையில் இருந்தால் அச்சொற்களை நிகர்நிலைச் சொற்கள் எனலாம். 'அவர் ஆசிரியர்' என்றால் 'அவர் வாத்தியார்' எனவும், 'அவர் வாத்தியார்' என்றால் 'அவர் ஆசிரியர்' எனவும் உணரப்படுகின்றன. ஆகவே ஆசிரியர், வாத்தியார் என்ற சொற்கள் இருவழிக் குறிப்பு உணர்த்தும் தன்மை கொண்டவை. ஆகவே அவை நிகர்நிலைச் சொற்கள் ($A \rightleftarrows B$).

எதிரான பொருள் காட்டும் சொற்கள் எதிர்நிலைச் சொற்கள் எனப்படும். ஒரு சொல்லை உள்ளது எனக் கூறுகையில், மற்றொன்று இல்லை எனக் குறிப்பால் உணர்த்தப்பட்டால் அத்தகைய தன்மையுள்ள சொற்களை எதிர்மறைச் சொற்கள் என

உணரலாம் என்று தருக்க அடிப்படையில் எதிர்மறைச் சொற்களை நிலைநாட்டலாம். ‘அந்தக் குழந்தை ஆண்’ என்று சொன்னால் ‘அந்தக் குழந்தை பெண் அல்ல’ என்பது உணரப்படுகிறது. ‘அந்தக் குழந்தை பெண் அல்ல’ என்று கூறினால் ‘அந்தக் குழந்தை ஆண்’ என உணரப்படுகிறது. எனவே ‘ஆண் : பெண்’ என்ற சொற்கள் எதிர்மறைச் சொற்கள் எனலாம்.

எதிர்நிலைச் சொற்களை அவைகளின் ‘குறிப்பால் உணர்த்தல்’ என்ற பண்பின் அடிப்படையில் இருமுனை, பன்முனை, உறவுநிலை எதிர்ச்சொற்கள் என லையன்ஸ் என்பார் வகைப் படுத்துவார். $A \rightleftarrows B$ Not B என்ற இருவழிக் குறிப்பு உணர்த்தல் வகையில்

தோன்றும் A,B என்ற கூறுகளை இருமுனை எதிர்ச்சொற்கள் எனவும் (ஆண் : பெண் அது ஆண் > அது பெண் அல்ல; அது பெண், அல்ல > அது ஆண்), $A \rightarrow$ Not B/Not C என்ற உறவில் நிற்கும் A, B,C என்பவைகளைப் பன்முனை எதிர்நிலை காட்டுவன எனவும் (உயர்ந்த : தாழ்ந்த; அவன் உயர்ந்தவன் > அவன் தாழ்ந்தவன் அல்ல), அவன் நடுத்தரத்தவன் அல்ல) $X \xrightarrow{A} Y > Y \xrightarrow{B} X$

என்ற உணர்த்தல் உறவில் நிற்கும் A, B என்பவைகளைச் செயல்முனை எதிர்மறைச் சொற்கள் எனவும் (கணவன்:மனைவி, கொடு : வாங்கு ; ராமன் சீதையின் கணவன் > சீதை ராமனின் மனைவி, ராமன் சீதைக்குப் பூக் கொடுத்தான் > சீதை ராமனிடமிருந்து பூ வாங்கினாள்) வகைப்படுத்தலாம்.

பொருள் உட்கோடல் சொற்களில், ஒரு சொல்லின் கீழ் மற்றொரு சொல் பொருண்மை அடிப்படையில் அங்கமாக வரும். பரந்த பொருளைக் கொண்டதும் தன் கீழ்க் குறுகிய பொருள் கொண்ட சொற்களை அடக்குகின்ற (உட்கொள்ளுகின்ற) சொற்களை ‘அடக்கும் சொல்’ அல்லது ‘உட்கொள்ளும் சொல்’ எனவும், குறுகிய பொருளைக் கொண்டதும் பிற பரந்துபட்ட பொருளைக் கொண்ட சொல்லின் கீழ் அடங்கிவரும் சொல்லை ‘அடங்கும் சொல்’ எனவும் ‘உட்கொள்ளப்படும் சொல்’ எனவும் கருதலாம். இவ்விரண்டு சொற்களையும் ஒருவழிக் குறிப்புணர்த்தல் என்ற தருக்க வழிமுறையால் இனங்கண்டு கொள்ளலாம். $X > Y$, $Y \not> X$ என்ற உறவைக் காட்டும் சொற்கள் ‘உட்கோடல் சொற்கள்’ எனப்படும். கறுப்பு:நிறம் என்ற சொற்கள் உட்கோடல் உறவில் நிற்பன. ‘அது கறுப்பு’ எனக் கூறினால் ‘அது நிறம்’ என்பதைக் குறிப்பால் உணரலாம். ஆனால் ‘அது நிறம்’ எனக் கூறினால் அதிலிருந்து ‘அது கறுப்பு’ என்பதைப் பெறமுடியாது.

(கறுப்பு>நிறம், நிறம் ≯ கறுப்பு). உட்கொள்ளும் சொல் ஒன்றின் கீழ்ப் பல உட்கொள்ளப்படும் சொற்கள் வரலாம். (நிறம் கறுப்பு, வெள்ளை, பச்சை, சிவப்பு, நீலம்). இத்தகைய பல உட்கொள்ளப் படும் சொற்களை, incompatible சொற்கள் எனவும், அவைகளின் இடையிலான எதிர்நிலை உறவை incompatibility (அடங்கு எதிர்நிலை) எனவும் அழைப்பர்.

பொருள் உட்கோடல் என்பது பொருண்மையடிப்படையில் சொற்கள் ஒன்றின் கீழ் மற்றொன்று வருவதைச் சுட்டிக்காட்ட உதவும் உறவு எனப்பொதுவாக விளக்கப்பட்டாலும், அதில் சினை-முதல், வகை-முதல் என்ற உறவுகளும் உள்ளன என விளக்கப்படும். விரல் : கை, முடி : தலை, சுவர் : வீடு என்ற சொற்கள் சினை : முதல் உறவையும், சட்டை : உடை, சுண்டுவிரல் : விரல், பருப்பு : மளிகை போன்ற சொற்கள் 'வகை-முதல்' (Kind of) உறவையும் காட்டுகின்றன என விளக்கப்படும். பொருள் உட்கோடல் உறவின் அடிப்படையில் பெரும் பொருட் பரப்பைக் கொண்ட சொற்களின் உள்ளே படிப்படியாகச் சிறிய பொருட் பரப்பைக் கொண்ட சொற்களை அடக்கிப் பொருண்மை சார்ந்த படிநிலை அமைப்பை அல்லது கிளைநிலை அமைப்பை உருவாக்கலாம். 'தெசாரஸ்' என்ற வகை அகராதிகள் பொருள் உட்கோடல் உறவை முதன்மை உறவாகக் கொண்டு தொகுக்கப்படுகின்றன எனலாம்.

சொற்கள் பிற சொற்களோடு இணைவதன் மூலம் அவைகளின் பொருட்களில் திரிபு ஏற்படுகிறது. இதனால் சொற்கள் பல தொடர்பான பொருட்களைக் காட்டுகின்ற நிலை ஏற்படும். இத்தகைய பல பொருட்களைக் காட்டும் சொற்களைப் பல பொருள் ஒருமொழி என அழைப்பர். ஒரு சொல்லின் திரிபுப் பொருட்களை மொழிபெயர்த்தல் செயலின் உதவியால் வேறுபடுத்திக் காட்ட இயலும். 'வடி' என்ற சொல் drop எனவும் (கண்ணீர் வடி) filter எனவும் (எண்ணெய்யை வடி), flow எனவும் (வாய்க்காலில் நீர் வடிகிறது) எனவும் மொழிபெயர்க்கப் படுகிறது. பொருள் திரிபுகளுக்குச் சொற்கள் தோன்றுகின்ற அமைப்புச் சூழலும் மொழி பயன்படும் சமுதாயச் சூழலும் காரணமாக அமைகின்றன.

வேறுபட்ட பொருள் கொண்ட வெவ்வேறு சொற்கள் தங்கள் வரி, ஒலி வடிவங்களில் ஒன்றுபட்டு நிற்கும் நிலையால், 'ஒப்புருச் சொற்கள்' (Homonyms) உருவாகின்றன. இவை பொருள்மயக்கம் தரும் சொற்கள் எனவும், இவை இயல்பாகவும், மொழியில் ஏற்படும் ஒலிமாற்றம், பொருள் மாற்றம்

என்பவைகளாலும் பிறமொழிக் கூறுகளைக் கடனாகப் பெறுவதன் வாயிலாகவும் உருவாகின்றன எனலாம் (படி: Read புத்தகத்தைப் படி, a measure ஒரு படி அரிசி, ஏணிப்படியில் தூசு உள்ளது). ஒப்புருச் சொற்களின் பல்வேறு பொருட்களை மொழிபெயர்த்தல் என்ற செயல் மூலம் இனம் காண முடியும். இவை அகராதியில் வெவ்வேறு சொற்களாகக் காட்டப்படும். தொடர்கள் வடிவத்தில் ஒன்றுபட்டிருந்தால் அவைகளை மயக்கத் தொடர்கள் என்பர். இவைகளின் பொருள் மயக்கத்தைத் தவிர்த்து உரிய பொருளைப் பெறுவதற்குத் தொடர்கள் தோன்றும் சூழலை உற்று நோக்க வேண்டும். ஒப்புருத் தொடர்களின் பொருள் மயக்கம் அவைகளில் தோன்றும் சொற்களாலும், இலக்கணக் கட்டமைப்பாலும் (பழைய மாணவர் விடுதி) அவை தொடர் மாற்றத்திற்கு உட்பட்டு வருவதனாலும் (புலி கொல் யானை) எழலாம் எனத் தொடரியலார் விளக்குவர்.

பொருண்மையை அடிப்படையாகக் கொண்டு, பொருண்மை உறவின் பல வகைகளை வெளிப்படுத்தி நிற்கும் பலவகைக் கூறுகள் மொழியில் உள்ளன. தொடர்நிலையில் நிற்கும் சொற்கள் பொருண்மை அடிப்படையில் சில கட்டுப்பாடுகளுக்கு உள்ளாகி, சில தொடர்களை மட்டும் ஏற்றுக் கொள்ளப்படும் தொடர்களாகக் கருத வழிவகுக்கின்றன. இத்தகைய தொடர்நிலைச் சொற்களின் பொருண்மை உறவைக் 'குரைக்கும் நாய், பிளிறும் யானை, கூவும் குயில்' போன்ற தொடர்கள் காட்டுகின்றன. குரைக்கும் குயில் என்ற சொற்கள் பொருண்மை இணக்கமற்றவை எனவும் விளக்கப்படும். தொடர்நிலைப் பொருண்மை இணக்க உறவை Collocation என ஆங்கிலத்தில் அழைப்பர்.

மொழிச் சொற்களின் பொருள் என்பது சொற்கள் சுட்டுகின்ற எண்ணம் எனக் கொண்டால், அதில் நுண் கூறுகள் இருப்பதையும் 'கண்டுகொள்ளலாம் என்ற கருதுகோளை அடிப்படையாகக் கெண்டு 'பொருண்மை நுண் கூறுகள்' குறித்த ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டன. எவ்வாறு ஒலிகளில் நுண் ஒலிப்புக்கூறுகள் உள்ளன என நிறுவப்பட்டதோ, அதைப்போன்று சொற்பொருளில் பொருண்மை நுண்கூறுகள் இருப்பதை நிறுவலாம் எனக் கருதி, பொருளில் தொடர்புடைய பல சொற்களை ஒப்பிட்டு factor analysis என்ற கணிதவியல் நெறிமுறையில் factorsகளைக் காண்பது போன்று பொருண்மை நுண்கூறுகளை நிறுவலாம் எனக் கருதப்பட்டது.

சேவல், பெட்டை, குஞ்சு, மகன், மகள், மகவு, காளை, பசு, கன்று, அரசன், அரசி, இளவரசன், இளவரசி, அப்பா, அம்மா,

பெற்றோர் என்ற சொற்களின் பொருள்களை உற்றுநோக்கி ஒப்பிடும்போது ஆண், பெண் என்ற நுண்கூறுகள் இவைகளை வேறுபடுத்துவதைக் கண்டு இவற்றைப் பொருள் நுண்கூறுகள் என்றனர். சேவல் என்பதை ஆண்கோழி எனவும், பெட்டை என்பதைப் பெண் கோழி எனவும், குஞ்சு என்பதை இளம் கோழி எனவும் கருதலாம். இவ்வாறு ஆய்வு செய்வதன் வாயிலாக, பொருளில் தொடர்புடைய சொற்களை ஒப்பிடத்தகுந்த, பட்டியல் வடிவில் நிறுத்தி அவைகளின் பொருளில் உள்ளடங்கும் நுண்கூறுகளைக் கண்டு கொள்ளலாம் என நிலைநாட்டப்பட்டது.

| | -இளமை | -இளமை | +இளமை | +இளமை |
|---|---|---|---|---|
| +இனம் | +ஆண் | +பெண் | +ஆண் | +பெண் |
| கோழி | சேவல் | பெட்டை | குஞ்சு | குஞ்சு |
| மகவு | மகன் | மகள் | மகவு | மகவு |
| மாடு | காளை | பசு | கன்று | கன்று |
| அரசு | அரசன் | அரசி | இளவரசன் | இளவரசி |
| பெற்றோர் | அப்பா | அம்மா | -- | -- |

இப்பட்டியலின்படி, 'சேவல்' என்ற சொல் (+கோழி + ஆண்-இளமை) என்ற நுண் கூறுகளையும் 'பெட்டை' என்ற சொல் (+கோழி - ஆண் - இளமை) என்ற நுண் கூறுகளையும் கொண்டவை எனப் பெறமுடியும். இந்தப் பொருண்மை நுண் கூறுகளின் ஆராய்ச்சி வாயிலாக, அவைகளைக் கண்டறிந்ததோடு நுண்கூறுகளை வகைப்படுத்தல், பொருண்மை உறவுகளை விளக்குதல் ஆகிய செயற்பாடுகளும் நிகழ்ந்தன.

பொருண்மை நுண்கூறுகளில் சிலவற்றின் உதவியால் பல பொதுவான நுண் கூறுகளை உணரமுடியும். 'கோழி' என்ற சொல்லின் உதவியால் அது ஓர் உயிரினம் எனவும், எண்ணக்கூடிய உயிரினம் எனவும், அது பெயர்ச்சொல் எனவும் உணரப்படும். இத்தகைய கூறுகளை 'மிகை நுண்கூறுகள்' (Redundant features) எனவும், இவைகளைக் காண மிகை விதிகளையும் உருவாக்கினர். பொதுவாக நுண்கூறுகளில் பொது அல்லது மிகை நுண்கூறுகள், சுட்டல் நுண்கூறுகள் (Sem.features), பிரித்தல் நுண்கூறுகள் (distinguishers), தொகுப்பு நுண் கூறுகள் (Selectional features) என்ற வகைகள் விளக்கப்பட்டன.

சுட்டல் நுண்கூறுகள் சொல்லின் பொருளை அறியவும், பிரித்தல் நுண்கூறுகள் சொல்லின் பொருளை வேறுபடுத்தவும், தொகுப்பு நுண்கூறுகள் சொல்லின் பொருளோடு இணங்கிவரும் வேறு சொற்களின் பண்புகளை வெளியிடவும் உதவுகின்றன. 'குடி'

என்ற வினையின் பொருள் நுண்கூறுகளைக் கொண்டு இதை விளக்கலாம்.

குடி = + வினை 1
+ செயப்படுபொருள் குன்றா வினை 2
+ உடற்செயல் 3
+ உட்கொள்ளுதல் 4
+ — திரவம் 5

இதில் 3 என்ற நுண்கூறு தொகுப்பு அல்லது சுட்டு நுண்கூறு எனவும், உட்கொள்ளுதல் என்பதைப் பிரிப்பு நுண்கூறு எனவும், '— திரவம்' என்பதைத் தொகுப்பு நுண்கூறு எனவும் கொள்ளலாம்.

பொருண்மை நுண்கூறுகள் எதிர்நிலை மதிப்பைக் கொண்டவை எனவும், இரட்டை மதிப்பைப் பெற்றவை எனவும் (+, -), அளவை மதிப்பைக் கொண்டவை (1,2,3) எனவும், கிளை வடிவ அமைப்பைக் காட்டுபவை எனவும் பொருண்மையியலார் விளக்குவர். 'மாணவன், மாணவி' என்ற சொற்கள் +ஆண், -ஆண் என்ற பால் அடிப்படையிலான இரட்டை மதிப்பைக் கொண்டவை - தங்கம், வெள்ளி, பித்தளை என்ற சொற்கள் + உலோகம் 1 + உலோகம் 2+ உலோகம் 3 என்ற அளவை மதிப்பைக் கொண்ட நுண்கூறுகளால் ஆனவை. 'கொல்' என்ற வினையில் + காரணமாயிரு + உயிர் + இல்லை+ ஆகு' என்ற நுண்கூறுகள் கிளையமைப்பில் உள்ளன என விளக்குவர்.

கொல் = + காரணமாயிரு A, B
|
+ ஆகு
+ இல்லாமல்
+ உயிர்

'ராமன் பல்லியைக் கொன்றான்' என்ற தொடரின் பொருளில் காணப்படும் நுண்கூறு படிநிலை அமைப்பைப் பின்வருமாறு காட்டலாம்.

பல்லி உயிர் இல்லாமல் ஆகு செய் ராமன்

பொருண்மை நுண்கூறுகள் சொற்களின் பொருண்மை உறவை விளக்கவும் பயன்படுகின்றன. பலவகை நுண்கூறு தொகுதியைக் காட்டும் சொல்லை, பல பொருள் ஒரு சொல்

எனவும், ஒரே வகை நுண்கூறு தொகுதியைக் காட்டும் சொற்களை ஒரு பொருட் பன்மொழி எனவும், எதிர்மதிப்பு கொண்ட நுண்கூறுகளில் ஒன்றைப் பெற்றிருக்கும் சொற்கள் எதிர்நிலைச் சொற்கள் எனவும், பொது மற்றும் சிறப்பு நுண்கூறுகளைப் பெற்ற சொற்கள் உட்கோடல் சொற்கள் எனவும் விளக்கப்படும்.

சொற்பொருள்கள் பல நுண் கூறுகளைக் கொண்டு விளங்குகின்றன என நிறுவியதைப் போன்று, பல சொற்களின் பொருள்கள் தொடர்புற்றுத் தொகுதியாக நின்று பெரும் பொருட் பரப்பையும் பொருட்களங்களையும் உருவாக்குகின்றன என விளக்க முயன்றனர். பல சொற்கள் பொருளடிப்படையில் தொடர்புற்று நிற்பதைச் 'சொற்களம்', 'சொல்வலைப் பின்னல்' என அழைத்தனர். சொற்களமும், பொருட்களமும் எத்தகைய உறவுகளின் அடிப்படையில் தொகுதியாக உருவெடுக்கின்றன என்பதை வெளிப்படையாகப் பொருண்மையியலார் சுட்டிக் காட்டினர். இதைப் பொருண்மைத் தொகுப்பாய்வு என விளக்கினர்.

ஒலி, இலக்கணம், பொருண்மை அடிப்படையில் சொற்கள் தொடர்புற்றுச் சொற்களங்கள் உருவாகின்றன என விளக்கப்பட்டது. படம், மடம், தடம், இடம், அடம், கடம் என்ற சொற்களைக் கொண்ட சொற்தொகுப்புகள் ஒலியடிப்படையில் தொடர்புறுவதால் வருகின்றன எனவும், 'பார், பார்த்தல், பார்வை, பார்த்த, பார்க்காத, பார்க்கிற, பார்க்கும், பார்த்து, பார்க்காமல், எட்டிப்பார், உற்றுப்பார், நேராகப் பார், மறைவாகப் பார்' போன்ற சொற்களால் ஆன தொகுப்புகள் இலக்கண அடிப்படையில் உருவாகின்றன எனவும், 'பார், நோக்கு, கண், கண்ணடி, கண்பார்வை, கண்ணோட்டம், உளவுபார், போகப்பார்' போன்ற சொற்களைக் கொண்ட சொற்தொகுப்புகள் இலக்கண மற்றும் பொருண்மை அடிப்படையில் உருவாகின்றன எனவும் விளக்கப்பட்டன. ஒப்புருச்சொல், ஒருபொருட் பன்மொழி, பல பொருள் ஒரு மொழி, பொருள் உட்கோடல் சொற்கள், பொருள் எதிர்மறைச் சொற்கள் ஆகிய பொருண்மை உறவுச் சொற்கள் பொருட்களத்தின் உருவாக்கத்தில் பங்கெடுக்கின்றன எனவும் விளக்கினர். 'கண்' என்ற சொல்லோடு தொடர்புடைய பிறசொற்களும், அதை மையமாகக் கொண்ட பிற சொற்களாலான சொற்களமும் பின்வருமாறு :

கண் - பார், நோக்கு, கண்ணடி, கண்சிமிட்டு, கண்துடைப்பு, கண் எரிச்சல் (வினை) ; மாறுகண், தீக்கண், மாலைக் கண், (கண் ஈற்றில் வருதல்) கண்ணோட்டம், கண்ணீர், கண்வலி, கண்மை, கண்நோய், கண்கட்டி, கண்படு, கண்ணாமூச்சி (கண் முதலில் வருதல்);

மொழியின் சொற்களங்களைக் குறித்த ஆய்வில் உறவுமுறைச் சொற்கள், நிறச் சொற்கள், உயிரினங்களின் பெயர்கள், நோய்ப் பெயர்கள், சமையல் செயல்பாடுகள், உணவு வகைகள், கால நிலைகள், இடவகைகள் போன்றவை ஆராயப்பட்டன. சில பொருட்களங்களில் இடைவெளி இருப்பதையும், சில பொருட்களங்கள் உலகப்பொது நிலையில் உள்ளவை எனவும் நிலைநாட்டப்பட்டுள்ளன. உளவியலாரும், மனித மனத்தில் சொற்கள், சுட்டுப் பொருண்மை அடிப்படையிலும், அனுபவச்சூழல் அடிப்படையிலும் தொடர்புற்று நிற்பதை, வலைப்பின்னல் போன்று சொற்கள் நிற்பதைச் 'சொல் தொடர்புச் சோதனை' (Word Association Test) வாயிலாக நிறுவியுள்ளனர்.

சொற்கள் காலங்காலமாக மாறிவருவதை அடிப்படையாகக் கொண்டு, சொற்பொருளின் மாற்றங்களையும், அம் மாற்றங்களுக்குக் காரணமாக அமையும் உலகியல், உளவியல், சமுதாயவியல், அமைப்பியல் பண்புகளையும் விளக்குவர். சொற்பொருள் மாற்றத்தில் பொருள் ஒற்றுமை, பொருள் அண்மை, வடிவ ஒற்றுமை, வடிவ அண்மை போன்ற வழிகளில் ஏற்படும் மாற்ற வகைகளையும், பொருள் மாற்றம் காரணமாகப் பொருள் பொதுமையாதல், சிறப்பாதல், தோன்றல், திரிதல், கெடுதல், பொருள் உயர்வு நிலை அடைதல், தாழ்வு நிலை அடைதல் என்ற விளைவுகள் ஏற்படுவதையும் விளக்குவர். தருக்க அடிப்படையில் காரணம், விளைவு என்பவைகளை விளக்கிச் சொற்பொருள் மாற்றத்தை விளக்குகின்ற தன்மையால், சொற்பொருள் மாற்றம் குறித்த விளக்கங்களும் அறிவியல் சார்ந்த விளக்கங்களே எனலாம்.

பொருளைக் குறித்த விளக்கம், பொருள் வகைப்பாடு, பொருண்மை உறவுகள், பொருண்மை நுண்கூறுகள், பொருண்மைக் களங்கள், பொருண்மை மாற்றம் ஆகியனவற்றைக் குறித்த விளக்கங்களும், வகைப்பாடும் மறைந்து கிடக்கும் 'பொருள்' என்ற உண்மையை வெளிக்கொணரும் முயற்சியால் எழுந்தவை. ஒவ்வொரு வகை ஆய்வும் தருக்க நெறிமுறைகளைப் பின்பற்றியும், உளவியல் நெறிமுறைகளைப் பின்பற்றியும் மேற்கொள்ளப் பட்டதால், பொருண்மையியல் ஆய்வுகளை அறிவியல் சார்ந்த ஆய்வுகள் என நிறுவலாம்.

### சூழ்நிலைசார் பொருண்மை

நிலைப்பாட்டு வடிவம், செயல்பாட்டு வடிவம் என இரண்டுவடிவங்கள் மொழிக்கு உள்ளன. நிலைப்பாட்டு வடிவம் மனித மனத்திலும், செயல்பாட்டு வடிவம் பேசும்போதும் எழுதும்

போதும் தோன்றுகின்றன. செயல்பாட்டு வடிவமாக மொழி மாறும்போது, பேசுகின்ற, எழுதுகின்ற சூழலில், சில இலக்குகளை முன்னிறுத்தி, சில கருத்துக்களை வெளிப்படுத்தும் வகையில் மொழிக் கூறுகள், மொழி பேசுபவர்களால் பயன்படுத்தப் படுகின்றன. அப்போது, தொடர்கள் என இலக்கணத்தாரால் பெயரிடப்பட்ட இலக்கணக் கூறுகள் 'கூற்றுக்களாக' மாறுகின்றன. கூற்றுக்களைஅடிப்படையாகக் கொண்டு உரைகளும், உரை படைக்கும் செயல்களான சொற்பொழிவும் உரையாடலும் வடிவமைக்கப்படுகின்றன. தொடர்களைத் தொடர்ச்சியாக வெளியிடும் செயலாகிய சொற்பொழிதல், உரையாடுதல் என்பவை உரைக்கும் செயல்களாக மாறுகின்றன. கூற்றுக்களை, உண்மையான பேச்சு, எழுத்துச் சூழல்களில் பயன்பாட்டைப் பெறுகின்ற, அதாவது பேசப்படுகின்ற, எழுதப்படுகின்ற தொடர்கள் எனலாம். எவ்வாறு, மொழியைப் பயன்படுத்தும் நிலையில், பயன்படுத்தும் சூழலில் மொழிக்கூறுகளை மொழிபேசுபவர்கள் வெளியிடுகிறார்கள்? எத்தகைய பொருள்களை அவைகளுக்கு வழங்குகிறார்கள்? எவ்வாறு உரையை அமைப்பாக்கம் செய்கிறார்கள்? எவ்வாறு உரையாடலை நிகழ்த்துகிறார்கள்? என்பவைகளை விளக்கும் துறையைச் 'சூழல் பொருண்மையியல்' எனவும், 'செயற்பாட்டு மொழியியல்' எனவும் அழைக்கலாம். ஆங்கிலத்தில் இத்துறையை 'Pragmatics' என அழைப்பர்.

மொழியின் கூறுகளைப் பொதுவாக, குறியீடுகள் எனக் கொண்டு, அவைகளை விளக்கும் துறையைக் 'குறியீட்டியல்' (Semiotics) எனக் கொண்டு, குறியீட்டியலில் தொடரியல் (Syntax), பொருண்மையியல் (Semantics), சூழல் பொருண்மையியல் அல்லது 'செயற்பாட்டியல்' (Pragmatics) என்ற 3 பகுதிகள் அடங்கும் எனக் கொள்வர். குறியீடுகளின் தொடர்நிலை இலக்கண உறவை விளக்குவது தொடரியலின் குறிக்கோள் எனவும், குறியீடுகளுக்கும் புற உலகுக்கும் இடையிலான சுட்டல் உறவை விளக்குவது பொருண்மையியலின் குறிக்கோள் எனவும், குறியீடுகளுக்கும், அவைகளைப் பயன்படுத்தும் மாந்தருக்கும் இடையிலான சூழல் உறவை விளக்குவது 'செயல்பாட்டியலின் குறிக்கோள்' எனவும் குறியீட்டியலார் வரையறுப்பர்.

மொழியைப் பயன்படுத்தும்போது மொழியைப் பயன்படுத்துபவர்கள் முதன்மை நிலையிலும், மொழிக்கூறுகள் இரண்டாம் நிலையிலும் நிறுத்தப்படுகின்றன. மொழிபேசுபவர்கள் பேசும்போதும், எழுதும்போதும் மொழியைச் சூழல் வயமாக்குகின்றனர். சூழலை மொழி வயமாக்குகின்றனர். சூழலுக்கு

ஏற்ப, மாந்தருக்கு ஏற்ப மகிழ்ச்சியாகவோ, கோபமாகவோ, அனுதாபத்தோடோ, விறுவிறுப்பாகவோ, ஆவேசமாகவோ, புகழ்ந்தோ, இகழ்ந்தோ பேசுகின்றனர். மொழியைத் தக்கவாறு கையாண்டு சூழலை மாற்றியமைக்கின்றனர். முடங்கிக் கிடக்கும் மக்கள் இருக்கும் ஒரு சூழலை எழுச்சிமிக்க மக்களைக் கொண்ட சூழலாக மாற்றவும் மொழி பயன்படுகிறது.

மொழி பயன்படுத்தப்படும் சூழலில், மாந்தர் ஈடுபடும் கருத்துப் பரிமாற்ற செயல்களில் மொழியின் இயல்பான கூறுகள் பயன்படுத்தப்பட்டாலும், பேசுபவர், பேசுமிடம், காலம், இடம், பேசிய பேச்சு, பேசுபவர்- கேட்பவர்களின் மதிப்பு இவைகளினடிப் படையில் சில கூறுகளுக்குப் பொருள் வழங்கப்படுகிறது. சில கூறுகளின் சுட்டுப் பெருள்களைப் பேச்சுச் சூழலைக் கவனிப்பதன் மூலம்தான் வழங்க முடியும். இவைகளைச் 'சூழல் சார் சுட்டுப்பொருள் பெறும் கூறுகள்' (Deictic Categories) என அழைப்பர். மூவிடப்பெயர்கள் (நான், நீ, அவன்), காலங்காட்டும் கூறுகள் (நேற்று, இன்று, நாளை), சுட்டுக்கூறுகள் (இந்த, அந்த), இடம்காட்டும் கூறுகள் (இங்கு, அங்கு, எதிரே) உரைசுட்டுக் கூறுகள் (இது, அது), விளிப்புக் கூறுகள் (அம்மா, அப்பா, அக்கா, டேய், லேய்,டீ) ஆகியன குறிக்கின்ற புற உலகப் பொருள்களையும், மொழியகக் கூறுகளையும் உணரப் பேச்சுச் சூழல் தேவைப்படுகிறது.

'நான் நேற்று அங்கிருந்து திரும்பி வந்தேன்'.

இத்தொடரில் 'நான்', 'நேற்று', 'அங்கிருந்து' போன்ற கூறுகளுக்குப் பொருள் வழங்க வேண்டு மென்றால் பேச்சுச்சூழலை உற்றுநோக்கி, பேசுபவர் யார், எப்போது பேசினார், எங்கு நின்று பேசினார் என்பவை தெரிந்தால்தான் உரியபொருளை வழங்க முடியும். இவ்வாறு பேச்சுச்சூழலை வைத்தே பொருள் வழங்குவதற்கு ஏதுவான பண்பைக் கொண்ட கூறுகளை விளக்குவது 'செயற்பாட்டியலின்' இலக்காகக் கருதப்படுகிறது.

மொழியைச் செயல்படுத்தும் போது மொழியைப் பயன்படுத்துபவர்கள் கூற்றுக்களைக் கூறுகின்றனர். இந்தச் செயலில் 3 செயல்கள் அடங்குகின்றன. கூற்றின் வடிவத்தை வெளியிடுதல், உள்நோக்கம் வெளியிடுதல், பிறரிடமிருந்து தகுந்த விளைவுகளை எதிர்பார்த்தல் என்பன. இந்த மூவகைச் செயல்களைப் 'பேச்சுச் செயல்' எனலாம். உள்நோக்கம் வெளியிடுதல் என்பதைப் பேசுபவரின் குறிக்கோள் எனவும் கருதலாம். இதை உள்நோக்கப் பொருள் எனக் கருதி, இது

கூற்றுக்களின் இயல்புப் பொருளல்லாத பிறிதொரு பொருள் எனவும், இது பேசுபவரின் பொருள் எனவும், இது பேச்சுச் சூழலிலிருந்து பெறப்படும் பொருள் எனவும் நிலை நாட்டப்படும்.

'உன் தலையில் வண்டு இருக்கிறது' - தலையில் வண்டு இருத்தலைக் கூறுதல்-இயல்புப்பொருள் எச்சரித்தல்-உள்நோக்கப் பொருள் வண்டைத் தட்டிவிட வைத்தல்- எதிர்ப்பார்ப்பு எச்சரித்தல், புறக்கணித்தல், புகார் செய்தல், பழித்தல், புகழ்தல், தேற்றுதல், அறிவுரை கூறுதல், நன்றி கூறுதல், விடைபெறுதல் போன்றவைகளை உள்நோக்கங்கள் எனவும் இவைகளை வெளியிடக் கூற்று உதவுகிறது எனவும் கருதலாம். ஒருவர் கூறும் கூற்றிலிருந்து இத்தகைய உள்நோக்கப் பொருட்களைச் சூழல் வழியாகத்தான் உணரமுடியும். இத்தகைய செயல்கள் நிகழ்வதற்குச் சில சாதக நிலைகள் தேவையாகின்றன. ஒருவர் தவறு செய்திருந்தால் தான் குறைகூறல் என்ற செயலும், மன்னிப்புக் கோருதல் என்ற செயலும் நிகழும். சில முழு உரைக்கோவைகள் கூடச் சில பேச்சுச் செயல்களைவெளியிடப் பயன்படும். விளம்பரங்கள் (உரைக்கோவை) பொருளை வாங்கத் தூண்டுவதற்காக உருவாக்கப்படுகின்றன. திருமண அழைப்பிதழ்கள் பிறரை அழைப்பதற்காக உருவாக்கப்படுகின்றன. ஆக, கூற்றுக்களின் இயல்புப் பொருளையன்றிக் கூற்று, உரைக்கோவைகளின் பின்புலத்தில் காணப்படும் உள்நோக்கத்தை, அதாவது பேச்சுச் செயலை விளக்கும் இலக்கையும் 'சூழ்நிலைப் பொருண்மையியல்' கொண்டுள்ளது.

கூற்றுக்களை வெளியிடும்போது, பேசுபவர்கள் பிறருக்கு அல்லது கேட்பவர்களுக்குத் தெரிந்தவை எனச் சில கருத்துக்களைக் கருதிக் கொண்டு, புதிய கருத்துக்களை வெளியிடுவர். பிறருக்குத் தெரிந்தவை எனப் பேசுபவர் கருதும் கருத்துக்களைக் 'கருதிய அல்லது கொள்ளும் கருத்து (Presupposition) எனவும், புதிதாக வழங்கும் கருத்தை "நிலைநாட்டும் கருத்து" எனவும் கருதலாம் (Assertion). "என் கார் மீண்டும் நின்றுவிட்டது" என ஒருவர் கூறினால், அதன் கொள்ளும் பொருளாக" என் கார் முன்பும் நின்றுவிட்டது" என்பதைக் கருதலாம். இதில் 'மீண்டும்' என்ற கூறு இந்தக் 'கொள்ளும் கருத்தை' உய்த்துணர வழி வகுக்கிறது. இத்தகைய கூறுகளையும், பல அமைப்புகளையும் கூற்றுக்களில் புகுத்தி மொழிபேசுவோர் கொள் கருத்தை வெளிக்காட்டுவர். ஆகவே இவைகளைக் 'கொள் கருத்துத் தூண்டிகள்' (Presupposition triggers) எனலாம். கொள்கருத்தையும், நிலைநாட்டும் கருத்தையும் பேச்சு நிகழும் சூழல், ஈடுபடும் மாந்தர் போன்றவற்றை உற்று

நோக்குவதன் மூலம் உணரமுடியும். பிறருக்குத் தெரிந்த கருத்து எனப் பேசுபவர் கொள்ளும் கருத்து, கேட்பவருக்குப் புதியதாக இருக்கலாம். இந்நிலையில் அக்கருத்தைத் தெளிவுபடுத்திய பின்னர் உரையாடல், தொடருகின்ற சூழ்நிலைகள் உள்ளன.

"மகள் என்னை அமெரிக்காவுக்குக் கூப்பிடுகிறாள்"
(மகள் அமெரிக்காவில் இருக்கிறாள் : கொண்ட கருத்து)
"எப்போது அவள் அமெரிக்காவுக்குப் போனாள்?"
(கொண்ட கருத்து கேட்பவருக்குத் தெரியவில்லை)
"போய் ஒரு வருடம் ஆச்சே"
(பேசுபவர் தெளிவு படுத்தல்)
"கூப்பிட்டா போய் சுத்திப் பார்த்து விட்டு வாருங்களேன்"
(முதலில் சொன்ன கூற்றுக்குப் பதில்)

பேசுபவர்கள் கருதும் கொள் கருத்துக்கள் சூழ்நிலையால் வெளிப்படும். இத்தகைய பொருள்களையும் 'செயற்பாட்டு மொழியியல்' விளக்குகிறது.

கூற்றுக்களை வெளியிடும்போது அவைகளின் இயல்புப் பொருள் உணரப்பட்டு, அதை அடிப்படையாகக் கொண்டு பல பொருட்களைக் கேட்பவர்கள் ஊகிக்கக்கூடும். "டாக்டரைப் பார்க்கப்போனேன், அதிகமான கூட்டம்" என ஒருவர் கூறிய உடன் "பேசியவர் டாக்டரைப் பார்த்திருக்க மாட்டார்" அல்லது "அதிக நேரம் காத்துக் கிடந்து டாக்டரைப் பார்த்திருப்பார்" எனக் கேட்பவர் ஊகிக்கக் கூடும். கேட்பவர் ஊகிப்பனவற்றைக் "கேட்பவரின் ஊகப்பொருள்" எனலாம். ஒரு கூற்றிலிருந்து இடம், காலம், நபர், நபரின் தொழில், பண்பு, நபரின் வட்டாரம், சமுதாய நிலை, மதிப்பு போன்ற பலவற்றை ஊகிக்க முடியும். நமது பொது அறிவாலும் கருத்துப்பரிமாற்ற நியதிகள் குறித்த அறிவாலும் நாம் கூற்றுக்களிலிருந்து ஊகப்பொருளை வரவழைத்துக் கொள்கிறோம் எனவும், கருத்துப் பரிமாற்ற நியதியில் மாந்தரின் ஈடுபாடு, கூற்றின் மெய்மைத்தன்மை, அளவு, கூற்றை வெளியிடும் முறை ஆகியவை குறித்த நியதிகள் மனிதரால் பேணப்படுகின்றன எனவும் அதன் மூலம் நாம் தகுந்த ஊகங்களைச் செய்கிறோம் எனவும் கிரைஸ் என்ற அறிஞர் விளக்குவார். கேட்பவர்களின் ஊகம் பேச்சுச் சூழலில் நிகழ்வதால் இதையும் பொருள் எனக் கருதி அதை விளக்கவும் 'சூழல் பொருண்மையியல்' முனைகிறது. உரையாடலில் கூற்றுக்களை வெளியிடுவதும், உரிய ஊகங்களை வரவழைப்பதும், ஊகங்கள் நிலைநாட்டப்படுவதும், முறியடிக்கப்படுவதும் தொடர்ந்து நிகழ்கின்றன என்பர்.

மொழியைச் செயல்படுத்துகையில், சில காரணங்களுக்காக, சில கருத்துக்களை வெளிப்படுத்தியும், சில கருத்துக்களை மறைமுகமாகச் சுட்டிக்காட்டியும் தோன்றும் வகையில் கூற்றுக்கள் படைக்கப்படுகின்றன. கூற்றைக் கூறுதல் என்பது மிக அடிப்படையான செயல். இது தொடர்ச்சியாக நிகழும்போது சொற்பொழிதல் செயலும் (ஒரு வழிக் கருத்துப் பரிமாற்றம்) உரையாடல் செயலும் (இருவழிக் கருத்துப் பரிமாற்றம்) நிகழ்கின்றன. உரையாடல் சூழலில் ஒருவர் ஒரு கூற்றை வெளியிட, கேட்பவர்கள் அதை ஏற்றுக் கொள்ளவோ, நிராகரிக்கவோ செய்கின்ற செயல் கூற்று வடிவத்தில் வெளிப்படுகிறது. இது தொடர்ச்சியாக நிகழும்போது உரையாடல் நிகழ்கிறது. ஒருவர் கூறிய கூற்றை ஏற்றுக் கொண்டாலும், மறுத்தாலும் அதற்கான காரணம், விளைவு, நிபந்தனை, நிகரானவை, ஒப்புமையானவை, எதிரிடையானவை, பொதுவானவை, சிறப்பானவை, எடுத்துக்காட்டு போன்றவைகளைக் காட்டும் கூற்றுக்களை, கேட்பவர்கள் பதிலாக வழங்குவதாலும் இச்செயல்கள் சூழல் முறையில் வெளியிடப்படுவதாலும் உரையாடல் நிகழ்கிறது எனவும், உரையாடல் அமைப்பாக்கம் பெறுகிறது எனவும் விளக்கப்படும். கூற்றுக்களின் இடையிடையே நிரப்பலகுகள், ஆமோதிக்க உதவும் அலகுகள், கவனம் ஈர்த்தல், மறுபடிச் சொல்லுதல், அழைத்தல், தொடங்குதல், முடித்தல், தொடர்தல் போன்ற செயல்களுக்காக அமையும் மொழிக் கூறுகள் பயன்படுத்தப்பட்டு உரையாடல் அமைப்பாக்கம் செய்யப்படுகின்றன என விளக்கப்படுகிறது. பின்வரும் படத்தில் X பேசுபவர்கூற்று; Y கேட்பவரின் கூற்று.

X → Y (ஒப்புக்கொள்ளுதல்) — காரணம் கூறுதல்

Z (நிராகரித்தல்) — விளைவு கூறுதல்

நிபந்தனை கூறுதல்
நிகர்நிலை கருத்துக் கூறுதல்
ஒப்புமை கொண்டகருத்துக் கூறுதல்
எதிரிடைக் கருத்துக் கூறுதல்
பொதுவான கருத்துக் கூறுதல்
சிறப்பான கருத்துக் கூறுதல்
எடுத்துகாட்டு தருதல். . .போன்றவை
தோற்றம், வளர்ச்சி, பண்பு கூறுதல்..

பின்வரும் உரையில் கூற்றுக்கள் எவ்வாறு அமைப்பாக்கம் பெற்றுள்ளன என்பது விளக்கப்படுகிறது.

"கி.பி. 8ஆம் நூற்றாண்டு முதல் 19ம் நூற்றாண்டுவரை அடுத்தடுத்து, பல நிகண்டுகள் <u>தோன்றி</u> வளர்ந்துள்ளன (1) கடினச்

சொற்களுக்கு மட்டும் பொருள் தரவேண்டும் என்ற நிலை மாறி, பொருளமைப்பு நிலையில் எல்லாச் சொற்களையும் விளக்குவதையும், சொற்றொகுதியைப் பல்வேறு பொருட் புலங்களாகப் பிரிப்பதையுமே நிகண்டுகள் அடிப்படைப் பணியாகக் கொண்டிருந்தன 2. உன்னிப்பாக ஆராயும் நிலையில், நிகண்டு சொற்றொகுதியில் மிகத் தெளிவான வகைப்பாட்டு உத்தியைக் காணமுடியும் 3. இவ்வகைப்பாட்டிற்கு வடமொழியிலுள்ள கோசங்கள் காரணமாய் அமைந்திருக்கலாம் (4).”




ஆக, மொழி செயல்பாட்டியல் அல்லது சூழ்நிலைப் பொருண்மையியல் என்ற துறை மொழியைச் செயல்படுத்தும் சூழலில், அதாவது, மொழியானது செயல் வடிவத்தைப் பெறும் சூழலில் எவ்விதம் மொழியைப் பயன்படுத்தும் மாந்தர் கூற்றுக்களை வெளியிடுகின்றனர் என்பதையும், எவ்விதம் சூழல் சுட்டுப்பொருள், உள்நோக்கப்பொருள், கொள்பொருள், ஊகிப்புப் பொருள் ஆகியனவற்றைக் கூற்றுக்களுக்கு வழங்கி எவ்வாறு கூற்றுக்களை இணைத்துச் சொற்பொழிவையும், உரையாடலையும் நிகழ்த்துகிறார்கள் என்பதையும், எவ்வாறு உரைக்கோவைகளை அமைப்பாக்கம் செய்கின்றனர் என்பதையும், இவைகளுக்காக எவ்விதம் பொது அறிவையும், கருத்துப்பரிமாற்ற அறிவையும் நியதிகளையும் கையாளுகிறார்கள் என்பதையும் விளக்குமாறு அமைகின்ற துறையாகும்.

முன்னர் உரையாடல் நிகழும் முறை கட்டுக்கடங்காமல், நெறிமுறைகளுக்கு உட்படாமல் தன் போக்கில் நிகழ்வது எனவும், அதற்கென ஒரு கட்டமைப்பு இல்லை எனக் கருதிய காலம் மாறி, உரையாடலுக்கும் கட்டமைப்பு உண்டு என வெளிப்படையாக்கிக் காட்டியது அறிவியல் சார்ந்த விளக்கமாகிறது. மனத்தில் உறைகின்ற உள்நோக்கம், கொள்பொருள், ஊகப்பொருள்

போன்றவற்றை உணரக் கருத்துப்பரிமாற்ற நியதிகள் வழிவகுக்கின்றன எனவும், இப்பொருள்களைச் சில இலக்கண வடிவங்களையும் கூறுகளையும் கொண்டு உணரலாம் எனவும் எடுத்துக் கூறியது அறிவியல் சார்ந்த விளக்கமாகிறது. ஆகவே சூழல்சார் பொருண்மையியல் என்ற துறையும் அறிவியல் நெறிமுறைகளைத் தழுவி வளர்ந்து வரும் துறை எனலாம்.

# 4. மொழி வழக்குகள்

***சமுதாய, வட்டார வழக்கு***

மொழிக்கூறுகள் வேறுபட்ட வடிவங்களைப் பெற்று மொழியில் நிலைபெறுகின்றன என்பது எல்லோருக்கும் தெரிந்த உண்மை. பண்டைய மரபு இலக்கணங்கள்கூட மொழியின் வேறுபட்ட வடிவங்களை வழக்குகள் எனக்கண்டு அவைகளின் வேறுபாடுகளை விளக்க முயன்றுள்ளன. தமிழில் இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் எனச் சொற்களின் வடிவ வேறுபாடுகளையும், அவைகளின் நிலைபேற்றிற்கான காரணத்தையும் சுட்டிக் காட்டியுள்ளனர். ஒரு மொழிக் குடும்பத்தைச் சார்ந்த மொழிகளின் சொற்கள் மூல மொழிச் சொல்லின் திரிந்த வடிவங்களைக் கொண்டு விளங்குகின்றன என்று பத்தொன்பதாம் நூற்றாண்டு வரலாற்று மொழியியலறிஞர்கள் கண்டு விளக்கினர்.

அமைப்பு மொழியியலார் மொழியின் ஒலியன்கள், திரிந்த வடிவில் மாற்றொலிகளாகவும், உருபன்கள் திரிந்த வடிவில் மாற்றுருபுகளாகவும், மொழியில் தோன்றுகின்றன எனவும், அந்த மாற்றுவடிவங்கள் உருவாகுவதற்கு ஒலியன், உருபன் ஆகிய அமைப்புச் சூழல்கள் காரணமெனவும், குறிப்பாக ஒலியன், உருபன் என்பவைகளுக்கு முன்னரோ, பின்னரோ தோன்றுகின்ற பிற கூறுகளும், அவைகளின் ஒலி, உருபன் வடிவங்களும் வேறுபாட்டுக்குக் காரணமாக அமைகின்றன என்பதையும் விளக்கியுள்ளனர். 'ம்' என்ற ஒலி ங்,ஞ்,ந்,ம் என்ற மாற்றொலிகளை 'மாங்காய், மாஞ்சோலை, மாந்தளிர், மாம்பழம்' என்ற சொற்களில் காட்டுகின்றது; 'ஓர்' என்ற உருபன் ஓர், ஒரு என்ற வடிவங்களை 'ஓர் இடம், ஒரு மடம்' என்ற கூறுகளில் காட்டுகின்றது.

கிளைமொழி ஆய்வாளர்கள் மொழியில் வேறுபட்ட கிளைமொழிகள், வட்டார வழக்குகள் உள்ளன எனவும், இவ்வழக்குகளின் வேறுபாடு இவைகளில் தோன்றும் மொழிக் கூறுகளான ஒலி, உருபன், சொல், தொடர் போன்றவைகளின் வடிவம், பொருண்மை என்பனவற்றின் வேறுபாடுகளால் நிறுவப்படும் எனவும் விளக்குவர். தமிழில் 'அவர்கள்' என்ற சொல்லைக் குறிக்க வட்டார வழக்குகளில் ஒலி வேறுபாடு கொண்ட 'அவ்வோ, அவுக, அவிய,

அவங்கோ, அவங்கெ, அவிங்கெ,' போன்ற வடிவங்கள் உள்ளன. இவைகளில் 'அவ்' என்ற ஒலிகளும் 'க' என்ற ஒலியும் பொதுவாகத் தோன்றுகின்றன. தமிழில் தோசையைத் திருப்பிப்போட உதவும் அகப்பையைக் குறிக்க 'தோசைதிருப்பி, தோசைக்கரண்டி, தோசை ஆப்பை, சட்டுவம்' என்ற வேறுபட்ட சொற்கள் பயன்படுத்தப்படுகின்றன. வெவ்வேறு வட்டார வழக்குச் சொற்களில் காணப்படும் ஒற்றுமையையும், ஒலிவேறுபாடுகளையும் கண்டு அவைகளின் செம்மைத்தன்மையைக் கண்ட ஆய்வாளர்கள் அவைகளைச் சுட்டிக்காட்ட 'வேறுபாட்டு வடிவங்களை' வடிவமைத்து அவைகளுக்கு dia system என்று பெயரிட்டனர்.

படைப்பு மொழியியலாரும் மிகப் பொதுவான நிலையில் பல தொடர்களை எடுத்துக்கொண்டு, ஒரே வகையான பொதுவான இலக்கண அமைப்பைக் கொண்ட தொடர்கள் வேறுபட்ட வடிவங்களில் வெளிப்படுகின்றன எனவும் இவ்வேறுபட்ட வடிவங்களுக்குத் தொடர்களில் தோன்றுகின்ற சொற்களின் வேறுபாடுகளும், கூறுகள் இடம்மாறித் தோன்றுவதும் காரணமாக அமைகின்றன என்பர். இவர்கள் விளக்கத்தின்படி 'இந்தப்பையன், அந்தப்பையன், இந்த உயரமான பையன், இந்த அழகான பையன், படித்த பையன், பார்த்த பையன்' என்ற வேறுபட்ட பெயர்த்தொடர்கள் அனைத்தும் 'சுட்டு+அடை+பெயர்' என்ற பொது இலக்கண வடிவத்தொடரின் வேறுபட்ட வடிவங்கள் எனவும், இவ்வடிவங்கள் தாங்கள் கொண்டிருக்கும் சொற்களின் வேறுபாடு காரணமாக வேறுபட்டுத் தோன்றுகின்றன எனவும் விளக்கினர். தொடர்களில் தோன்றும் சொற்களின் நிலையான மாற்றம் காரணமாகவும் தொடர்கள் வேறுபாடுகளைக் காட்டக் கூடும் (நான் உன்னை மனதார விரும்புகிறேன்), உன்னை நான் மனதார விரும்புகிறேன், மனதார உன்னை நான் விரும்புகிறேன், விரும்புகிறேன் நான் உன்னை மனதார). தமிழ்க்கிளை மொழிகளில் 'வருகிறவன்' என்ற வினையாலணையும் பெயர் 'வரப்பட்டவன்', 'வருகிறவன்' என்ற வடிவங்களில் தோன்றுவதுண்டு.

ஆக, மொழிக்கூறுகள் வேறுபட்ட வடிவங்களில் மொழியில் தோன்றுகின்றன என்ற கருத்து காலங்காலமாக உணரப்பட்ட கருத்து. வேறுபட்ட வடிவங்களின் நிலைபேற்றுக்கு மொழிக்கூறுகள் தோன்றுகின்ற சூழல்கள் காரணம் எனவும், இக்சூழல்களில் அகநிலைச் சூழல் அல்லது அமைப்புச் சூழல், புறநிலைச் சூழல் அல்லது மொழி துலங்கும் சூழல் என்பவை அடங்குகின்றன என்பதும் கண்கூடாகக் கண்ட உண்மை. அமைப்பு மொழியியலாரும் படைப்பு மொழியியலாரும் மொழிக்கூறுகளின் வடிவ, அமைப்பு வேறுபாடுகளுக்கு அவை தோன்றும் அமைப்புச் சூழலைக்

காரணமாகக் காட்டி விளக்க முற்படுகையில், கிளைமொழியியலாரும் சமுதாய மொழியியலாரும் மொழிக்கூறுகளின் வேறுபாட்டுக்குக் காரணமாகப் புறநிலைச் சூழல்களைச் சுட்டிக்காட்டுவர். கிளைமொழியியலார், மொழிவழங்கும் வட்டாரங்கள் மொழிக்கூறு வேறுபாட்டிற்குக் காரணம் எனவும், சமுதாய மெழியியலார், மொழிதுலங்கும் சமுதாயக் கூறுகளான பால், இனம், வயது, மதிப்பு என்ற மொழிபேசுவோரைச் சார்ந்த பண்புகள் காரணம் எனவும், துறைமொழியியலார், துறைசார்ந்த கருத்துக்கள் மொழிக்கூறு வேறுபாட்டிற்கான காரணம் எனவும் விளக்குவர். இத்தகைய சூழல் கூறுகளைக் கண்டதன் விளைவாக, வட்டார வழக்குகள் குறித்த கிளை மொழியியல் ஆய்வுகளும், சமுதாய வழக்குகள் குறித்த சமுதாய மொழியியல் ஆய்வுகளும், துறை வழக்குகளான இலக்கியம், அறிவியல், தொழில்நுட்பம், மருத்துவம், வானொலி, தொலைக்காட்சி, விளையாட்டு, நீதி, அரசியல் போன்ற துறை சார்ந்த வழக்குகளைக் குறித்த துறை மொழியியல் ஆய்வுகளும், நடையியல் ஆய்வுகளும் தோன்றின.

வட்டாரமொழியியல் ஆய்வுகள் மொழியில் பல கிளை மொழிகள் உள்ளன எனவும், அவை ஒற்றுமையையும், வேறுபாடுகளையும் காட்டுகின்றன எனவும், அந்த ஒற்றுமை வேற்றுமைகளுக்கு அவை வேறுபட்ட வட்டாரங்களிலும் நிலப் பரப்புகளிலும் மக்களால் பேசப்படுவதே காரணம் எனவும் கருதினர். வெவ்வேறு நிலப்பரப்புக்களில் வாழும் மக்கள் பேசுகின்ற வழக்கு அந்த நிலப்பரப்புக்கே உரிய பொதுத் தன்மைகளைக் கொண்டிருக்கக் கூடும் எனக் கருதி அவைகளைக் காணும் முயற்சியின் விளைவாகக் கிளை மொழி ஆய்வுகள் தோன்றின. வெவ்வேறு வட்டாரங்களில் பேசப்படும் வழக்கை ஆராய அவ்விடத்திலிருந்து உரிய பேச்சுத் தரவுகளைச் சேகரித்து, அவைகளை அமைப்பியல் ஆய்வுகளுக்கு உட்படுத்தி, அப்பேச்சுக்களில் தோன்றும் சொற்கள், தொடர்கள், உருபன்கள், ஒலியன்கள் போன்றவற்றை வெளியிடுவதைக் குறிக்கோளாகக் கொண்டு வளர்ந்த துறையே கிளை மொழியியல் துறை. சில இடங்களில் சில மக்கள் ஒரு மொழியை இப்படி இப்படிப் பேசுகிறார்கள் என மேலோட்டமாகக் கூறாமல் வெவ்வேறு இடங்களுக்குச் சென்று தரவுகளைச் சேகரித்து ஒரு மொழி வழக்கை அந்த வட்டாரத்திற்கே உரிய வழக்கு என நிறுவுவதற்காக உருபன்கள், சொற்கள் போன்றவற்றை இனங்கண்டு, கிளை மொழி பரப்பு வரை படங்கள் போன்றவற்றை வெளியிடுகின்ற தன்மையில் இருப்பதால் கிளைமொழி ஆய்வுகள் அறிவியல் நெறிமுறையில் அமைபவையாகும். வட்டார வழக்குகளை இனங்காண்பதோடு மட்டும் நிறுத்திக் கொள்ளாமல், அந்த வட்டாரங்களில் மக்கள் ஈடுபடுகின்ற தொழில் காரணமாகச் சொற்கள் வேறுபட்ட வகையில் வழங்கி வருவதைக்

கண்ணுற்று, தொழில் கலைச்சொற்களையும், தொழில் வழக்குகளையும் நிலைநாட்ட முயன்றனர். மீன்பிடிப்பவர் கலைச்சொற்கள், பனை ஏறும் தொழில் சார்ந்த கலைச் சொற்கள், தச்சுத் தொழில் சொற்கள், நெசவுத் தொழில் கலைச் சொற்கள், இருப்பு உலைத்தொழில் சொற்கள், தங்க நகைத் தொழில் கலைச்சொற்கள், உழவுத் தொழில் கலைச் சொற்கள் என்பவைகளைத் திரட்டி உரிய வழக்குகள் நிலைநாட்டப்பட்டன. தமிழ் மொழியைப் பொறுத்தவரையில் வட, தென், கிழக்கு, மேற்குத் திசைகள் அடிப்படையான வட்டார வழக்குகளும், இலங்கைத் தமிழ் வழக்கும் வட்டார வழக்குகளாக நிலைநாட்டப்பட்டுள்ளன. இவைகளுக்கான சொற்கள், உருபன்கள் என்ற தரவுச் சான்றுகளும் திரட்டப்பட்டு வெளியிடப்பட்டுள்ளன.

மொழி வேறுபாடுகளுக்கும், வழக்கு வேறுபாடுகளுக்கும் சமுதாயம் என்ற புறநிலைச் சூழலும் காரணம் எனக் கருதி, சமுதாயச் சூழலில் காணப்படும் பிரிவினைக் கூறுகளின் தாக்கத்தால் வழக்குகள் வேறுபடுகின்றன எனவும் இவைகளால் சமுதாய வழக்குகள் உருவாகின்றன எனவும் சமுதாய மொழியியலார் கருதுவர். சமுதாயத்தில் இனம், சாதி, பால், வயது, தொழில், கல்வி போன்ற பண்புகள் சமுதாய மாந்தர்களைப்பிரித்து வேறுபடுத்துவதற்காக அமையும் பண்புகள் எனலாம். இவைகளைச் சமுதாய பாகுபாட்டுக் கூறுகள் எனவும் கருதலாம். இவை சமுதாயவியல் உண்மைகளா என்ற சர்ச்சை எழுந்ததும் உண்டு. மாந்தரின்பண்புகள், செய்கைகள், அவர்கள் ஈடுபடும் சமுதாயச் செயல்கள், நிகழ்வுகள், சடங்குகள், அந்தஸ்துகள் போலப் பண்புகளின் அடிப்படையில் மாந்தரின் வகைப்பாடு சமுதாயத்தில் நிலைநாட்டப்படும். இத்தகைய சமுதாய வேறுபாட்டுக் கூறுகள் மறைநிலையில் சமுதாயத்தில் நிலைபெறுகின்றன எனவும், இவை மொழிப்பயன்பாட்டிலும் வெளிப்படுகின்றன எனவும் கருதி சமுதாயக் கூறுகளின் தாக்கத்தால் விழையும் மொழிக்கூறு வேறுபாடுகளையும், மொழிக்கூறு பயன்பாட்டில் ஏற்படும் வேறுபாடுகளையும் விளக்கச் சமுதாய மொழியியலார் முனைந்தனர். இதன் காரணமாகப் பல சமுதாய மொழியியல் ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டன.

பெர்ன்ஸ்டீன் என்ற சமுதாயவியல் அறிஞர் கறுப்பு இன மக்களின் ஆங்கிலமொழி குறைபாடுடையது எனவும், பல தருக்க வகையிலான செய்திகளைக் குறித்துப் பேசுவதற்கு அவர்களது ஆங்கில வழக்கைப் பயன்படுத்த முடியாது எனவும் ஒரு கருதுகோளை முன்வைத்தார். இது உண்மையா இல்லையா என்பதை நிறுவும் வண்ணம் லேபவ் என்ற அறிஞர் மேற்கொண்ட ஆய்வுகள் பல உண்மைகளைப் புலப்படுத்தின. கறுப்பு இன மக்களின் மொழி

குறைபாடுடையது என்ற பெர்ண்ஸ்டீன் கொள்கை ஏற்றுக் கொள்ளப்படாவிட்டாலும், கறுப்பு இன மக்களின் மொழி வழக்கு வேறுபட்டது எனக்கருதி, அதற்கான காரணங்களும் கண்டுபிடிக்கப்பட்டன. இதற்காகப் புள்ளியியல் வழிமுறைகள் பின்பற்றப்பட்டன. சமுதாய மொழியியல் ஆய்வைத் தகுந்த தரவு சேகரிப்பு, ஆய்வு, மொழிக் கூறுகளின் அளவு ஆய்வு போன்றவைகளின் அடிப்படையில் நிலைநாட்டலாம் என எடுத்துரைக்கப்பட்டது. ஒலியமைப்பில் வேறுபட்டவாறு தோன்றும் சில சொற்களை, குறிப்பாக உயிர் ஒலிகளுக்குப் பின் வரும் 'r' என்ற ஒலியைக் கொண்ட சொற்களைப் (farm) பல கறுப்பின மக்களிடம் உச்சரிக்கச் செய்து தரவாகக் கொண்டு புள்ளியியல் நெறிமுறையில் ஆய்வு செய்த போது 'r' ஒலி அச்சொற்களில் ஒலிக்கப்படுகிறது எனவும், வெள்ளையர் பேச்சில் 'r' ஒலிக்கப்படுவதில்லை எனவும் கண்டு, ஆகவே வழக்குகள் கறுப்பு இன மக்களிடத்திலும், வெள்ளை இன மக்களிடமும் வேறுபடுகின்றன என நிறுவப்பட்டது. கறுப்பு இன மக்கள் இந்த 'r' ஒலிப்பைத் தக்க வைத்துக் கொள்வதற்கு 'மொழிப் பயன்பாட்டு மனப்பாங்கு, தங்கள் இனத்தை வேறுபடுத்திக் காட்டும் மனப்பாங்கு' என்பவை காரணமாக அமைகின்றன எனவும் நிறுவப்பட்டது. மேலும் மொழி எவ்விதம், எந்தத்திசையில் மாற்றமடையப் போகிறது என்பதை நிர்ணயிப்பதற்கான செய்திகளும் சமுதாய மொழியியல் ஆய்வு வாயிலாக வெளிப்படுகிறது எனவும் லேபவ் எடுத்துரைத்தார். வயதானவர்களின் மொழிப் பயன்பாட்டையும், இளைஞர்களின் மொழிப்பயன்பாட்டையும் ஒப்பிட்டு எந்தத் திக்கில் மொழி மாற்றம் நிகழப்போகிறது என்பதையும் கணிக்க வழியுண்டு என லேபவ் நிறுவினார்.

சமுதாய மொழியியலின் முதல் தலைமுறையைச் சார்ந்த அறிஞர்கள் சமுதாயப் பாகுபாட்டுக் கூறுகள் எவ்விதம் மொழியின் வழக்கு வேறுபாட்டுக்குக் காரணமாயமைகின்றன என்பதை ஒலி, சொல், இலக்கணக் கூறுகளைக் கொண்ட தரவுகளின் அடிப்படையில் நிறுவினர். இன அடிப்படையில் கறுப்பு இனமக்களின் ஆங்கில வழக்கும், சாதாரண ஆங்கில வழக்கும் வேறுபட்டவை என நிறுவினர். 'r' உச்சரிப்பு, 'be' என்ற இணைப்பு வினையின் திரிபுகளைப் பயன்படுத்தாமை (He be coming = He is coming, They be coming : They are coming) போன்ற கூறுகள் கறுப்பின மக்களின் ஆங்கில வழக்கில் உள்ளன எனவும் இவை, இனங்காரணமாக ஏற்படும்மொழி வழக்கு வேறுபாடுகள் எனவும் நிறுவினர்.

'சாதி' என்ற சமுதாயப் பாகுபாட்டுக்கூறு மேலை நாடுகளில் இல்லை என்றாலும் இந்தியாவில் உள்ளது எனக் கொண்டு, குறிப்பாக, தமிழில் வழக்கு வேறுபாடுகள் ஆராயப்பட்டன. பிராமணர் வழக்கு,

பிராமணர் அல்லாதார் வழக்கு, வெள்ளாளர் வழக்கு, முதலியார் வழக்கு, நாடார் வழக்கு, தேவர் வழக்கு, படையாச்சி வழக்கு, மீனவர் வழக்கு, செட்டியார் வழக்கு எனப் பல சாதி வழக்குகளை நிலை நாட்டும் முயற்சி மேற்கொள்ளப்பட்டது. சாதி என்ற சமுதாயக் கூறு உண்மையா இல்லையா என்ற சர்ச்சையும் எழுந்தது. அத்திம்பேர், ஆம்படையாள் போன்ற பல சொற்களைப் பிராமணர்கள் பயன்படுத்த, பிறர் அத்தான், மச்சான், பெண்சாதி, பெண்டாட்டி போன்ற சொற்களைப் பயன்படுத்துவதையும், இதைப்போன்று பல மொழிக்கூறுகள் வேறுபட்ட வகையில் பயன்படுத்தப்படுவதையும் சுட்டிக்காட்டி 'ஜாதி வழக்கு' உள்ளது என நிறுவப்பட்டது.

பால் அடிப்படையில் வழக்குகள் வேறுபடுவதையும் சமுதாய மொழியியலார் விளக்கினர். தாய்லாந்து மொழியிலும், கொசாத்தி என்ற கிழக்காசிய மொழியிலும், 'குடுக்' என்ற வடதிராவிட மொழியிலும் ஆண்கள் பேசும் வழக்கும் பெண்கள் பேசும் வழக்கும் வேறுபட்டவை என நிறுவப்பட்டது. ஆஸ்திரேலிய பழங்குடிமொழிகளில் 'மாமியார் வழக்கு' என்ற மொழிவழக்கு சில மொழிகளில் காணப்படுவதாக 'டிக்சன்' என்ற அறிஞர் விளக்கினார்.

வயது அடிப்படையில் குழந்தைகள் வழக்கு முதியோர் வழக்கிலிருந்து மாறுபட்டது என நிறுவப்பட்டது. குறிப்பாக, பெற்றோரும் மற்றோரும் குந்தைகளிடம் பேசும்போது ஒரு மாறுபட்ட வழக்கைப் பயன்படுத்துகின்றனர் எனக் கண்டு அதை பேபிமொழி எனச் சில மொழிகளில் விளக்கினர். தமிழில் அத்தகைய வழக்கு நிலைநாட்டப்படவில்லை என்றாலும் குழந்தைகளின் சொற்களும், குழந்தைகளிடம் பேசும் சொற்களும், ஒரு சில சொற்களிலாவது வேறுபடுகிறது என நிலைநாட்டப்பட்டுள்ளது (பால்=பாச்சி, நிலவு=அம்புலி, தூங்கு=சாச்சுக்கோ, உணவு = பூவா, போன்றவை). ஆஸ்திரேலியப் பழங்குடி மொழியான வால்பிரி என்ற மொழியில் வயதுக்கு வந்த ஆண்கள் பேசும் வழக்கு 'தியில்வரி' எனவும், இவ்வழக்கு 'எதிர்நிலைக் கூறுகளைப் பயன்படுத்துதல்' என்ற நியதியின் அடிப்படையில் நிலைபெறுகிறது எனவும் விளக்கப்பட்டது. ஜப்பானிய மொழியில் கல்லூரி மாணவர்கள் தமக்கே உரிய வழக்கை உருவாக்கிப் பயன்படுத்துகிறார்கள் எனவும் நிறுவப்பட்டது.

தொழில் அடிப்படையிலும் மொழியைப் பயன்படுத்தும் விதம் மாறுபடுவதைச் சமுதாய மொழியியலார் விளக்குவர். வட்டாரக் கிளைமொழி ஆய்வின் வாயிலாகக் கண்டு கொண்ட தொழில் சார்ந்த கலைச்சொற்களையும், பிற தரவுகளையும் அடிப்படையாகக் கொண்டு தொழில் வழக்கு வேறுபாடுகள் மொழியில் உள்ளன என நிறுவும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன.

கல்வியின் காரணமாக மொழிவழக்குகள் வேறுபடுவதையும் கண்டுள்ளனர். சில மொழிகளில் உயர் வழக்கு, கீழ் வழக்கு என இரட்டை வழக்குகள் நிரந்தரமாகப் பயன்பாட்டில் உள்ளன எனவும், உயர் வழக்கு கல்வியால் பெறப்படுவது எனவும் கருதப்படும். கிரேக்கம், அராபிக், தமிழ் போன்ற மொழிகளில் உயர் வழக்கு, தாழ் வழக்கு என்ற இரட்டை வழக்குகள் உள்ளன எனவும், உயர் வழக்கு செவ்வியல் வழக்கு எனவும், கீழ் வழக்கு சாதாரண அன்றாட வழக்கு எனவும் கருதப்பட்டு அவைகளில் ஒலி, சொல், தொடர் வேறுபாடுகளும், சூழ்நிலையால் வேறுபடும் பயன்பாடுகளும் உள்ளன எனப் பட்டியலிட்டுக் காட்டியுள்ளனர். தமிழில் செவ்வழக்கு பண்டைய இலக்கியங்களிலும், கல்விச் சூழலிலும் பயன்படுத்தப்படுகிறது. சாதாரணவழக்கு பேச்சுச் சூழல்களிலும் அன்றாட சமுதாய நிகழ்வுகளிலும் பயன்படுத்தப்படுகிறது. ஆக, முந்தைய சமுதாய மொழியியலார் உரிய தரவுகள், ஆய்வுமுறைகளைஅடிப்படையாகக் கொண்டு சமுதாயப் பாகுபாட்டுக் கூறுகளான இனம், சாதி, பால், வயது, கல்வி போன்றவைகளின் தாக்கத்தின் காரணமாக மொழிக்கூறுகளும் மொழி வழக்குகளும் வேறுபடுகின்றன எனவும், வேறுபட்டவகையில் பயன்படுத்தப்படுகின்றன எனவும் விளக்கினர்.

மற்றொரு வகை சமுதாய மொழியியலார் மொழியின் தாக்கத்தால் சமுதாயங்களில் ஏற்படும் மாறுபாடுகள், மாற்றங்கள் போன்றவற்றை விளக்கியுள்ளனர். குறிப்பாக, ஒரு மொழி பிறமொழிகளோடு தொடர்பு கொள்வதால் உருவாகும் இருமொழிச்சூழல் (bilingualism) பன்மொழிச்சூழல், இதனால் மொழிகளில் ஏற்படும் மொழி இணைவுகள், இதனால் 'பிட்ஜின்' போன்ற கலப்பு மொழி வழக்குகள் உருவாகுதல், அந்தக் கலப்பு மொழி 'கிரியோல்' என்ற தாய்மொழியாக மாறுதல், பல்வேறு மொழி வழக்குகள் ஒரு மொழியில் பயன்படுத்தப்படும்போது எவ்விதம் ஒரு மொழி வழக்கைப் பொதுவழக்காக மாற்றி எல்லோரும் பயன்படுத்தும் வண்ணம் நிலைபேறாக்கம் செய்தல், நிலைபேறாக்கம் நிகழ்வதற்கு அடிப்படையாக அமையும் பண்புகள் எவை, போன்ற பல்வேறு கருத்துக்களைக் குறித்த ஆய்வுகளும் மேற்கொள்ளப்பட்டன. இதனால் சமுதாய மொழியியலின் பரப்பு மிக விரிந்த பரப்பாக மாறியுள்ளது. எல்லா வகையான சமுதாய மொழியியல் ஆய்வுகளும் கருதுகோள்கள், தரவுகள், புள்ளியியல் ஆய்வு முறைகள், ஒப்பியல் வழிமுறைகள் ஆகியனவற்றை அடிப்படையாகக் கொண்டு மேற்கொள்ளப்படுவதால் அவை அறிவியல் நெறிமுறையில் நிகழும் ஆய்வுகள் எனக் கருதலாம்.

## இலக்கிய வழக்கு

சமுதாய நிகழ்வுகளைக் கற்பனையோடு, உணர்வை எழுப்பும் வகையில், வாய்மொழி வடிவத்திலோ, வரைமொழி வடிவத்திலோ படைக்கப்படும் படைப்பை இலக்கியங்கள் எனலாம். இலக்கியங்கள், அமைப்பாக்கம் செய்யும் முறைகளுக்கேற்ப, செய்யுள், உரைநடை, நாடகம் என்ற வடிவங்களில் வெளிப்படுகின்றன. இலக்கியங்களை மொழியில் காணப்படும் உரைக்கோவைகளில் ஒரு வகை எனக்கருதலாம்.

தமிழ் மரபில் இலக்கணமும் இலக்கியமும் மொழியின் இரண்டு கண்களாகப் பாவிக்கப்படுகின்றன. மொழியின் ஒழுங்கமைவை எடுத்தியம்புவது இலக்கணம்; இலக்கண விளக்கத்தில் வெளியிடப்படும் மொழி பண்புகளுக்கு உரிய எடுத்துக்காட்டுகளைச் சுட்டிக்காட்டுவதற்கு உதவும் தரவுச் சுரங்கமாக இலக்கியத்தைக் கருதலாம். ஆனால் தமிழ் இலக்கண மரபில் மொழிக்கு இலக்கணம் படைத்ததோடு இலக்கியத்திற்கும் இலக்கணம் படைத்த பெருமையை இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே நாம் காணமுடிகிறது. குறிப்பாக, செய்யுள் வடிவ இலக்கியங்களின் பருப்பொருள், உரிப்பொருள் போன்றவற்றையும், அவைகளின் வடிவக் கட்டமைப்பை அமைப்பதற்கான யாப்பு, அணி போன்றவற்றையும் விளக்கிய பெருமை தமிழுக்கு உண்டு.

சங்க இலக்கியங்கள், நீதி இலக்கியங்கள், காப்பியங்கள், பக்தி இலக்கியங்கள், ஆற்றுப்படை, பரணி, உலா, பிள்ளைத்தமிழ், பள்ளு எனப் பல்வகை இலக்கியங்கள் தமிழில் உள்ளன. சமுதாய நிகழ்வுகளை, தமிழரின் அகப்புற வாழ்க்கை முறைகளை, நிலம்சார்ந்த செயல்பாடுகளை, நீதியை, பக்தியை, எனப் பல வகையான கருத்துக்களைச் சித்திரிக்கும் வகையில் அமைவதால் தமிழில் இலக்கிய வழக்குகள் உரு, கரு, இலக்கு, சூழல் போன்றவற்றை வெளிக்காட்டுமாறு அமைகின்றன. எவ்வாறு மொழியின் வட்டார, சமுதாய வழக்குகள் போன்றவற்றை அவை பயின்றுவரும் இடம், அவைகளைப் பயன்படுத்தும் மக்களின் சமுதாய, பண்பாட்டுச் சூழல்கள், அவைகளில் காணப்படும் மொழிக்கூறுகளான சொற்கள், தொடர்கள், இலக்கண அமைப்புகள் என்பவைகளில் தோன்றும் வேறுபாடுகள் போன்றவற்றின் வாயிலாக நிலைநாட்ட இயலுமோ அவ்வாறு இலக்கிய வழக்கையும் நிலைநாட்டலாம். இலக்கிய வழக்கு சான்றோர்களால் தமிழ்மக்களின் பண்பாட்டுச்சூழலை அழகுற எடுத்துரைக்கும் வண்ணம் யாப்பு அணி நயங்களோடு படைக்கப்படுகிறது. மரபு வழியில் இலக்கிய வழக்கு செய்யுள் வடிவத்துக்கு முன்னுரிமையும், இன்றைய நிலையில் உரைநடை வடிவத்திற்கு முன்னுரிமையும் வழங்குகின்ற வழக்காகும். இலக்கிய

வழக்கின் முக்கிய இலக்கே நடை உணர்வை எழுப்புவதும், சமுதாய நிகழ்வுகளைச் சித்திரிப்பதும், மன எழுச்சியை ஊட்டுவதுமாகும். கருத்தை அழகுற வெளியிடுதல், தகுந்த சொற்களைத் தேர்வு செய்து இணைத்தல், கருவையும் உருவையும் ஒருங்கிணைத்தல் போன்ற பல நடையியல் உத்திகளைப் பயன்படுத்தி படிப்போரிடம் நடை உணர்வு, எழுச்சி, கிளர்ச்சி, மகிழ்ச்சி, நெகிழ்ச்சி ஆகியனவற்றை எழுப்புகின்ற வகையில் படைக்கப்படும் இலக்கியங்கள் இலக்கிய வழக்கின் எடுத்துக்காட்டுகளாகின்றன. கோடுகளும் வளைவுகளும் கோலங்களுக்கு அடிப்படையானவை என்றாலும், அவைகளைத் தகுந்த வகையில் கட்டமைப்பதால் கோலங்கள் அழகோடு மிளிர்வதைப் போன்று, மொழிக் கூறுகளைக் கொண்டு ஒலிக்கோலம், சொற்கோலம், தொடர்கோலம் போடுவதால் இலக்கியத்தின் நடை வெளிப்படும்.

இலக்கியங்கள் அவைகளுக்கேயுரிய மொழிநடையைக் கொண்டு விளங்குகின்றன. மொழிநடையானது படைப்போரின், படிப்போரின் உணர்வால் நிலைநாட்டப்படுகிறது. மொழியைக் கையாளும் விதத்தால், உத்திகளால் நடை உணர்வு உணரப்படுகிறது. இலக்கிய நடைகுறித்த உணர்வு தற்சார்பானது என்று முன்பு கருதப்பட்டது. ஓர் இலக்கியப்படைப்பைப் படிக்கும்போது எத்தகைய கூறுகள் மன எழுச்சியையும், கிளர்ச்சியையும் ஊட்டுகின்றன எனக் கணிக்க இயலாத நிலையிலும் கூட, அது சிறந்த நடையுணர்வைத் தருவது எனக்கணித்தால் அதைத் தற்சார்பான உணர்வு எனலாம். ஆனால் இன்னின்ன கூறுகளாலும், பண்புகளாலும் இந்த இலக்கியப் படைப்பு இத்தகைய நடையைக் கொண்டது என ஓரளவுக்கு அறுதியிட முடிந்தால், அந்த உணர்வைப் பொதுச்சார்பு உணர்வு எனலாம். மொழியியல் நெறிமுறையிலும் அறிவியல் நெறிமுறையிலும் மொழி நடையையும் இலக்கிய நடையையும் வரையறை செய்ய முயலும் அறிஞர்கள், இலக்கிய நயத்தையும், நடை உணர்வையும் அளவிட்டு, அதற்குக் காரணமாக அமையும் கரு, உரு, கருவுக்கும் உருவுக்கும் இடையிலான இயைபு ஆகியனவற்றை வெளிக்கொணர முடியும் என வலியுறுத்துவர். இலக்கியப் படைப்பில் மொழியைக் கையாளும் விதத்தையும், படைப்போன் கையாளும் சில உத்திகளையும் அறுதியிட்டு விளக்குவதன் மூலம், படைப்பின் நடையை வெளிப்படையாக்கி விளக்க முடியும் என அறிவியல் நெறிமுறைகளைத் தழுவி இலக்கியத்தை ஆய்வு செய்பவர்கள் வலியுறுத்துகின்றனர்.

இலக்கியப் படைப்பின் நடைமேலோங்குவதற்கு ஒலிகள், சொற்கள், இலக்கண அமைப்புக்கள், கருத்துக்கள் போன்றவை அடிப்படையானவை என்றாலும் அவைகளை அடுக்கும் முறைகளில்

அமைப்பு அடிப்படையிலான நடை உணர்வுகள் எழுகின்றன எனலாம். அத்தகைய சில உத்திகள் பின்வருமாறு:

1. பிறமொழிக் கூறுகளைக் கலந்து மொழியைப் பயன்படுத்துதல்
2. தனித்தமிழ்க் கூறுகளை மட்டுமே பயன்படுத்துதல்
3. வட்டார வழக்குகளைப் பயன்படுத்துதல்
4. ஒலிகளை நயம்பட அடுக்கி, எதுகை-மோனை போன்ற பண்புகள் வெளிப்படும் வகையில் தொடர்களை அடுக்குதல்
5. சொற்களை இயல்பாகவும், அடுக்குத் தொடர்களாகவும், வழுகல் தொடர்களாகவும் அடுக்கிப் புதுமையான தொடர்களை அமைத்தல்
6. ஒரே இலக்கண வடிவங் கொண்ட தொடர்களை அடுக்கி ஒரு முகப் போக்கை ஏற்படுத்துதல்
7. தொடர்களை அந்தாதி வடிவத்தில் அடுக்குதல்
8. கருத்துக்களை நயம்பட அடுக்குதல்-சமநிலை, எதிர்நிலை, அடங்குநிலை, உவமைநிலை, உருவகநிலைக் கருத்துக்களைத் தேர்வு செய்து அடுக்குதல்

மேற்கண்ட பல உத்திகளுக்கான எடுத்துக்காட்டுகளையும், அத்தகைய உத்திகள் இணைந்த வகையில் வடிவமைக்கப்பட்ட இலக்கியப் படைப்புகளுக்கான எடுத்துக்காட்டுகளையும் தர இயலும். இங்கு ஒரு எடுத்துக்காட்டாகப் பாரதிதாசனின் பாடல் கொடுக்கப்படுகிறது.

> **தமிழுக்கும் அமுதென்று பேர்–அந்தத்**
> **தமிழ் இன்பத் தமிழ் எங்கள் உயிருக்கு நேர்**
> **தமிழுக்கு நிலவென்று பேர்–இன்பத்**
> **தமிழ் எங்கள் சமூகத்தின் விளைவுக்கு நீர்**
> **தமிழுக்கு மணம் என்று பேர்–இன்பத்**
> **தமிழ் எங்கள் வாழ்வுக்கு நிருமித்த ஊர்**
> **தமிழுக்கு மதுவென்று பேர்–அந்தத்**
> **தமிழ் எங்கள் உரிமைச் செம்பயிருக்கு வேர்**

இந்தப் பாடலின் ஒருமுகப்போக்கு, ஒரே வகையான தொடரைப் பயன்படுத்துவதன் வாயிலாக வெளிப்படுகிறது

(1. தமிழுக்கு(ம்) ---------- என்று பேர்,

அமுது
நிலவு
மணம்
மது

2. {அந்தத் / இன்பத்} தமிழ் எங்கள் ----------க்கு----------நேர்

உயிர் நீர்
சமூகத்தின் விளைவு நிருமித்த ஊர்
வாழ்வு வேர் )
உரிமைச்செம்பயிர்

ஒருமுகப்போக்குத் தொடரும், வேறுபட்ட சொற்தேர்வும் அமைப்பு வழியில் இப்பாடலின் நடை உயரக் காரணமாகின்றன. இவைகளை இப்பாடலின் அமைப்புக்கோலம் எனலாம். தமிழை, அமுதாக, நிலவாக, மணமாக, மதுவாக, உயிராக, நீராக, ஊராக, வேராக பாவித்துக் காட்டுவது இப்பாடலின் கருத்துச் செறிவைக் காட்டுவதோடு, பொருள் வழியில் நடை உயர்வுக்குக் காரணமாக அமைகிறது. உரிமையைப் பயிராகவும், சமூகத்தை நிலமாகவும் உருவகப்படுத்தியது கருத்து வழியில் நடை உயரக் காரணமாயமைகிறது. இவைகளை இப்பாடலின் பொருட்கோலம் எனலாம்.

பேர், நேர், நீர், ஊர், வேர் என்ற ஒலியடுக்கில் ஒற்றுமை கொண்ட சொற்களைத் தேர்வு செய்து அமைத்தது ஒலி வழியில் இப்பாடலின் நடையை ஏற்றுவதால், இத்தகைய ஒலித்தேர்வைப் பாடலின் ஒலிக்கோலம் எனலாம். மொத்தமாக, இப்பாடலின் அமைப்பு, கருத்து, ஒலி போன்ற கூறுகளும், தமிழின் பெருமையைச் சுட்டிக் காட்டுகின்ற இலக்கும் இப்பாடலைச் செம்மாந்த நடை கொண்ட பாடலாக அமைய வழிவகுக்கின்றன எனலாம்.

நடை என்ற தற்சார்பு உணர்வுக்கான காரணங்களை இலக்கியப் படைப்புக்களில் காணப்படும் மொழி அலகுகளிலும், அவைகளை அமைப்பாக்கம் செய்யும் உத்திகளிலும் நிலை பெறுகின்றன என விளக்கி நடை உணர்வை வெளிப்படையானதாக, மொழிக்கூறுகளின் வெளிப்பாடாக நிறுவமுயலும் முயற்சி அறிவியல் பார்வையைக் காட்டுவதாக அமைகிறது. எனவே இலக்கியப் படைப்பை விளக்குகின்ற, திறனாய்வு செய்கின்ற முறையையும் அறிவியல் கண்ணோட்டத்தில் நிறுவலாம் என்பது தெளிவாகிறது.

## அறிவியல் வழக்கு

வழங்கி வருவது வழக்கு எனப்படும். ஒரு வட்டாரத்திலோ, சமுதாயத்திலோ, துறையிலோ வழக்கமாகப் பயன்பட்டு வருகின்ற வேறுபட்ட மொழி வடிவத்தை மொழி வழக்கு என்பர். மொழி வடிவம் வேறுபட்டுத் தோன்றுவதற்கு, மொழி அலகுகளின் ஒலிப்பு முறைகள், சொற்திரிபு, சொல்லாக்கம், தொடராக்கம் போன்றவைகளில் ஏற்படும் வேறுபாடும், வேறுபாட்டின் அளவையும் காரணமாயமைகின்றன. குமரி மாவட்டத் தமிழ் பிற வட்டார

வழக்குகளிலிருந்து வேறுபடுகிறது. 'ழ', 'ள' என்ற ஒலிகள் 'ள' எனவும், 'ர', 'ற' என்ற ஒலிகள் வேறுபடுத்தப்பட்ட வகையிலும் ஒலிக்கப்படுகின்றன. 'சொல்கிறான்' என்பதைச் 'சொல்லுகான்' எனவும், 'உன்' என்பதை 'ஓம்' எனவும், உனக்கு என்பதை 'ஒனக்கெ' எனவும் ஒலிக்கும் முறை உள்ளது. இரட்டை, சமுட்டு, நுப்பது, ஈச்செ போன்ற சொற்கள் பயன்படுத்தப்படுகின்றன. இத்தகைய மொழிக்கூறுகளின் வேறுபாடு, வேறுபாட்டின் அளவு என்பன குமரித் தமிழைப் பிற தமிழ் வழக்குகளிலிருந்து வேறுபடுத்திப் பார்க்க உதவுகின்றன.

அறிவியல் துறையில் வழக்கமாகப் பயன்படுத்தப்படுகின்ற மொழி வடிவத்தை அறிவியல் வழக்கு எனலாம். அறிவியல் வழக்கை, அதில் வெளிப்படும் எழுத்துக்கள், எழுதும்முறை, சொல்வகைகள், தொடர் வகைகள், உரைக்கோவை வடிவங்கள், கருத்துக்கள், இலக்குகள், துறைகள் ஆகியனவற்றில் தோன்றும் வேறுபாடுகளுக்கு ஏற்ப வேறுபடுத்தி விளக்கலாம்.

அறிவியல்துறை சார்ந்த செய்திகளையும், உலகளாவிய நிலையில் உருவாகும் அறிவியல் கருத்துக்களையும் பொதுமைப்படுத்தி, மனப்பாங்குகளுக்கு அப்பால் நின்று விளக்கப் பயன்படுகின்ற வழக்கை அறிவியல் மொழி வழக்கு எனலாம். ஆகவே, அதில் கலைச்சொற்கள், குறியீடுகள், சமன்பாடுகள் போன்றவை தோன்றுகின்றன. தமிழின் அறிவியல் வழக்கை நோக்கும்போது, அதில் சொற்களின் எழுத்து வடிவத்தை எழுதும் முறையில் வேறுபாடு உள்ளது எனவும், இது தமிழ் மரபு வழியில் எழுதும் முறையிலிருந்து வேறுபடுகிறது எனவும் விளக்கப்படுகின்றன. தமிழில் சில மெய்களும், மெய்ம்மயக்கங்களும் மொழிமுதலிலும், ஈற்றிலும் வருவதில்லை. ஆனால் இத்தகைய மெய், மெய்ம்மயக்கங்களின் வருகை அறிவியல் தமிழ் வழக்கில் காணப்படுகின்றன. 'சல்பேட்', ப்ரோட்டான், டெல்லூரியம், டெட்டனஸ் போன்ற சொற்கள் மெய்யொலியின் வருகையை மொழி முதலில் காட்டுகின்றன.

அறிவியல் வழக்கில் பல கலைச்சொற்கள் காணப்படுகின்றன. இவை பெரும்பாலும் பிறமொழி அறிவியற்சொற்களை ஒலிபெயர்ப்பு, மொழிபெயர்ப்பு செய்வதன் வாயிலாகத் தமிழுக்கு வருகின்றன. பிற மொழிச் சொற்களையும் தமிழ்ச் சொற்களையும் இணைத்துப் பயன்படுத்துவதன் வாயிலாகவும் (இரு-கார்பனேட்), தமிழின் சொல்லாக்க முறைகளைப் பயன்படுத்தி அறிவியல் கலைச் சொல்லுக்கு நிகரான சொற்களைப் படைப்பதன் வாயிலாகவும் (Telephone = தொலைபேசி, Television = தொலைக்காட்சி, disc = குறுந்தகடு) கலைச்சொற்கள் தமிழுக்கு வருகின்றன.

வெவ்வேறு அறிஞர்கள் கலைச்சொற்களை உருவாக்கும் பணியில் ஈடுபடுவதால் அவர்களின் விருப்பு வெறுப்புக்கு ஏற்பப் பலவகையான கலைச்சொற்கள் உருவாக்கப்பட்டு, அதன் காரணமாக ஒரே பொருளைக் குறிக்கும் வகையில் பல கலைச்சொற்கள் வழக்கத்தில் வருகின்ற நிலையைக் காணலாம் (Oxygen=ஆக்சிஜன், பிராணவாயு, உயிர்வளி). இத்தகைய நிலையில் கலைச் சொற்களைத் தரப்படுத்தும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. இதனால் அறிவியலை ஒழுங்காகப் பயிற்றுவதற்கும், மயக்கமற்ற வகையில் அறிவியல் கலைச்சொற்களை உருவாக்குவதற்கும், பாடநூற்களை எழுதுவதற்கும் வழி பிறக்கும் எனக் கருதப்படுகிறது. ஆகவே அறிவியல் தமிழ் வழக்கு கலைச்சொல்லாக்கம், தரப்படுத்தல் ஆகியவை நிகழும் களமாக அமைகிறது. அறிவியல் கலைச்சொற்களின் உருவாக்கத்தையும், தரப்படுத்துவதையும் நிகழ்த்தத் தேவையான வழிமுறைகள் அறிவியல் வழியில் வெளியிடப்படுகின்ற நிலையையும் நாம் காண்கிறோம்.

அறிவியல் தமிழ் வழக்கு அதற்கென அமைந்த தொடரமைப்புக்களைப் பயன்படுத்துவதையும் காணலாம். குறிப்பாக நீண்ட பெயர்த்தொடர்கள், செயப்பாட்டுவினை வாக்கியங்கள், தனி நபர்களைச் சுட்டாத வகையிலான தொடர்கள், (குறிப்பாக, 'நான், அவன்' போன்ற பதிலிகளை எழுவாயாகக் கொண்ட தொடர்கள் அதிகமாகப் பயன்படுத்தப்படுவதில்லை) ஆகியன பெரும்பாலும் பயன்படுத்தப்படுகின்றன. இதற்கான காரணம் உள்ளது. பொதுவான உலகியல் உண்மைகளை நிலைநாட்டி வெளியிடும் தன்மையிலிருப்பதால் மாந்தரைக் குறிக்கும் தொடர் வகைகள் அறிவியல் வழக்கில் அதிகம் தோன்றுவதில்லை.

அறிவியல் வழக்கில் அங்கமாகும் உரைக்கோவைகளும் சிறப்புப் பண்புகளைக் கொண்டவை. பொதுவாக, உரைக்கோவைகளை, தொடர்களின் தொடர்ச்சியைக் கொண்ட வடிவத்தையும், சில கருத்துக்களை வெளியிடும் 'கரு அமைப்பையும்', சில இலக்குகளை வெளிக்காட்டும் தன்மையையும், சில சூழல்களில் வெளிப்படும் தன்மையையும் காட்டுபவை எனலாம். சூழ்நிலை, இலக்கு, கருத்து போன்றவற்றை வெளிப்படுத்தும் வண்ணம் தொடர்களை அடுக்கிப் பெறுகின்ற கட்டமைப்பைக் கொண்ட அலகையே உரைக்கோவை எனலாம். சூழ்நிலைகளை மையமாகக் கொண்டு, உரைக்கோவைகளை இயற்பியல், வேதியியல், மருத்துவவியல், தொழில்நுட்பவியல், உயிரியல், தாவரவியல், பயிரியல் போன்ற துறைகளைச் சார்ந்தவை என வகைப்படுத்தி விளக்கலாம். பொதுவாக அறிவியல் செய்திகளை, குறிப்பாக ஆய்வுப் பொருள், ஆய்வுமுறை, ஆய்வு உபகரணங்கள், ஆய்வு முடிவு, முந்தைய

ஆய்வுகள் போன்றவற்றைத் தருக்க அடிப்படையில் விளக்குவதே அறிவியல் வழக்கின் இலக்கு என்பர். ஆனால் அறிவியல் உரைக்கோவைகளை ஆராய்ந்த மொழியியலறிஞர்கள் அவை, வரையறுத்தல், விளக்குதல், வகைப்படுத்துதல், எடுத்துக்காட்டு தருதல், அறிவியல் வரலாற்றைக் கூறுதல், காட்சிவடிவத்தில் கருத்தை வெளியிடுதல் போன்ற சில இலக்குகளே பெருமளவில் காட்டுகின்றன என விளக்குவர்.

அமைப்பு அடிப்படையில், அறிவியல் உரைக்கோவையின் தொடர்கள் காலம், இடம், தருக்கம் என்ற பண்புகளின் அடிப்படையில் அடுக்கப்பட்டுப் பத்திகளும், உரைக்கோவைகளும் வடிவமைக்கப்படுகின்றன என மொழியியலார் விளக்குவர்.

அறிவியல் வழக்கு என்பதைச் சூழல், இலக்கு, கருத்து, உரைக்கோவை, வடிவம், தொடர்கள், சொற்கள் போன்றவற்றில் காணப்படும் வேறுபாடு, வேறுபாட்டின் அளவு என்பவைகளின் அடிப்படையில் நிறுவலாம். தமிழ்மொழியில், அறிவியல் வழக்கு சாதாரண வழக்குகளிலிருந்து எழுத்து, சொல், தொடர் என்பவைகளில் வேறுபடுவதால் அதை நான்காம் வகைத் தமிழ் என அழைப்பதுண்டு. மொழியை அறிவியல் கண்ணோட்டத்தில் பார்ப்பது ஒரு புறம் இருக்க, அறிவியலையே விளக்குவதற்கான வழக்குகள் மொழியிலேயே இருப்பதை விளக்கும் போது, மொழிக்கும் அறிவியலுக்கும் உள்ள உறவு வெளிப்படுகிறது. பிற துறை வழக்குகளைப் போன்று அறிவியல் வழக்கை வரையறை செய்யும் வகையில், சொல்லாக்கம், தொடராக்கம், உரைக்கோவையாக்கம் போன்றவற்றில் காணப்படும் வேறுபாடுகளைச் சுட்டிக்காட்டி அந்த வழக்கை நிலைநாட்டும் முயற்சி அறிவியல் நெறியில் அமைந்ததாக உள்ளது. இதில் மொழியியல் சிந்தனைகள் முக்கியப் பங்கை வகிக்கின்றன.

# 5. முடிவுரை

மறைந்து கிடப்பவைகளைச் சோதனை வாயிலாகவும், எல்லோருக்கும் புலப்படும் வண்ணமும் வெளிப்படையாக்கி விளக்குவதே அறிவியலின் கடனாகும். மொழியின் கூறுகள், அவைகளின் அமைப்பு, பொருண்மை, பயன்பாடு, மாற்றம், மொழியின் வழக்கு வகைகள் ஆகியனவற்றை அறிவியல் நெறிமுறைகளைத் தழுவி விளக்க முற்படுகின்ற துறையை மொழியியல் என்கிறோம். இதனால் மொழியியல் துறையில் மொழிக்கு வழங்கப்படும் விளக்கம் மரபு வழியில் தோன்றிய மொழி மற்றும் இலக்கண விளக்கங்களிலிருந்து வேறுபட்டு, அவைகளை மறு பார்வை செய்த, அவைகளில் வெளிவராத புதிய செய்திகளை வெளியிடும் பண்பைக் கொண்டதாகிறது; மொழியை ஆழமாகவும், அகலமாகவும் தற்சார்பின்றி, பொதுச்சார்பு வகையில் விளக்கும் தன்மையைப் பெறுகிறது.

இத்தகைய மொழி விளக்கத்தில் பேச்சுவடிவிலும், எழுத்து வடிவிலும் நிலைபெறும் மொழி வழக்குகளும், வடிவங்களும் தரவாக அமையலாம்; மனத்தில், கிடக்கை வடிவத்தில் உறையும் மொழிவடிவமும் தரவாக அமையலாம்; மொழிக்கூறுகளைப் பகுத்தாய்தல், தொகுத்தாய்தல், மொழிக்கூறுகளின் அமைப்பையும், உறவையும் ஆராய்தல் என்பவை ஆய்வு வகைகளாகின்றன. மொழியின் கூறுகளையும் பண்புகளையும் காணுதல், அவைகளை வரையறை செய்து வகைப்படுத்துதல், அவைகளின் தொடர்நிலை, தொகுநிலை உறவுகளைக் கண்டு விளக்குதல், இவைகளுக்கான வழிமுறைகளை வகுத்தல் ஆகியன ஆய்வு நெறிமுறைகளாகின்றன. குறிப்பாக, தருக்கம், உளவியல், புள்ளியியல் சார்ந்த மூன்று வழிமுறைகளின் வாயிலாக மொழிக்கூறுகளும், அவைகளின்

பண்புகளும் இனங்காணப்பட்டு, வேறுபடுத்தப்பட்டு விளக்கப்படுகின்றன.

மொழியின் அமைப்பைக் குறித்த விளக்கத்தில் பலவகைக் கூறுகளும், அவைகளால் உருவாகும் அமைப்புகளும் விளக்கப்பட்டன. ஒலி, ஒலியன், உருபன், சொல், தொடர், உரைக்கோவை என்ற கூறுகளின் அமைப்பும், வகைகளும் விளக்கப்பட்டன. மேலும் இத்தகைய கூறுகளைக் கண்டறிவதற்கான வழிமுறைகள் பொதுச்சார்பு நிலையில் வெளியிடப்பட்டு, கூறுகள் நிலைநாட்டப்பட்டன.

பிறப்பு அடிப்படையிலும், பரவல் தன்மையினடிப் படையிலும் 'ஒலி'யின் பண்புகள் இனங்காணப்பட்டன. அவைகளை நிலைநாட்டக் கருவிகள் பயன்படுத்தப்பட்டன. உயிர், மெய் என ஒலிகள் வகைப்படுத்தப்பட்டன; ஒலியின் பண்புகளை pitch, amplitude, frequency போன்றவற்றைக் காணக்கருவிகள் உதவின. இவ்வாறு ஒலியின் பண்புகள் வெளிப்படையாக வெளியிடப்பட்டன. மொழியின் முக்கிய ஒலிகளான 'ஒலியன்கள்' ஒலிப்பெயர்ச்சி, சொற்பொருள் வேறுபடுதல் என்ற சோதனை வழிமுறை வாயிலாக நிலைநாட்டப்பட்டன. மொழியில் தோன்றும் 'உருபன்கள்' என்ற மொழிக் கூறுகளை ஒலி, பொருண்மை என்பவைகளினடிப்படையில் பிரித்து நிலைநாட்டும் வழிமுறைகள் வழங்கப்பெற்றன. 'சொற்களையும்' அவைகளின் இலக்கணப் பண்புகளையும் நிலைநாட்ட அவை சார்ந்துவரும் பிறகூறுகளையும், அவை தோன்றும் அமைப்புச் சூழலையும் உற்று நோக்கும் வழிமுறைகள் விளக்கப்பட்டன. 'தொடர்களின்' ஒற்றுமை, வேற்றுமைகளைக் காணப் பெயர்ச்சி சோதனைகள் பயன்படுத்தப்பட்ட விதம் விளக்கப்பட்டது. தொடரில் தோன்றும் சொற்களுக்கிடையிலான உறவு, தொடர் உருவாக்கம், தொடரின் மாறுபட்ட வடிவங்களைப் பெறுதல் போன்றவைகளை நிலைநாட்டுவதில் விதிகளின் பங்கும், அவ்விதிகள் குறிப்பாக வெளிப்படுத்தும் கட்டுப்பாடுகளும் விளக்கப்பட்டன. மொழியின் உரைக்கோவைகளின் பண்புகள் ஆராயப்பட்டு அவைகளில் சூழல்சார்பு, இலக்கு, கருத்து, வடிவமைப்பு முக்கியமானவை எனக் கண்டுபிடிக்கப்பட்டது. உரைக்கோவையின் அமைப்பாக்கத்தில் தொடர்களும், தொடர்களை இணைக்கும் உத்திகளும் முக்கியமானவை எனக் கருதப்பட்டுத்

தொடர்களை அடுக்கும் முறையில் உரைக்கோவையின் வடிவம் மாறும் என விளக்கப்பட்டது. கருத்துக்கள், இலக்குகள் போன்றவைகளில் காணப்படும் வேறுபாடு, இவைகளை அடுக்கும் முறை என்பனவற்றால் உரைக்கோவை வேறுபடுகிறது என விளக்கப்பட்டது. ஆக, எந்த வகையான மொழியலகானாலும் அவைகளை வேறுபடுத்தி இனங்காண்பதற்கான வழிமுறைகள் வகுக்கப்பட்டன.

மொழியில் ஏற்படும் மாற்றங்களை விளக்குதல், தொடர்பான மொழிகளை உற்றுநோக்கி அவைகளின் மூல மொழியை மீட்டுருவாக்கம் செய்தல் போன்றவைகளுக்கு ஒப்பீட்டு வழிமுறைகள் பயன்படுகின்றன என்ற விளக்கமும் மொழியியலாரால் வழங்கப்பட்டது. மொழிக்கூறுகளின் பொருள் வகைகளையும், பொருளடிப்படையிலான உறவுகளையும் விளக்குவதற்குப் பயன்படும் தருக்க முறைகளும் விளக்கப்பட்டன. ஒரு பொருளைக் குறிக்கும் பல சொற்கள் இருவழிக்குறிப்புணர்த்தல் என்ற அடிப்படையில் நிலை நாட்டப்படுகின்றன. மொழியில் காணப்படும் வழக்குகளை வட்டார வழக்கு, சமுதாய வழக்கு, துறை வழக்கு என வரையறை செய்து, உரிய சொற்கள், தொடர்கள், உரைக்கோவை, அவைகளை அமைப்பாக்கம் செய்யும் உத்திகள் போன்றவைகளின் வேறுபாட்டையும், வேறுபாட்டின் அளவையும் தருக்கம் மற்றும் புள்ளியியல் அடிப்படையில் நிலைநாட்டும் வழிமுறைகளையும் மொழியியல் விளக்குகிறது.

மொழியியலார் தருக்க அடிப்படையில் நிலைநாட்டும் மொழியின் அலகுகளையும் பண்புகளையும் உளவியல் உண்மை என நிலைநாட்ட உளவியலார் முயன்றுவருகின்றனர். பலவகையான சோதனைகளை வடிவமைத்து மனதில் கிடக்கை வடிவத்தில் உறையும் மொழியின் பண்புகளைத் தெரிநிலைப் பண்புகளாக வெளியிட உளவியலார் முயன்றுவருகின்றனர். இத்தகைய விளக்கங்கள் அறிவியல் சார்ந்த மொழி விளக்கங்களாக மாறுகின்றன. மேற்கூறிய மொழியின் அமைப்பு, பொருண்மை, மாற்றம், வேறுபாடு போன்றவற்றை யாவரும் புரிந்து கொள்ளும் வண்ணம், தாமே அதே வகை வழிமுறைகளைப் பின்பற்றி மொழிக்கூறுகளின் பண்புகளைக் காணும் வண்ணம் வழிமுறைகள் வெளியிடப்படுவதால், மொழிவிளக்கம் அறிவியல்சார்ந்த விளக்கமாக அமைகிறது.

முடிவாக, மொழியையும் மொழியலகுகளையும், அவைகளின் பண்புகளையும் தரவுகளை அடிப்படையாகக் கொண்ட ஆய்வு நெறிமுறைகளின் அடிப்படையில் இனங்கண்டு, வகைப்படுத்தி விளக்குவதற்காக தருக்கம், உளவியல், புள்ளியல் நெறிமுறைகளைப் பயன்படுத்தி, தற்சார்பு நிலையிலன்றிப் பொதுச்சார்பு நிலையில் விளக்கும் தன்மையிலிருப்பதால், மொழியியல் சார்ந்த மொழி விளக்கங்களும், மொழிக் கோட்பாடுகளும் அறிவியல் அடிப்படையிலானவை என ஆணித்தரமாகக் கூறலாம்.

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
### சென்னை - 600 113
## அண்மை வெளியீடுகள்

| | ரூ.பை. |
|---|---|
| உலகத் தமிழிலக்கிய வரலாறு கி.பி. 901 - கி.பி. 1300 | 100.00 |
| தொல். பொருள். (அகம்-புறம்)-ஆங்கில மொழிபெயர்ப்பு | 50.00 |
| வேதாத்திரியத்தில் சமூகவியல் இறையியல் சிந்தனைகள் | 130.00 |
| உலகத் தமிழிலக்கிய வரலாறு கி.பி. 1851 - 2000 | 180.00 |
| இதழாளர் பெரியார் | 160.00 |
| மகாவித்துவான் ரா. ராகவையங்கார் | 30.00 |
| தமிழக வானவியல் சிந்தனைகள் | 35.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள்-நாட்டுப்புறவியல்,கலை,பண்பாடு | 90.00 |
| தொல்காப்பியம்-எழுத்ததிகாரம் மூலமும் நச்சினார்க்கினியர் உரையும் | 200.00 |
| வாழிய செந்தமிழ் | 140.00 |
| பேராசிரியர் அ.மு.பரமசிவானந்தம் | 40.00 |
| தமிழக எல்லைப் போராட்டங்கள் | 60.00 |
| திருப்புகழ் ஒளிநெறி பகுதி - I | 90.00 |
| திருப்புகழ் ஒளிநெறி பகுதி - II | 90.00 |
| திருப்புகழ் ஒளிநெறி பகுதி - III | 80.00 |
| தொல்காப்பியம்-சொல்லதிகார மூலமும் சேனாவரையருரையும் | 200.00 |
| தொல்காப்பியம்-பொருளதிகார மூலமும் நச்சினார்க்கினியர் உரையும் | 325.00 |
| தொல்காப்பியம் - பொருளதிகார மூலமும் பேராசிரியர் உரையும் | 300.00 |
| Economic Heritage of the Tamils | 115.00 |
| மலேசியத் தமிழரும் தமிழும் | 100.00 |
| மொழி, சமய, சமுதாயத் தளங்களில் பாவாணர் பங்களிப்பு | 50.00 |
| தமிழ்ப் புனைகதைகளில் உளவியல் | 35.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் - தொல்லியல், வரலாறு, சமூகவியல் | 100.00 |
| கவிதையியல் | 50.00 |
| பண்பாட்டு நோக்கில் திருமுறைகள் | 30.00 |
| கதைப் பாடல்களில் கட்டுப்பாட்டு மீறல்கள் | 95.00 |
| Bibliography on Translations | 175.00 |
| சங்க இலக்கிய ஆய்வு தெபொமீயும் மேலை அறிஞரும் | 60.00 |
| அறந்தாங்கித் தொண்டைமான்கள் | 45.00 |
| திராவிட மொழி இலக்கியங்கள் | 200.00 |
| தமிழில் தத்துவ நூல்கள் | 40.00 |
| வா.கீ.ச. கலாநிதி கி.வா.ஜகந்நாதன் | 60.00 |
| நாசுதிராதிக்-ஞாலமுதன்மொழிஆய்வுகளுக்குப்பாவாணர் தரும் ஒளி | 35.00 |
| சி.வை. தாமோதரம்பிள்ளை | 40.00 |
| தமிழ்ச்சொற் பிறப்பாராய்ச்சி | 45.00 |
| மொழி பெயர்ப்பியல் | 45.00 |
| தமிழில் தத்துவ நூல்கள் | 40.00 |
| ஆறுமுக நாவலர் | 60.00 |
| சி.வை. தாமோதரம்பிள்ளை | 40.00 |

---

**617 அறிவியல் நோக்கில் மொழி** **45.00**